# உலக மதங்களின் வரலாறு

தேவகோட்டை பி. நாராயணன்

புத்தகப் பூங்கா
இராயட்பேட்டை : சென்னை—600014.

# பொருளடக்கம்

# உலக மதங்களின் வரலாறு

## "இந்து மதம்"

தனி ஒரு மனிதரின் பெயரால் குறிப்பிடாமலும், எந்த ஒரு கடவுளின் பெயரால் குறிப்பிடாமலும், மக்கள் சமுதாயத்தின் பெயரால் குறிப்பிடப்படும் பெருமை பெற்றது இந்து மதம். இந்துக்கள் என்ற சொல்லுக்கு சிந்து நதிக்கரைப் பிரதேசத்தில் வாழும் மக்கள் என்று பொருள். ஈரானியர்கள் 'சிந்து' என்ற சொல்லை 'இந்து' என்று கூறினர்கள். அந்த மக்கள் வாழ்க்கை முறையே இந்து மதம் என்ருயிறறு. "என்றும் நிரந்தரமானது" என்ற கருத்தில் சநாதன மதம் என்றும், வேதத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதால் வைதீக மதம் என்றும், பிரமாணங்கள் பின்பற்றுவதால் பிராமண மதம் என்றும், உபநிடதக் கருத்துக்களைக் கைக்கொண்டு நடப்பதால் உபநிடத மதம் அல்லது வேதாந்த மதம் என்றும் இதைக் கூறுகின்றனர்.

இந்து மதத்தில் பிடிவாதத்திற்கே இடம் கிடையாது. அதுபோல கருத்து அடிமைக்கும் இடம் இல்லை. அடிப் படைச் சித்தாந்தங்களை அறிந்த பெரியார்கள் உண்மை யாக வாழ்ந்து அதனால் மாறுதல்கள் தேவை என்று கண் டால் அவை இந்து மதத்தில் ஏற்றுக் கொள்ளப்படும். எனவே இது வாழும் மதம். அப்படி அவ்வப்போது ஏற்பட்ட மாறுதல்கள் சேர்க்கைகள் காரணமாக இந்து மதம் வளர்ந்து வருகிறது. இந்து மதம் வளர்ந்து வருகிறது என்று கூறும்போது மதத்தின் அடிப்படைத் தத்துவமும் பயனும் மாறவில்லை. ஆனால் வழிமுறைகள், கொள்கைகள், தேடும் இடங்கள், கண்டு கொள்ளும் முறை கள் விசாலமடைந்தன, என்று பொருளாகும்.

இந்து மதம் மதமாற்றத்தில் நம்பிக்கை கொள்வதில்லை. எந்த மதமும் உண்மையாக வாழ்ந்தால் நன்மையைத் தர முடியும் என்று அது நம்புகிறது:

இந்து மதத்திற்கு தனி ஒரு ஸ்தாபகர் கிடையாது. குறைந்தது ஐயாயிரம் ஆண்டுகளாகத் தோற்றத்துக்குள் வந்து வளர்ந்து நிறைந்து வரும் புனிதப் புதுமைக் கட்டடம் அது. அதில் ஒரு சிறப்பு என்னவென்றால் எந்த ஒரு பகுதியும் அகற்றி விடப்படவில்லை. புதுப்பித்த இடங் கள் உண்டு. வேதகாலம் தான் இந்து மதத்தின் தொடக்க காலம் என்று எண்ணிக் கொண்டிருந்தனர். ஆனால் அதற்கு முன்பும் இந்து சமயம் பரந்து நிற்கிறது. இந்து சமயத்தின் தொடக்கம் மனிதன் 'நாகரீகம்' அடையத் தொடங்கிய போதே நிகழ்ந்த ஒன்று. தற்சமயம் நாகரீகமும் சமயமும் ஊடிக் கொண்டு அது ஒரு புறம் இது ஒரு புறமாக ஒதுங்கி நிற்பது போலவும் தோன்றினும் சமயம் நாகரீகத்தின் அடிப்படையாகவும் நாகரீகம் சமயத்தின் உயிராகவும், உடலும் உயிரும் போல உடலுக்கு உயிர் ஆதாரமா, உயிரை உடல் தாங்குகிறதா என்று முடிவு செய்ய முடியாதபடி பின்னிக் கிடக்குமாறு போல சமயமும் நாகரீ

கமும் இணைந்து கிடக்கின்றன. சிந்து நதிக்கரை நாகரீகத்திற்குள் இந்து சமயத்தின் கரு அமைந்திருப்பதை ஆராய்ச்சியாளர்கள் கண்டு சொல்லுகிறார்கள். அங்கே முதன் முதலில் பத்தொன்பதாவது நூற்றாண்டிலேயே மூல்டான் லாகூருக்கு இடையே ரயில் பாதை போட பூமியை வெட்டிய போதே கண்டு பிடிக்கப்பட்டு ஆனால் சுமார் எண்பது ஆண்டுகளுக்குப் பிறகு ஓரளவு தெரிந்த உருவம் காணக் கிடைத்த மொகஞ்சதரோ, ஹரப்பாவின் பழைய நாகரீகச் சின்னங்கள். அந்த நாகரீகம் சமயச் சார்புள்ள நாகரீகமே என்று காட்டிக் கொடுக்கின்றன. யோகிகளின் உருவங்கள், பசுபதி சிவனின் சிற்பங்கள், மரம் பாம்பு இவற்றைப் பூசைப் பொருளாக காட்டுகின்ற அடையாளங்கள், தேவி சக்தி வழிபாட்டின் சின்னங்கள் போன்றவை காணப்படுகின்றன. அவை இந்து மதத்தின் அங்கமான சைவ வழிபாட்டு முறைகளின் ஆதி உருவங்களாக இருக்க வேண்டும் என்று எண்ணச் செய்கின்றன. அதே போல தாம்பூலம், தேங்காய் இவற்றின் உபயோகம் பூஜையின் போது சங்கு 'ஊதும் வழக்கம் நெற்றியில் குங்குமம் இட்டுக் கொள்ளும் வழக்கம்' ஆகியன அந்த நாகரீகத்திலிருந்தே இந்து சமயத்துக்கு கிடைத்த வழக்கங்களாகும் என்று கருத இடம் இருக்கிறது. அதேபோல கல்லுக்கு குங்குமம் பூசி, சாந்து இட்டு, மஞ்சள் அப்பி, பூச்சாத்தி புகை போட்டு வணங்கும் வழக்கம் வேத காலத்திற்கு முன்பிருந்தே வந்த வழக்கமாகும்.

இந்து சமய நூல்கள் இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவை சுருதி, ஸ்மிருதி எனப் படும். 'சுருதி' என்ற சொல்லுக்கு 'கேட்டது' என்று பொருள். முதலில் இரு அடிகளால் 'கேட்கப்பட்டவை' பிறகு 'கேட்டுக் கொண்டே பரப்பப்பட்டவை; காப்பாற்றப் பட்டவை. இவ்விதம் பரம்பரை பரம்பரையாக வந்த மந்திரங்கள் சிதைந்தும் சிதறியும் கிடந்த காலத்தில் ஸ்ரீ விநாயகர் அவற்றைத் தொகுத்து சேர்த்து வகைப்படுத்தி உலகுக்கு

அளித்தார். அவருக்கு அதனால் வேத விநாயகர் என்ற பெயரும் ஏற்பட்டது. வேதம் என்ற சொல்லுக்கு அறிதல், அறியப்பட்டது, அறிய வேண்டியது என்ற பொருள்கள் உண்டு. எனவே வேதங்கள் மனிதன் சிறந்து அறிந்த சிறக்க அறிய வேண்டிய பொருள்களின் உணர்வு பூர்வமான ஞானத்தைக் கூறும். மனிதன் புலனடக்கம், பெரும் முயற்சி, தவம் இவற்றின் மூலம், உலகினின்றும் தன்னுடைய கீழ்த் தன்மையிலிருந்தும் தனித்து உயர்ந்து சூச்சும உயர்வு மயமாகி நிற்கும்போது தெய்வத்துடன் உறவாடுகிறான்; அச்சமயம் பெறப்பட்ட இன்றும் பெறப்பட வேண்டிய அறிவுகள் இவை. வேதங்களில் இவ்வகைக் கருத்துக்களைத் தெரிவித்து நிற்கும் சொற்றொடர்களுக்கு மந்திரங்கள் என்று பெயர்.

நான்கு வேதங்கள்:—வேத வியாசரால் தொகுக்கப் பட்டன நான்கு வேதங்கள். அவை முறையே (இ)ருக்கு, யஜூர், சாமம், அதர்வணம் என்பர். (இ)ருக்கு வேதத்தில் 16552 மந்திரங்கள் உள்ளன. யஜூர் வேதத்தில் 2086–ம் சாம வேதத்தில் 1875ம், அதர்வண வேதத்தில் 5987ம் உள்ளன. இருக்கு வேதம் மிகப் பழமையான மந்திரங்களைக் கொண்டது. இது கிருஷ்ண த்வைபாயனர் என்ற வேத வியாசரால் பலருக்கு சொல்லித் தரப்பட்டது. யஜூர் வேதம் வைசம் பாயனருக்கும் சாம வேதம் ஜைமினிக்கும் அதர்வண வேதம் சுமந்திரருக்கும் பயிற்றுவிக்கப்பட்டு காக்கப்பட்டது என்று கூறப்படுகிறது. (இ)ருக்கு வேதம் துதிகளின் தொகுதி. யஜூர் வேதத்தில் வேள்வி போன்ற சடங்குகளுக்குரிய விதிகள், முறைகள் அவற்றின் பயன்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

சாம வேதம் இசையுடன் கூடியது. அதர்வண வேதம் குறிப்பிட்ட முறைகளில் வினைகள் புரிந்து ஆற்றல் கொண்ட மந்திரங்கள் மூலம் கெட்ட தேவதைகளைக் கொண்டு கேடுகளை விளைவிக்கும் பிரயோகங்கள் பலவற்றைக் கொண்டது.

ஒவ்வொரு வேதமும் மூன்று முக்யப் பகுதிகளாகப் பிரிக்கலாம். முதல் பகுதியை சம்ஹிதைகள் என்பர். அவை மந்திரப் பகுதிகள். மனிதன் தொடக்க காலத்தில் இயற்கையின் பலவகை ஆற்றல்கள் மூலம் அவற்றுள் ஊடுருவி நிற்கும் அந்தப் பேராற்றலை வியந்தும், போற்றியும் உதவ அழைக்கும் இதய வெளியீடுகள். நுண்ணிய ஆழமான கருத்துகளை உள்ளடக்கி பொருள் பொதிந்து நிற்கும் தொழில் செறிவு கொண்ட சொற்களால் ஆகிய அத்துதிகள் உள்ளங்களை கவர்பவை. பொறியின்பங்களில் உழலும் மனதை அவற்றினின்று உயர்த்தி சூக்கும தெய்வீக உணர்வு மயமாக ஆக்கும் ஆற்றல் படைத்தவை. இதன் இரண்டாம் பகுதியை பிரமாணங்கள் என்பர். அவை அனேகமாக சடங்குகள், வினைகள், வேள்விகள், போன்ற கருமங்களை விவரிப்பவை. மூன்றும்பகுதியில் முதல் பிரிவு அரணியங்கள் என்று சொல்லப்படுபவை. அதில் வினைகள் சடங்குகளின் பொருளும் விவரிக்கப் படுகின்றன.

உபநிடதங்கள்:—

இவை வேதங்களின் கடைசிப் பகுதியாகும். எனவே இவற்றை வேதாந்தம் என்றும் கூறுவார்கள், இவை எளிதில் புரியும் மொழியில் கூறிறல் கடவுள், பரமாத்மா, பரம்பொருள் என்றெல்லாம் குறிப்பிடப்படும் இந்த உலக அடிப்படைத் தத்துவத்தின் இலக்கணங்கள் பூராவற்றையும் எடுத்து இயம்புகின்றன. உபநிடதங்கள் ஆயிரக் கணக்கில் உள்ளன எனக் கூறுவார்கள். அவற்றுள் நூற்றி எட்டு மிக முக்கியமானவை. இவற்றில் கீழ்க்கண்ட 17 உபநிடதங்கள் மிக முக்யமானவையாகக் கருதப்படுகின்றன.

1. பிருஹதாரண்யகம் 2. சாந்தோக்யம் 3. ஐதரேயம் 4. தைத்தரீயம் 5. ஈசாவாஸ்யம் 6. கேனம் 7. கடம் 8. பிரசினம் 9. முண்டகம் 10. மாண்டுக்யம் 11. சுவேதா

சுவதாரா 12. கௌஷீதக. 13. மைத்ரீ 14. சுபலா 15. ஜாபாலா 16. பைங்களா 17. கைவல்யம். இவற்றுள் பதினொன்றைத் தேர்ந்தெடுத்து ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மத்வர் மூவரும் பாஷ்யம் எழுதியுள்ளனர்,

வரிசையாக மந்திரங்கள் கொண்ட பகுதி, பிரமாணப் பகுதி, உபநிஷதங்கள் கொண்ட பகுதி மூன்றையும் முறையே உபாஸன காண்டம், கரும காண்டம், ஞான காண்டம் என்பர். மந்திரங்கள் உபாசனைக்கும், பிரமாணங்கள் கருமத்திற்கும் (சமய வினைக்கும்) உபநிஷதங்கள் ஞானத்திற்கும் உரியவை.

**புராணங்கள் :—**புராணங்கள் என்றால் பழைமையானது என்று பொருள். இவற்றில் ஆண்டவனின் பிறப்பு, வளர்ப்பு, வியப்பூட்டும் லீலைகள் ஆகியவற்றை விவரிக்கின்றது. முழு முதற் கடவுளின் தனித் தனித் தோற்றங்களை அவற்றிற்குரிய பெயர்களுடன் எடுத்துக் கொண்டு தனித் தனியாக அந்த தெய்வத்தின் லீலைகளை, அதாவது விளையாட்டுக்களைக் கூறுவது புராணம். கீழ்கண்ட 18 புராணங்கள் சிறப்புப் பெற்றவை.

1. ஸ்ரீ விஷ்னு புராணம் 2. பாகவத புராணம் 3. பத்ம புராணம் 4. சிவ புராணம் 5. ஸ்கந்த புராணம் 6. லிங்க புராணம் 7, பிரம புராணம் 8. பிரமாண்ட புராணம் 9. கருட புராணம் 10. நாரத புராணம் 11. வராஹ புராணம் 12. பிரம வைவர்த புராணம் 13. வாமன புராணம் 14. மத்ஸ்ய புராணம் 15. பவிஷ்யத் புராணம் 16. அக்னி புராணம் 17, பத்ம புராணம் 18. மார்க் கண்ட புராணம்.

இதிகாசங்கள்:— இராமாயணம் மற்றும் மகாபாரதம் என்ற இரண்டே புராணங்களே இந்து சமயத்தில் உள்ளன. 'இதிகாசம்' என்றால் வரலாற்றுப் பெருநூல் என்று பொருள். ஸ்ரீ மகாபாரதத்தின் இடையேதான் இந்து

சமயத்தின் தத்துவக் கருவூலமான பகவத் கீதை அமைந் திருக்கிறது. இராமன் நாராயணனே என்றும் இராமாயணம் வேதமே என்றும் பாயிரம் கூறுகிறது.

தரும சாஸ்திரங்கள்:—யாக்ஞவல்கயர். பராசரர் மற்றும் மனு போன்றவர்கள் சமூகத்தில் மனிதன் ஆற்ற வேண்டிய கடமைகளை வகுத்துத் தந்திருக்கின்றனர். இவற்றின் ஆசிரியர்களை சூத்திரக்காரர்கள் என்றும் சொல்லுவர்.

ஸ்மிருதி:— 'ஸ்மிருதி' என்ற வடமொழிச் சொல்லுக்கு நினைவு என்று பொருள். ஒரு கருத்தை மனதில் எண்ணி அதற்குத் தகுந்தவாறு அதை ஒட்டி பேசப்படும் விளக்கம். எனவே சுருதிகளின் கருத்துக்களை மனதில் கொண்டு ஸ்மிருதிகள் எழுந்தன. தரும சாஸ்திரங்கள், இதிகாசங்கள், புராணங்கள், ஆகமங்கள் தரிசனங்கள் ஆகியவை ஸ்மிருதி களாகும். மனு, யாக்ஞவல்கயர், பராசரர் போன்ற பெரியோர்கள் இந்த நூல்களை இயற்றியுள்ளனர். திருவள்ளுவர் போன்றோரும் ஸ்மிருதிக் காரர்களே.

**ஆகமங்கள்:**—கடவுளின் திரு உருவ வழிபாட்டுக் குரிய வழிகளைக் கூறும் நூல்கள். ஆகமங்கள் நிகமங்கள் தந்திரங்கள் இம்மூன்றையுமே இவற்றுள் அடக்கி விடலாம். ஆகமங்கள் நிகமங்கள் விஷ்ணுவையோ, சிவனையோ லிங்க வடிவில் ஏற்று தாபனம், ஆவாஹனம், அர்ச்சனை, ஆராதனை, பூஜை நைவேத்யம் முதலியன செய்து மோட்சம் அடையும் வகையை விவரிக்கிறது.

இவையே விவரமாக ஆலயங்கள் அமைய வேண்டிய விதங்கள், அமைப்புக்கள், பூஜை செய்யப்பட வேண்டிய முறைகள் அவற்றிற்கான மந்திர தந்திரங்களை வகுத்துக் கூறுகின்றன. இவை சிவ பார்வதி சம்வாதமாக அமைந் துள்ளன. இவை சிவன் பேசுவதாக இருந்தால் நிகமங்கள்

என்றும் பார்வதி பேச்சாக இருந்தால் ஆகமங்கள் என்றும் பெயர் பெறும். பாஞ்சராத்திர ஆகமங்கள் விஷ்ணு வழி பாட்டையும் சைவ ஆகமங்கள் சிவ வழிபாட்டையும் விவரித்துக் கூறுவதாகச் சொல்லுவர். சிவன், விஷ்ணு, ஸ்கந்தன், கணபதி, சக்தி, சூரியன் இவர்களைக் கடவுளாகக் கொண்டு வழிபடும் ஆறு சமயங்களே சங்கரரால் ஒத்துக் கொண்டு நிலை நாட்டப்பட்டவை.

தந்திரங்கள்:—இச்சொல் மந்திரங்களுக்கு ஒத்து உடலின் உறுப்புக்கள் ஏற்றுக் கொள்ளும் கோலங்களையும் பொருட்களை வைக்க வேண்டிய இடங்கள் முறைகளைக் குறிக்கும். தந்திர சாஸ்திரங்கள் கூறும் சில யோக முறைகள் கிரியைகள் முதலியன பயங்கரமானவை. சரியாகப் பின் பற்றாவிட்டால் பயங்கரமான விளைவுகளை ஏற்படுத்தும். எனவே இவை அதிகமாக புழக்கத்தில் கிடையாது.

ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமானுஜர் மற்றும் ஸ்ரீ மத்வர் ஆகியோர் ஆறும் நூற்றாண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டுக்குள் வாழ்ந்தவர்கள். கடவுள், உயிர், உலகம் இம்மூன்று தத்துவங்களைப் பற்றி உண்மைகளை எடுத்து விவரிக்கும் இம்மூவருள் ஸ்ரீ ராமானுஜர் கடவுளுக்கு உயிர் களும் உலகமும் உடல் போல என்று கூறுகின்றார். ஸ்ரீ மத்வர் இம்மூன்றும் தனித் தனி உண்மை என்கின்றார். ஸ்ரீ சங்கரர் பரமன் தவிர வேறொன்றுமே இல்லை என்று கூறினார். ஸ்ரீ சங்கரரின் வாதத்தை அத்வைதம் என்றும், ஸ்ரீ ராமானுஜர் வாதத்தை விசிஷ்டாத்வைதம் என்றும் ஸ்ரீ மத்வர் வாதத்தை துவைதம் என்றும் அழைப்பர்.

பொதுவாக இந்து மதத்தை அறிய உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரங்கள், கீதை இம்மூன்றும் அடிப்படை நூல் களாகும். எது எது யாருக்கு எளிதாகவும் கைக்கொள்ளக் கூடியதாகவும் தெரிகிறதோ, அதை அவர் பின்பற்றி வீடு பெறலாம். இந்து மதத்தில் எல்லாவற்றிற்குமே மதிப்புண்டு.

வைராக்கியத்திற்கு அளிக்கப்படும் பெருமை யோகிகளுக்கு உண்டு; பக்தர்களுக்கும் உண்டு. சிவனை வழிபட்டால் கிடைக்கும் சித்தி விஷ்ணுவையோ சூரியனையோ வழிபடு பவனுக்கும் கிடைக்கும். பக்தனுக்கு உள்ள பெருமை பொது நல ஊழியனுக்கும் உண்டு. அனைவருக்கும் ஒரே நிபந்தனை தான். உண்மையாக முறைப்படி வழிபட வேண்டும். அது ஒன்றுதான் உரைகல்.

### ''மறு பிறவி''

இந்து மதம் இதை முழுமையாக நம்புகிறது. மறு பிறவிக்குக் காரணமாக இருப்பவை உயிர்களின் வினைகளே. வினைகள்—இரு வினைகள். நல்வினை, தீவினை. இரண்டின் பயனும் நீங்கிய அன்றே பிறவி ஒழியும் பிறவிக் கடலை நீந்தி கரை சேர்ந்தவன் என்றால் இனி அந்த உயிர் உடல் உயிர் ஏற்காது. வினைகள் காரணமாகப் பிறவிகள் ஏற்படும். அதுவும் அனுபவிக்க வேண்டிய வினைகளின் தன்மைக் கேற்ற சூழ்நிலையிலேயே அதற்கேற்ற பிறவி ஏற்படும். இம்மதத்தில் ஒரு தவறான கருத்து நிலவுகின்றது. தவம் செய்தவன்தான் பிராமண குலத்தில் பிறப்பான் என்று சொல்லுவது மனிதன் தானே ஏற்படுத்திய குறைபாடுகள் கொண்ட ஒரு ஏற்பாட்டுக்குத் தவறான பொருளைக் கொடுப் பதாகும். பிராமணன் என்றால் பிரமத்தைத் தேடி வாழ்வை அதற்கேற்ற வழியில் அமைத்துக் கொள்கிறவன் என்பதே உண்மையாகும்.

### ''விதிப்பயன்''

''வினை விதைத்தோம்; வினை அறுக்கிறோம். இதை நன்கு புரிந்து கொண்டால் ஏற்கெனவே வினைத்ததை அறுத்துக் கட்டும்போதே மேலே நல்ல பயன் ஏற்கத் தக்க வினைகளையோ அல்லது இருவினைகளையும் அறுத்து நீக்கி விடத்தக்க ஏற்பாடுகளையோ செய்து கொள்ளலாம். எனவே விதி வாதம் நடப்பதைப் புரிந்து தேறுதல் கொள்ளத்தான்

பேசப்படுமே தவிர இனி நாம் விரும்பும் நிலைக்கேற்ற வினைகளைத் தடுக்க பயன்படாது. திருடியதற்கு தண்டனை தருமே தவிர சட்டம் நல்லவனுதலைத் தடுக்காது. கிடைத்த வாழ்வு நல்லதோ கெட்டதோ நாம் ஏற்கெனவே செய்து விட்ட வினைகளின் நேர் விளைவு. நீதிபதி சட்டங்களுக்கு விளக்கம் தந்து குற்றங்களுக்கு தண்டனை சொல்கிறாரே தவிர தண்டனைகளை அவரே நிறைவேற்றுவதில்லை. அதே போல விதி செய்கைக்கும் விளைவுக்கும் தொடர்பை எப்போதும் காண்கிறது. இதைப் புரிந்து கொண்டால் நாம் விதி வாதத்தை நன்றாக நன்மைக்காகவே பயன்படுத்திக் கொள்ள முடியும். அது முயற்சிக்கோ முன்னேற்றத்திற்கோ தடை ஏற்படுத்த முடியாது. இந்து மதம் இதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டுள்ளது.

வினைப்பயன், மறுபிறவி ஆகிய இரண்டு நம்பிக்கைகளையும் ஒட்டி இந்து மதம் சமூகத்தை அமைக்கிறது. மனிதன் தனியாகவும், மற்றவர்களுடன் சேர்ந்தும் வாழ வேண்டியிருப்பதால் அவனுக்கு சமூகக் கடமைகளும் உள்ளன. எனவே இந்து மதம் சமூகத்தை வேலைகளின் அடிப்படையில் நான்கு வகைகளாகப் பிரித்துள்ளது. அக்காலத்தில் இந்த நான்கு ஜாதியினரும் சம மதிப்புக் கொண்டு இந்து மதத்தைத் தாங்கும் தூண்களாக இருந்து வந்தனர். ஒருவரை நீக்கியோ, மதிப்பில் குறைத்தோ இந்து மதம் என்றுமே எண்ணியது கிடையாது. அவரவர்கள் தம் தம் தகுதிக்கும் திறமைக்கும் ஏற்ப, ஏற்பட்ட வேலைகளை சமூக நன்மை கருதி உண்மையாகவும் முழு ஈடுபாட்டுடனும் செய்தனர். எனவே தேவையற்ற மனக் கசப்புக்கு இடமே இல்லாதிருந்தது.

சாதிகள்:—

பிறவியினால் ஜாதி என்ற கருத்து எவ்விதம் ஏற்றுக் கொள்ளப்பட்டாலும், ஏற்றுக் கொள்ளப்படா விட்டாலும்

தன்மையால், பண்பால், பணிகளால் மாறுபடாமல் இருக்க இயலாது. எனவே வருண (சாதி) தர்மங்களைத் தெரிந்து கொள்வதினால் பிறவியினாலோ, குணம்' பயிற்சி, பண்பாடு காரணமாகவோ ஏற்றுக் கொண்ட தருமங்களைப் புரிந்து கொண்டு ஒழுங்காக கடமையாற்றிப் பயன் பெற முடியும். அரசு செய்யும் சட்டங்கள் மட்டும் சமூகத்தை கட்டுப்படுத்தி நல்வழியில் செல்விக்க முடியாது. செய்யாதே என்று வற்புறுத்தும் அளவுக்கு செய் என்று சட்டங்கள் கட்டாயப் படுத்த முடியவில்லை. ஆனால் சமயமோ வற்புறுத்தாமலே தருமத்தைச் செய்ய முடியும். எனவே சமயத்தின் சமூக தர்மங்கள் என்றும் தேவைப்படும். "உனக்கேற்ப வினையைச் செய்; அதை உண்மையுடன் செய்" என்று கீதை உபதேசிக்கின்றது. எனவே தரும சாஸ்திரங்கள் கூறும் சாதித் தருமங்கள் சரியான முறையில் புரிந்து கொள்ளப்பட்டால் இந்து சமூகம் பயன் பெற இயலும்.

இந்து மதம் மனிதன் வாழும் காலத்தை நான்கு பருவங்களாகப் பிரிக்கிறது. குழந்தையாக இருப்பதை நீக்கி விட்டால் அடுத்து மாணவப் பருவம். அப்பருவத்தில் அவன் தன் உலக சமய வாழ்வுக்கு வேண்டிய அறிவுகளைப் பெற்றுக் கொள்கின்றான். இதற்கு பிரமசரியப் பருவம் என்று பெயரிட்டுள்ளனர். அடுத்து அவன் தொழில் ஒன்றை மேற்கொண்டு வீடு அமைத்து பொருளை ஈட்டி மனைக்கு மங்கலமாக தேடி அமைத்துக் கொண்டு இல்லறம் நடத்துகின்றான். இதை கிரஹஸ்தாசிரமம் என்று கூறுகின்றனர். இந்நிலையில் அவன் தனக்கும் தன் குடும்பத்திற்கும், சுற்றத்திற்கும் சமூகத்திற்கும் ஆற்ற வேண்டிய பல கடமைகள் உள்ளன. மூன்றாவது பருவத்தில் அவன் உலகப் பொருள், உலக இன்பம் முதலியவற்றில் ஈடுபாட்டை குறைத்துக் கொண்டு இறைவன் கருத்தே ஓங்க குடும்பத்துடன் ஒட்டியும் ஒட்டாமலும் உலகினர்க்கு தன் அறிவையும் உழைப்பையும் உதவி வாழ்கின்றான்.

இதை வானப்பிரஸ்தம் என்பார்கள். கடைசியாக அவன் சந்நியாசி (துறவி)யாகின்றான். அப்போது மனிதன் அனைத்தையும் துறந்து காட்டிற்குச் சென்று கனி இலை வேர்களைத் தின்று கொண்டு தவஞ் செய்து வாழ்நாளைக் கழித்துப் பிறவிப் பிணி அகற்றிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடுகின்றான். இவ்வாழ்வு முறைகள் இன்றைய நிலைக்கு ஒத்து வராது. உதாரணமாக எல்லோரும் சந்நியாசிகளாக ஆகிக் காட்டுக்குப் போக முடியாது. எனினும் துறவு மனப் பான்மை கொண்டு ஆசைகளைத் துறந்து தெய்வ நிலையில் ஈடுபட்டு வாழலாம்.

இது தவிர பொதுவாக அனைத்து மதங்களும் உபதேசிக்கும் கீழ்கண்ட நன்னெறிகளையும் இந்து மதம் தீவிரமாக வலியுறுத்துகின்றது.

பொய் சொல்லக் கூடாது; உண்மை பேசுதல் அவசியம் தந்தைக்குச் சேவை செய்தல் வேண்டும். நம் கடமையைச் செய்தல் கடவுளை நம்புதல் உலக அமைதிக்கு கட்டுபட்டு நடத்தல் பிறரை குறை கூறுதிருத்தல் போன்றவையாகும்.

இந்து மதம் மனிதன் உடல் மனவளர்ச்சிகள் சமூகத்தின் வளர்ச்சி முறை, வளர்ந்த நிலை, வளரும் வாய்ப்பு எல்லாவற்றையும் ஒன்று விடாமல் நுணுக்கமாகக் கருத்தில் கொண்டு மிக எளிய சாதனைகளிலிருந்து மிகவும் கடினமான தவங்கள் வரை வகுத்திருக்கிறது. மற்ற மூன்று யுகங்களில் வேள்விகள், உபாசனை, ஜபம், தானம், தர்மம் முதலிய செய்தால்தான் மனிதன் உய்ய முடியும். கலிகாலத் திலோ கடவுள் பெயரை நம்பிக் கூறிக் கொண்டிருந் தாலே போதும்'' என்று சொல்லப் படுகிறது. மனிதனை ஆய்ந்தால் மக்கள் சமூகத்தை முக்கியமாக நான்கு பிரிவுக்குள் அடக்கி விடலாம். புத்தி வலுத்து இதயம் இளைத்தவர்கள், இதயம் ஓங்கி புத்தி நுண்மை குறைந்தவர் கள், இதயம் அறிவு இரண்டும் சேர்ந்து வளர்ந்தவர்கள்.

இரண்டுமே நன்கு வளராதவர்கள். இந்த நால்வகை மக்களையும் மனதில் கொண்டு நால்வகையினருமே கைக் கொண்டு பயன் பெறும் வண்ணம் இந்து மதம் நான்கு சாதனை மார்க்கங்களைத் தந்துள்ளது. இந்த நான்கு மார்க்கங்களும் முறையேஞான மார்க்கம், பக்தி மார்க்கம் கர்ம மார்க்கம், யோக மார்க்கம் என கூறப்படுகிறது.

**ஞான மார்க்கம்:**—இறைத் தத்துவம் என்ற ஒரு பேருண்மையை தத்துவமாகக் காண உதவுவது இந்த மார்க்கம்தான். இதைப் பின்பற்றுவது மிகக் கடினம். இது கஷ்டமான மார்க்கம் என்று கீதையில் கண்ணனே கூறியுள்ளார்.

**பக்தி மார்க்கம்:**—இது உணர்ச்சி கொண்ட மனிதர்களுக்கு மிகவும் பயன் படுவதாகும். உலகில் உள்ள பெரும்பாலான மதங்கள் இந்த மார்க்கத்தையே பின்பற்றுகின்றன. பக்திக்கு அடிப்படை நம்பிக்கை; கடவுள் உண்டு. அவன் பேராற்றல் படைத்தவன். பெருங்கருணை பூண்டவன் அவன் ஒருவனே உண்டு என்ற நம்பிக்கை. அதுபோல் பக்திக்கு தன் சிறுமையிலும் கதியற்ற தன்மையிலும் தெளிவு வேண்டும். பின் அவன் அன்பிலும் உய்கதியிலும் உறுதியுடன் அன்பு செலுத்துவதில் அசையாமை கொண்ட திண்மையும் வேண்டும்.

பக்தி ஒன்பது வகையாக பிரிக்கப்பட்டுள்ளது. அவை சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம் வந்தனம், தாஸ்யம், சக்யம் ஆத்ம நிவேதனம் எனப்படும். அதுவே,

1. ஆண்டவனின் கதை, லீலைகள், புகழ், பெருமை கேட்டல்.

2. அவற்றைச் சொல்லல்.

3. அவற்றை எண்ணியிருத்தல்.

4. அவனுக்கு (ஆண்டவனுக்கு) சேவை செய்தல்.

5. அர்ச்சித்தல் பூஜை செய்தல்.

6. ஆண்டவனை துதித்திருத்தல்.

7. அவனுக்கு அடிமை செய்தல்.

8. அவன் நட்பை வேண்டிப் பெறல்.

9. ஆத்ம சமர்ப்பணம். இவற்றை எதை மேற்கொண்டாலும் அது பக்திதான்.

**கர்ம மார்க்கம்:—**

உலகில் எல்லோருமே பயன் பெறக் கூடிய மார்க்கம் இது. தெய்வத்தை எந்த உருவத்தில் கண்டாலும், அதை வழிபடுகின்றவன் தான் செய்யும் காரியங்களில் நாம் என்ற எண்ணம் நீத்து பயனில் விழைவையும் மறந்து செயலாற்றும் போக்கே கர்ம மார்க்கத்தின் அடிப்படை, கர்ம மார்க்கம் என்றால் எந்தப் பொது நலப் பணியும் அல்லது பொது நலத்துக்காகவே சுயநலத் தியாகத்தின் அடிப்படையில் உண்மையுடன் செய்யப்படும் எந்தப் பணியும் யக்ஞமாகிறது. அது அறிவை வளர்த்து மனதைத் தூய்மைப் படுத்தி நற்கதியை உய்விக்கிறது.

**"யோக மார்க்கம்' ஹடயோகம்,**

இதற்கு அதிக அறிவோ, அதிக உணர்ச்சியோ தேவையில்லை. நம் பாரதம் பூராவிலும் யோகம் பெற்று சித்தி பெற்ற சித்தர்கள் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுக்கு ஆசாரம் சாஸ்திரம் ஒன்றும் வேண்டியதில்லை. அண்டத்தைப் (புற உலகங்களை) பிண்டத்தில் (உடலுக்குள்) காணும் இவர்கள் சித்தி சிருஷ்டி சக்தியான குண்டலினி சக்தியை எழுப்பி நின்ற நிலையில் முக்தி பெறுவதுதான். இவர்கள் படிக்கவோ, தர்க்கம் புரியவோ வகையற்றவர்கள். செயலாற்ற விருப்பமற்றவர்கள். இவர்களின் பேச்சும்

நடத்தைகளும நம் பகுத்தறிவுக்கு விரோதமாகவும் விரோதமாகவும் காணப்படும். ஆனால் அவற்றில் உண்மை இல்லை என்பதில்லை. இதையே சீரமைத்து அஷ்டாங்க யோகம் என்று ஏற்பட்டுள்ளது. இயமம், நியமம், ஆஸனம், பிராணுயாமம், பிரத்யாஹாரம், தியானம், தாரண, சமாதி என்ற எட்டு அங்கங்களைக் கொண்டது. பழகிப் பயன் பெற மிகவும் கடினமானதாகும்.

சித்தாந்தம்:—

சித்தாந்தம் அற்ற சம்பிரதாயங்கள் உயிரற்ற உடல் போலாகும். அதுபோல சம்பிரதாயங்கள் இல்லாமல் உயிர் தோற்றம் இருக்க முடியாது. இந்து மதத்தில் பல சித்தாந்தகள் உள்ளன. அவற்றுள் துவைதம், வைணவம் (விசிஷ்டாத்வைதம்) சைவசித்தாந்தம் வேதாந்தம் என்கிற அத்வைதம என்ற நான் கைப்பற்றியும் ஒவ்வொரு இந்துவும் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

துவைதம்:—துவைதம் என்றவுடன் பதிமூன்ரும் நூற்ருண்டில் முதலில் வாழ்ந்த ஸ்ரீ மத்வாச்சாரியாரின் பெயர் நினைவுக்கு வருதல் வேண்டும். உயிரையும் கடவுளையும் உலகையும் பற்றிய அவர் கருத்துக்கள் பின் வரும் ஐந்து மாற்ற முடியாத வேற்றுமைகளைக் கொண்டது. 1. கடவுள் வேறு, தனித்தனி உயிர்கள் வேறு; 2. கடவுள் வேறு, பிரகிருதி வேறு. 3. உயிர்கள் வேறு, பிரகிருதி வேறு 4. ஒரு உயிரும் மற்ருெரு உயிரும் தனித்தனியே. 5. பிரகிருதியிலேயே ஒரு அமிசமும் மற்ற அமிசங்களும் வேறுபட்டனவே.

கடவுள், உயிர், உலகம் மூன்றும் தனித்தனி இருப்பு பெற்றவை. கடவுள் தன் வயத்தன. மற்ற இரண்டும் அவர் வயத்தன. அவர் அவற்றை உண்டாக்க முடியாது. ஆனல் அவற்றை ஆள்கிருர். வைகுண்டத்தில் தேவி

லக்ஷ்மியுடன் இருக்கும் அவர், வ்யூஹம் அவதாரங்களிலும் வெளியாகிறார். அந்தர் யாமியாகவும் எங்கேயும் பரவி யிருக்கின்றார். உயிர்கள் ஒன்றாக முடியாது. மோட்சம் பெற்ற பிறகும் அவர்கள் தனித்தனியே மாறுபட்டே யிருப் பர். ஸ்ரீ மத்வர் பக்தர்களை மூன்று வகையாகப் பிரிக் கின்றார். 1. சாத்வீக இயற்கையுள்ளவர்கள். இவருக்கு மோட்சம் உண்டு. 2. ராச்சசக்குணம் படைத்தவர்: இவர்கள் பிறவிகளிலேயே சுற்ற வேண்டியவர்கள் 3. தாமஸ குணம் கொண்டவர் என்றுமே இருளில் அழுந்தி இருப்பவர்கள். கடவுள் (விஷ்ணு) அருள் இருந்தால் தவிர எந்த உயிரும் மோட்சம் பெற முடியாது. அது அவர் மைந்தரான வாயு மூலமே பெற முடியும்.

விசிஷ்டாத்வைதம்:—

இதை பக்திமார்க்கத்தின் ஒரு அங்கமாகவே கொள்ள முடியும். இந்த பக்தி இயக்கம் தெற்கே ஏழு எட்டாம் நூற்றாண்டுகளில் ஆழ்வாராதியர் மூலம் நிலை பெற்றது. ஆண்டாள் என்ற பெண், திருப்பாணாழ்வார் என்ற தாழ்த் தப்பட்ட சாதியினர் முதலிய பன்னிரெண்டு ஆழ்வார்கள் வளர்த்த பக்தி நாலாயிர திவ்விய பிரபந்தம் என்ற பக்தி நூலாக வெளிவந்துள்ளது. இவர்களும் நாராயணன், பகவான் என்ற வாசுதேவனையே வழிபடுகின்றவர்கள். இந்த பக்தியே முற்றி பிரபத்தி என்ற சரணாகதி சாஸ்திர மாக விளைந்தது. ஆழ்வார்களுக்குப் பிறகு நாதமுனி, யாமுனாச்சாரியார், ராமானுஜாச்சாரியார் என்ற ஆச்சாரி யார்கள் வந்தனர். அவர்கள் வேதங்கள், பிரபந்தங்கள் இரண்டையும் ஒன்றுபடுத்தி உபய வேதாந்திகளாயினர். பக்தியை ஞானத்துடனும் கருமத்துடனும் இணைத்து ஒரு சித்தாந்தம் தந்தனர். அதையே விசிஷ்டாத் வைத சித்தாந்தம் எனவும், அதற்கு ஆச்சாரியராக ஸ்ரீராமானு ஜரையும் கொள்ளப்பட்டிருக்கிறது. அவர்பன்னிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரியார். இவரின் கொள்கைப்படி

பரம்பொருள் வெறும் தத்துவமல்ல, நிர்குணமல்ல, சகுண மூர்த்தியேதான். உபநிஷதங்கள் நிர்குணன் என்று சொல்லும்போது துக்கம், தேய்வு, தேய்வு போன்ற தன்மைகள் அவரிடம் கிடையாது, என்றே பொருள் கொள்ள வேண்டும். உயிரும் உலகமும் அவருக்கு உடல்கள். அவை சிருஷ்டிக்கு என் தோற்றம் பெறுமல் சூக்கும நிலையிலும் சிருஷ்டிக்குப் பிறகு தோற்றம் பெற்ற நிலையிலும் உள்ளன. சிருஷ்டி என்பது ஜீவான்மாக்களும் பிரகிருதியும் எடுக்கும் மாற்றங்களாகும். பிரளயத்தின்போது பிரகிருதி ஜீவன்கள் இரண்டுமே கடவுளுள் ஒரு பிரகாரமாக மறைந்து இருந்து சிருஷ்டி ஏற்படும்போது மீண்டும் தோற்றம் எடுத்து வளரும். எனவே பிரகிருதி ஜீவன்கள் இரண்டுமே என்று மிருப்பவைதாம்.

பக்தியின் ஒரு வழியாலேயே உயிர்கள் மோட்சமடைய முடியும். பக்தியின் எல்லைதான் சரணாகதி. சரணாகதி என்பது தன்னை முழுமையாக ஸ்ரீ நாராயணனிடம் ஒப்படைப்பதாகும் கர்மம், ஞானம் இரண்டுமே பக்திக்கு அங்கங்கள். எல்லா சம்பிரதாயங்களிலுமே குருவுக்கு மிக உயர்ந்த இடம் உண்டு. இந்த மார்க்கத்தில் அது மிகவும் அதிகம். மோட்சம் என்றால் உயிர் பரமபதம் அடைந்து அவனுக்கு கைங்கர்யம் செல்வதாகும்.

சைவ சித்தாந்தம் :—

இது வேதாந்தம் ஆகமம் இரண்டையும்] ஒற்றியது. இதன்படி பரமேசுவரன் சிவனே. அவனுக்கு அனைத்து ஆற்றலும் உண்டு. அவன் எங்கும் நிறைந்தவன். எல்லாம் அறிந்தவன். மாருதவன். ஆதி அந்தம் அற்றவன். முழுமை பெற்றவன். அன்பே உருவானவன். ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றையும் கருமங்களின் பயனைத் தந்து கருணை காரணமாக செய்யும் மறைத்தல் அருளல் என்ற

இரண்டையும் சேர்த்து ஐந்தொழில்களைச் செய்கின்றான். இவைகளை அவன் உயிர்கள் பால் கொண்ட எல்லையற்ற அன்பினால் செய்கின்றான். பிரகிருதி அசித்து, சிவன் சித்து. இரண்டுக்கும் இடைப்பட்டது சக்தி. சிவன் பதி என்று சொல்லப்படுபவன், பிரகிருதி என்ற உலகம் உயிர்களின் நன்மைக்காக பரிணாமம் பெறுகிறது. சைவ சித்தாந்தம் அதை முப்பத்தாறு தத்துவங்களாகப் பிரிக்கிறது. உயிர்கள் பசுக்கள் என்று அழைக்கப்படும். அவைகளும் பதியைப் போலவே சச்சிதானந்த சொரூபிகள். ஆனால் அவை தங்களை அநித்யமாகவும், அறிவற்றவையாகவும் எண்ணிக் கொண்டுவிடுகின்றன. இதற்குக் காரணம் பாசமாகும். பாசம், ஆணவம், கர்மம், மாயை என்ற மூன்று கவடுகளை உடையது. இம்மூன்றும் மும்மலங்கள் எனப்படும், ஆணவம் பிறவிக்கு மூலம். கர்மம் உடல் அங்கங்களுக்கு ஏது. மாயை உயிர்களின் போகங்கள், விளங்கும் உலகம் இவற்றிற்குப் பிறப்பிடம். உயிர்கள் கேவல நிலை, சகல நிலை, பற்றற்ற நிலை என்ற நிலைகளுக்குள் வாழ்ந்து வரு கின்றன. சரியை, கிரியை, ஞானம், யோகம் என்ற நான்கு அனுஷ்டானங்கள் மூலமாகவே உயிர் பக்குவமடைய முடியும். தகுதி பெற்ற உயிருக்கு சிவனே வந்து வழிகாட்டு வான். பக்குவமடைந்த உயிர்கள் சிவத்தன்மையை அடை கின்றன. அந்த நிலையில் ஒடுங்கி நிற்றலே முக்தி நிலை என்பதாகும். இச்சைவ சித்தாந்தம் பதின்மூன்றாம் நூற்றாண் டில் தெற்கே ஒரு முழுச் சித்தாந்தமாக உருப்பெற்று விட்டது. இதற்கு ஆதாரம் இருபத்தெட்டு சைவ ஆகமங் கள்.திருமறை, தேவாரம், பெரிய புராணம், மெய்கண்டார் சிவபோதம் அருள் நந்தியாரின் சிவஞான சித்தியார் முதலி யனவாகும்.

**''அத்வைதம்''**

இதை அளித்தவர் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கௌடபாதர் என்பவர். அவருடைய சீடரான கோவிந்தர்

என்பாரின் சீடரே உலகப் புகழ் பெற்ற சங்கராச்சாரியராகும். அவர் அத்துவைதத்தைப் பரப்பியதுடன் நம் புனித பாரத தேசத்தின் நான்கு திசைகளிலும் மடங்கள் நிறுவி அதைக் காத்து பரப்பவும் ஏற்பாடு செய்தார். சிறு வயதிலேயே துறவு பூண்ட இவரது வாழ்க்கைச் சரிதம் மிகவும் வியப்பூட்டக் கூடியது. பெருமை பெற்றது.

பரமாத்மா (இறைவன்)வுக்கும் ஜீவாத்மா (மனிதன்)க்கும் வேறுபாடு கிடையாது. மனிதர்களின் உள்ளங்களே இறைவனின் உறைவிடம். மக்கள் ஒருவருக்கொருவர் வேறுபாடு கருதாது உடன்பிறப்புப் பாசத்துடன் பழக வேண்டும். வாய்மையினின்று ஒருபோதும் தவறக் கூடாது. மோட்சம் என்பது தனியான ஒன்றல்ல. மனிதன் அறியாமையினின்று விடுபட்டு மெய்யுணர்வு கொள்ளும் போது அவன் வீட்டின்பம் பெற்றவன் ஆகின்றான். மெய்யுணர்வை அடைய பக்தி மார்க்கமே சிறந்த வழி. மறைகளுரைக்கும் உட்பொருளை உணராது வெற்றுச் சடங்குகளால் பயன் ஒன்றும் விளையாது என்று சங்கரர் மக்களுக்கு எடுத்துரைத்துள்ளார். சங்கரர் தாம் கண்ட புது நெறியை விளக்க இந்தியா பூராவும் சுற்றுப் பிரயாணம் மேற்கொண்டு பத்ரிநாத், துவாரகை, பூரி, சிருங்கேரி, காஞ்சி ஆகிய இடங்களில் மடங்கள் அமைத்து அவற்றை சமயப் பிரசாரம் செய்யும் நிலைக்களங்களாக்கினார். காசியில் தம் கொள்கையை விளக்க பள்ளி ஒன்றை நிறுவினார்.

'வழிபாடு'

எதைச் செய்தாலும் தூய உள்ளத்துடன் செய்தால் அது அவனைத்தான் சென்றடையும் என்கிற உண்மையை கண்ணன் கீதையில் அழகாக விவரிக்கின்றார்.

"எல்லோரும் என் வழிதான் நடக்கின்றார்கள். எந்த தேவதையை வழிபடுகின்றவர்களும் என்னையேதான் அவிதி

பூர்வமாக வழிபடுகின்றார்கள். உலக நன்மையை வேண்டு கின்றவர்கள் அவற்றிற்குரித்தான தேவர்களை வழிபடு கின்றனர். அதற்கான வேள்வி முதலிய சடங்குகளைச் செய் கின்றனர். ஆனால் பலன் தருவது என்னவோ நான்தான். எந்தெந்த உருவங்கள் மூலம் வழிபடுகின்றானோ, அது தரக் கூடிய பலனை அடைகின்றான். இரண்டாவது எந்த உருவத் திலும் அந்த உருவத்துடன் அதற்குப் பின்னால் பரம் பொருள் உருவத்தையும் பிரிக்கலாம். எனவே எந்த உரு வத்தின் மூலமாகவும் பரம்பெரும் பொருளையும் பெறமுடியும். எனவே உருவத்தை மட்டும் வேண்டினால் கேட்கிற பலன் கிடைக்கும். ஆனால் விதிப்படி பூஜை செய்ய வேண்டும். அது என்ன? அந்தப் பரம்பொருளின் விளக்கமாக உள்ள பொருள்தான் எது? தேவதைகள் என்றாலும் அவற்றின் அடையாளங்களைத் தானே வழிபடுகின்றோம். எனவே கல்லை, மண்ணை, குருவை, தந்தையை, குரங்கை எதைப் பூசிக்கின்றவர்களும் அவனையேதான் பூசிக்கின்றார்கள். எனவேதான் இந்துமதப் பெரியார்கள் எதையும் தடுக்க வில்லை.ஆனால் அவர்கள் அறிவுக்குத் தக்கபடி பொருளையும் பொருத்தத்தையும் தெரிந்துகொண்டு செய்யச் சொல்லிக் கொடுத்தார்கள்.

இந்துக்களிடையே உள்ள சமயம் பற்றிய செயல்கள் பலதரப் பட்டவை. இந்தப் பரந்த புண்ணிய பூமியில் ஆங் காங்கே உள்ள மாறுபாடுகள் கணக்கில் அடங்காதவை. அவற்றை முக்யமாக கீழ்கண்டவாறு பிரித்துள்ளனர்.

வழிபாடு, நோன்புகள், உற்சவங்கள் இம்மூன்றும் தனித்தனி வீடுகளிலும் கோயில்களிலும் நடக்கின்றன.

வழிபாடு :—இது மனிதன் தனித்து தன் கடவுளுடன் செய்து கொள்ளும் உறவுவெளியீடு. அதன் மூலம் அவன் தற்சமயம் கடவுளுடன் நெருங்கியிருப்பதாக பாவிப்பதினால் அல்லது நெருங்கியே இருப்பதனால் கிடைக்கும் ஆனந்தம்

அவன் கருணையினுல் வாழ்வில் பெறும் சுகம், நன்மை, நற்கதி இவற்றிற்காக இதைச் செய்கின்முன்.

இதன்பின் பூசை செய்ய ஒரு ஆதாரம் தேவை. அவரை ஒரு 'மூர்த்தியில்' வந்து அமரச் செய்ய வேண்டும். அதற்கு ஒரு 'லிங்கம்' அடையாள மூர்த்தம் அல்லது பொருள் தேவை. மிக உயர்ந்த மூர்த்தியான சிவன், மற்றும் விஷ்ணு முதல் சாதாரணக் கல் வரை அனேகச் சின்னங்களை வைத்து வழிபடுவதை நாம் காணலாம். இந்துக்கள் அரச மரம், துளசிச் செடி, வேப்ப மரம் போன்ற மரவகைகளையும், பாம்பு, குரங்கு, பசு அல்லது அதற்றின் சிலைகள் போன்ற மிருகங்களையோ, காக்கை மயில் போன்ற பறவைகளையும் வழிபட்டு வருகின்றனர். இது தவிர உயிரற்ற கல், மலை, நதி, கடல், மழை, படங்கள், சிற்பங்கள் போன்ற உயிரற்ற பொருள்களையும், குரு, ஸந்நியாசிகள், பெரியோர், சாதுக் கள், மடாதிபதிகள் ஆகிய மனிதர்களையும் இந்துக்கள் வழி பட்டு வருகின்றனர்.

வழிபடும் முறைகள்:—மனிதர்களுக்குள் குருவுக்கு முதல் இடத்தையும், தாய் தந்தை நூல்களின் வாயிலாக நமக்கு உதவும் பெரியோர்கள் கடவுள் வரை குருவாக ஏற்கப்பட லாம். ஆனல் குரு என்பவர், யார் நமக்கு நற்கதிக்கு வழி காட்டினரோ அவரைத்தான் குறிக்கிறது. இந்துக்களுக்கு குரு சமய நூல்களின் பொருள்களை விளக்குகின்முர். ஜெபிப்பதற்கான மந்திரத்தை தீக்ஷை மூலம் கொடுக்கின்முர். அப்படி குருவாக ஏற்றுக் கொண்டவருக்கு ஒவ்வொரு இந்துவும் பூசை செய்கின்முன். மானஸிகமாக அவரிடம் பணிவு கொண்டு வாழ்வதுடன் தெய்வத்திற்கு காட்டப் படும் மரியாதையை அவரிடம் காட்டுகின்முன். இதே போன்ற மரியாதையை சித்தி பெற்ற பெரியார்களிடமும், தூய சந்நியாசிகளிடமும், ஒவ்வொரு உண்மையான இந்துவும் காட்ட வேண்டும்.

உருவ வழிபாடு:—ஒவ்வொரு வீட்டிலும் ஒரு அறையையோ அல்லது ஒரு மூலையையோ ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும். அங்கே படங்களோ, சிவலிங்கமோ, சாளிக்கிராமமோ, வைக்கப்பட்டிருக்கும். தினமும் காலை, மாலை, நடுப்பகல் மூன்று வேலைகளுமோ, அல்லது நேரம் கிடைத்த போதோ குறைந்தது இரண்டு வேளைகள் பூசை செய்வார்கள். பூசை அறை கோவில் போல் அமைக்கப் பெற்று, கூட்டி சாணம் தெளித்து கோலமிட்டு அழகும் புனிதமும் செய்யப்படும் இடத்தில் வீட்டின் தலைவர் அமர்ந்தும், நின்றும், வணங்கியும் வழிபாட்டை நடத்த வீட்டில் உள்ளோர் அனைவரும் தங்கள் தங்களுக்கு இயன்றவாறு பங்கு கொள்வர். முதலில் குத்து விளக்கேற்றி வைத்து ஊதுபத்தி முதலியன கொளுத்தி வைப்பார்கள். பிறகு தெய்வ அடையாளத்தில் 'உயிர் ஏற்றும்' சடங்குகள் தக்க மந்திரங்களுடன் நடத்தப்படும். அதன் பிறகு அது வெறும் உயிரற்ற பொருள் அல்ல. வழிபாட்டுத் தெய்வம் வந்து தங்கியுள்ள சின்னமாக அது மாறுகிறது. பிறகு அத்தெய்வத்திற்கு அடிவேதம், அர்ச்சனை, நிவேதனம் போன்றவை நடத்தப்படும். முடிவாக மீண்டும் மறையும்படி பிரார்த்தனை செய்து கொள்வதற்கு முன் எல்லோரும் வணங்கி அருள் பிரசாதம் எடுத்துக் கொள்கின்றனர். இவையன்றி மிகவும் எளிமையாக தோத்திரங்கள், தேவாரம், திருவாசகம், திவ்யப் பிரபந்தத்திலிருந்து செய்யுட்கள் சொல்லித் துதித்து வணங்கி விட்டு 'பூசையை' முடித்துக் கொள்வதும் உண்டு, அடிப்படை பக்தியும், பக்தி உணர்வுக்கு உருக் கொடுத்து மனம் பக்குவம் பெறும் முயற்சியும்தான். எப்படி பிரதிமைக்கு அதற்கே உள்ள மதிப்பும் அது பரம் பொருளை சுட்டுகிற மதிப்பும் உண்டோ அதே போல சடங்குகளின் போது பயன்படுத்தும் பொருளுக்கும் இரண்டு வகை மதிப்புண்டு. எடுத்துக்காட்டாக தேங்காய் உடைத்துக் காட்டுவதற்கு நார்களாகிய வெளிப் பாசங்களை பிய்த்து எறிந்து, கடினமான அந்தக் கரண ஆணவத்தை உடைத்து இன்ப

துன்பமான நீரையும் கொட்டி விட்டோமானல் தூய வெண்மைப் பொருளான ஈசன் அருள் கிட்டும் என்ற பொருளின் மதிப்புக் கிடைக்கும். ஆனல் தியானமும் ஜபமும் சிறந்த வழிபாட்டு முறைகளாக இந்துமதம் கருது கிறது. அங்கே தேவையானதெல்லாம் நாம்—நம் மனது—அதில் தெய்வ நினைவு இவை மட்டுமே. ஜபத்தில் மந்திரச் சொற்கள் பிரதிமைகள். திரும்ப திரும்பச் சொல்லுதல் வழிபாடு. தியானத்தின் இன்னமும் சூக்குமமான பிரதிமை அதை தியானித்தலே வழிபாடாம்.

### சடங்குகளும் நோன்புகளும்

ஓவ்வொரு இந்துவும், அவன் வீட்டில் குழந்தை பிறந்தவுடன் செய்ய வேண்டியது ஜாதக கர்மம், பெயரிடல், முதல் உணவு ஊட்டல், முதல் முறை மயிர் திருத்தல், கல்வி பயிலத் தொடங்குவித்தல், உபநயனம் (பூனூல் போடல்) விவாகம் போன்றவை நோன்புகளாகும். இறந்தவுடன் நீத்தாருக்குச் செய்யும் சடங்குகளும் நீத்தார் நினைவாக ஆண்டுதோறும் செய்யும் திவசம் முதலியனவும் இறந்தவர் நற்கதி பெறவும் அவர் தம் சந்ததியினரையும் வாழ்த்தி அருளும்படி வேண்டிக் கொண்டும் செய்யப்படும் நோன்பு களின் முறைகளேயாகும். அனேகமாக இந்துக்கள் எல்லோருக்குமே சூரிய வழிபாடு வேளை வழிபாடு முதலிய நோன்புகள் அல்லது சடங்குகள் இருந்த போதிலும் அந்தணர்கள் மட்டும் அதிக நோன்புகளும் சடங்குகளும் செய்ய வேண்டும் என ஏற்றுக் கொண்டுள்ளனர். பெண் கள் சில விரதங்களைக் கைக் கொண்டு நடத்துகின்றனர். அவை யாவும் தங்களின் சுற்றமும் நட்பும் நல்வாழ்வு வாழ இறைவனை பிரார்த்திப்பதேயாகும். ஆனல் இந்துக்கள் மேற் கொள்ளும் உற்சவங்கள் உற்ருர் உறவினர்கள் மற்றும் நண்பர்கள் அயலார் ஆகிய அனைவரையும் பங்கேற்று கொண்டாடுவது. உற்சவங்களில் மகிழ்ச்சி ஆரவாரம் அதிகம் காணப்படும். மூன்ருவதாக இவற்றின்

போது உலக நினைவு அதிகம் இருக்கும். திருமணம் உற்சவமாகக் கொண்டாடப் படுகிறது. சுருங்கச் சொன்னால் ஒவ்வொரு இந்துவும் மனச் சாந்தி பெறவும், வீடு பெறவும் அவனுக்கு வழிகாட்டியாக ஒரு கோவில் வேண்டும். அதனுள் ஒரு தெய்வம் வேண்டும். அந்த தெய்வத்தின் அருள் வேண்டும். இதைத்தான் விசுவ ரூபமாகவும், அணுவின் உருவத்திலும் காட்டித் தருகிறது இந்து மதம்.

இந்து மதத்தின் தனிச் சிறப்பு:—

வெறும் வாதங்களாகவே இல்லாமல், அவற்றை வாழ்வில் பின்பற்றி நடக்கச் செய்வது இந்து மதம். தத்தம் இயற்கைக்கு ஏற்றவாறு விரும்பும் வழிகளை ஏற்றுக்கொள்ள உதவி செய்து சம மதிப்பும் ஒரே பயனும் கொண்ட பல மார்க்கங்களைக் காட்டுவது இந்து மதம். துணிந்து உண்மையுடன் பின்பற்றி நடந்து, நடக்கும்போது பல புது உண்மைகள் தெரிய வந்தால் அவைகளையும் ஏற்றுக் கொள்வது இந்து மதம். எந்த மதமாயிருந்தாலும் சரி தான், பழகுங்கள் என்று பெருந்தன்மையுடன் வழி விடுவது இந்து மதம். இந்து மதப்படி வாழ்ந்தால் வாழ்பவனுடைய இம்மை வளமுறும். மறுமை நலமுறும். மேலும் உலக மக்களும் நலமுறுவர். தலைவர் நடக்கிறபடியே உலகம் நடக்கும் என்பது கீதை கண்ட பேருண்மை.

''உலகெங்கும் இந்துமதப் பண்பாடு''

மெக்சிகோ நாட்டில் முற்காலம் முதல் தற்காலம் வரை இன்னும் 'ராம் லீலா' என்னும் விழாக் கொண்டாடப்பட்டு வருகிறது.

தென் அமெரிக்காவில் பெரு நாட்டில் சூரியனுக்குரிய ஆலயங்களும் சூரிய வணக்க வழிபாடுகளும் இன்றும் இருந்து வருகின்றன.

ஆப்ரிக்காவில் சகாரா பாலைவனத்தை சுற்றியுள்ள ஊர்களின் பெயர்களில் ராமனின் பெயர் கலந்திருக்கிறது.

மெசப்டோனியா நாட்டில் கங்கையைத் தலையில் தாங்கும்சிவபெருமானுடைய சிலைகள் கிடைத்திருக்கின்றன.

ஆஸ்திரேலியாவில் பழங்குடி மக்கள் இன்றும் சிவ பெருமானுக்குறிய விழாவைக் கொண்டாடி வருகின்றனர்.

மங்கோலியாவுக்கு அடுத்த கோபி பாலைவனத்தில் தோண்டி எடுக்கப்பட்ட ஒரு தங்கப் பெட்டியில் பல அரிய சம்ஸ்கிருத ஏடுகள் காணப்பட்டன.

கிரேக்க நாட்டில் நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்த சிவசக்தி ஆலயங்கள் பற்றிய பல நூல்கள் கிடைத்துள்ளன.

அயர்லாந்து நாட்டின் பூமியிலிருந்து விநாயகர் விக்ரகம் ஒன்று தோண்டி எடுக்கப்பட்டுள்ளது.

சயாம், சுமத்ரா, ஜாவா முதலிய நாடுகளில் பல சிவ விஷ்ணு ஆலயங்கள் உள்ளன. அங்கு இராமாயணம் புகழ் பெற்ற காவியமாக உள்ளது.

ஜப்பானில் இன்னும் துர்க்கையின் விக்ரகம் பல கரங்களுடன் கூடியதாக உள்ளது. ஜப்பானியரால் பூஜிக்கப் பட்டும் வருகிறது.

மலேஷ்யாவில் முருகன் ஆலயங்கள் ஏராளமாக உள்ளன. அலகு குத்திக் கொள்வதும், காவடி ஆட்டங்களும் அங்கு பிரபலமானவை.

புதைபொருள் நகரங்களான ஹாரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய இடங்களில் சிவ யந்திரம் சக்தி யந்திரம் சாலிக்கிராமம் முதலியன கிடைத்திருக்கின்றன.

பாரசீகர் தார்த்தார், சீனம் முதலானவர்கள் பண்டைக் காலத்தில் க்ஷத்திரியர்களாக இருந்து தங்கள் கர்மானுஷ்டானங்களை விட்டு வழுவியவர்கள் என்று மனு தர்மசாஸ்திரம் கூறுகிறது.

சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்பு சீனாவில் லவோத்சே (Laotze) என்ற பரப்பிரும்ம ஞானி இருந்தார். அவர் பரப்பிரம்மத்தை 'தவோ' என்று குறிப்பிட்டுள்ளார். இது 'தத்' என்ற வேதவாக்கின் திரிபு.

யூதர்களின் பழைய ஏற்பட்டால் வரும் ஆதி மனிதர்களின் பெயர்களாகிய ஆதாம், ஏவாள் என்பன ஆத்மா, ஜீவன் என்ற சொற்களின் திரிபுதான்.

கிரேக்க ஞானிகளான அனக் சாகரஸ், பிளாட்டோ ஆகியோர் எழுதிய நூல்களில் உபநிஷதங்கள், பகவத் கீதை ஆகிய ஆதிகால கல்களின் கருத்துக்கள் காணப்படுகின்றன.

இந்துக்கள் விபூதியை ஏன் அணிகின்றனர்?

விபூதி பூசிக் கொள்வது முற்றிலும் விஞ்ஞான அடிப்படையில் அமைந்துள்ளது. சாம்பலில் தண்ணீர்பட்டால் உறிஞ்சப்படுகிறது. அதுபோல் மனிதன் நீராடிவிட்டு திருநீறு பூசுவதால் தலையில் தேங்கியுள்ள நீர் விபூதியில் உறிஞ்சப் பெற்று தலைவலி முதலிய நோய்களிலிருந்து நாம் தப்ப முடிகிறது. இது முற்றிலும் விஞ்ஞான அடிப்படை.

"இந்துமதத்தில் காணப்படுபவை"

பக்தர்களின் பிரார்த்தனைக்கு பகவான் அருள் பாலிப்பார். முழுமையான சரணாகதி உணர்வுடன் யார் அபயக் குரல் கொடுத்தாலும் ஆண்டவன் அவர்களுக்கு நிச்சயம் அருள்பாலிக்கவே செய்வார். நடுச்சபையிலே திரௌபதையை நிறுத்தி வைத்து துச்சாதனன் அவளுடைய

துகிலை உரிந்தான். யார் முன்னிலையில்? பராக்ரமம் மிக்க பாண்டவர்களின் முன்னிலையில்! பீஷ்மர் துரோணர் ஆகிய பெரியோர்களின் முன்னிலையில்! அபயமளித்து தன் மானத்தைக் காப்பாற்றுமாறு ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்கு திரௌபதி குரல் கொடுத்தாள். உடனே ஒரு அதிசயம் நடந்தது. துச்சாதனன் துகிலுரிய உரிய அவளுடைய புடவை வளர்ந்து கொண்டே போயிற்று. அவளுடைய மானத்திற்கும் பங்கம் ஏற்படாமல் காப்பாற்றப்பட்டது. இது எதைக் காட்டுகிறது? இறைவனிடம் வைக்கும் பக்தியும் நம்பிக்கையும் ஒருபோதும் வீணாவதில்லை என்பதைப் புலப் படுத்துகிறது.

"பலன் கருதாமல் கடமை செய்ய வேண்டும்"

தன்னுடைய உற்றார் உறவினருக்கு எதிராக யுத்தம் செய்யத் தயங்கிய அர்ஜுனனைப் பார்த்து கிருஷ்ண பரமாத்மா, "பற்றற்ற தன்மையில், மனதை சமநிலையில் வைத்துக்கொண்டு ஆண்டவனிடம் உன்னை ஐக்யப்படுத்திக் கொண்டு கடமையைச் செய். கடமையைச் செய்வதுதான் உன் வேலையே தவிர அதற்கான பலனை எதிர்பார்த்துச் செய்யாதே" ஆண்டவன் அருளிய இந்த உபதேசம் எல்லாக் காலத்திற்கும் எந்தச் சூழ்நிலைக்கும் பொருத்த மானது.

"ஆண்டவனின் தனித்தன்மை"

தன்னுடைய பரம விரோதிக்கும் தண்ணளி சுரந்து அன்பு காட்டுவதுதான் இறைவனின் இயல்பு. எத்தகைய பாவம் புரிந்தவனும் தன் குற்றத்தை உணர்ந்து மன்னிப்புக் கோரினால் கடவுள் அவன் பாவத்தை மன்னித்து அவனுக்கு அருள் புரிகின்றார். மற்றவர்களின் மனைவியைக் கவர்ந்து செல்வதைப் போன்ற பாவம் எதுவும் இருக்க முடியாது. அந்தப் பாவம் செய்த இராவணனுக்குக்கூட மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும் வாய்ப்பை ராமபிரான் பெருந்தன்மை

யோடு வழங்கினர். போர்க்களத்தில் நிராயுதபாணியாக நின்ற இராவணனை நோக்கி "இன்று போய் நாளை வா" என்று வழி அனுப்பி வைத்தார். இதைவிடராமனின் கருணை உள்ளத்திற்கு சான்று என்ன வேண்டும்?

"மந்திரங்கள்" :—மந்திரங்களுக்குள்ள மகத்தான சக்தி பற்றி ஐயமே தேவையில்லை. ஏனெனில் அவை கடவுளின் வாய்மொழிகள். சோதனைக்குத் தாக்குப் பிடிப்பதற்கான தார்மீக பலத்தை மந்திரங்கள் அளிக்கின்றன.பிரச்சினைகளை எதிர்நோக்குகின்ற விதத்தில் மனதை தயார்படுத்துகின்றன. பதட்டம் அடையாமல் தூய்மையுடன் இருக்கவும், இறைவனுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவும் உதவி செய்கின்றன. இறைவனை உணரும் மார்க்கமாக மந்திரங்களைப் பயன்படுத்துவோருக்கு மட்டுமே தான் அது சொல்லிக் கொடுக்க வேண்டும். சில ஆண்டுகளுக்குமுன் மதம் பிடித்த யானை ஒன்று தறிகெட்டு ஓடத் தொடங்கியது. அதை எப்படி அடக்குவது என்று ஒருவருக்கும் தெரியவில்லை. காஞ்சிப் பெரியவாள் நிராயுதபாணியாக அதன் முன்னே மந்திரத்தை ஜபித்து அதன்மீது தீர்த்தத்தை தெளித்த உடனேயே அது மதம் நீங்கி சாதுவாயிற்று. இத்தகைய மந்திரங்களை சரியானவர்களிடமிருந்து சரியான முறையில் கற்பதின் மூலமாகவும் அவைகளின் தாத்பர்யத்தை பூரணமான அர்ப்பணத்தோடும் மரியாதையோடும் அக்கறையோடும் புரிந்து கொள்வதின் மூலமாகவும் விரும்பிய பலனை நிச்சயம் பெற முடியும். தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக எற்பட்டதல்ல மந்திரங்கள்.

தெய்வங்களில் பேதமில்லை :—

உலகம் தழுவியது இந்து மதம், பரந்த நோக்கமும் சமரச மனப்பான்மையும் கொண்டது. நூற்றுக்கணக்கான தெய்வங்களில் ஒவ்வொருவரும் தங்களுக்குப் பிடித்தமான தெய்வத்தை வழிபாட்டிற்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ள

இந்து மதம் சுதந்திரம் கொடுத்திருக்கிறது. தான் வழிபடும் தெய்வத்திடம் ஒருவன் மிகப் பெரிய ஈடுபாடு கொண்டிருக்கலாம். அதற்காக மற்ற தெய்வங்களை தான் வழிபடும் தெய்வத்திற்கு தாழ்வானதாக அவன் கருதக் கூடாது. பாகவதத்தில் கடவுள் பல்வேறு ரூபங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறார் என்ற உண்மையை மகாவிஷ்ணு அழகாக நிரூபித்துக் காட்டுகிறார். சிவபெருமானை தன்னுடைய சொந்த மருமகன் என்றும் பார்க்காமல் தட்சன் அவமானப்படுத்துகின்றான். அதற்காக அவன் தண்டனையையும் அனுபவிக்கின்றான். பக்தர்கள் தாங்கள் வழிபடும் தெய்வத்தைத்தவிர மற்ற தெய்வங்களை மதிக்கத் தவறுவது எவ்வளவு பொறுத்தமற்ற காரியம் என்பதை மகாவிஷ்ணு அழகாக சுட்டிக் காட்டுகின்றார்.

"மனிதர்களுக்குக் கிடைத்த ஒரே பற்று இறைவனே"

மனிதர்கள் உலகில் எதன்மீதும் நிச்சயமான நம்பிக்கை வைக்க முடியாது. ஏனெனில் இறைவனைத் தவிர நம்பிக்கைக்குப் பாத்திரமானது வேறு எதுவும் இல்லை. பிரகலாதன் அரச குலத்தில் பிறந்தான் என்பது உண்மை. ஆனாலும் அவன் கடவுளிடத்தில் எல்லையில்லாத நம்பிக்கையும் பக்தியும் வைத்திருந்தான். அவகாத்தன் வழிக்குக் கொண்டுவர இரண்யன் செய்த முயற்சிகள் அனைத்தும் வியர்த்தமாயின. பிரகலாதனை அவன் கொல்ல முயன்றபோது அவனைக் காப்பாற்றும் பொறுப்பை கடவுளேதான் ஏற்றுக் கொண்டார். பிரகலாதனைக் காப்பாற்றுவதற்காகவே நரசிம அவதாரம் எடுத்து இரண்யனின் கொடுமைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தார். யாரையும் அழிக்க வேண்டும் என்பது பகவானின் நோக்கமல்ல. அதேசமயம் தன் பக்தன் கொண்ட வாத்ஸ்பத்தின் காரணமாக அவர் அக்காரியத்தைச் செய்தார். ஆகவே திருமாலின் அவதாரங்களில் நரசிம்ம அவதாரத்துக்கு விசேஷமான முக்யத்துவம் உண்டு. பக்தர்களைப் பாதுகாக்க ஆண்டவன் எப்படி அக்கறையுடன்

இருக்கிறார் என்பதற்கு நரசிம்ம அவதாரம் ஒரு எடுத்துக் காட்டாகத் திகழ்வதை விஷ்ணுபுராணம் அழகாகத் தெளிவு படுத்துகிறது.

"துயர் துடைக்கும் வள்ளல்" தவறுகளை உணர்ந்து மனம் திருந்துகின்றவர்களுக்கு அனுக்கிரகம் புரிய பகவான் தயக்கம் காட்டுவதே இல்லை. அவரின் அனைத்து அவ தாரங்களிலும் இதைக் காணலாம். ஆண்டவனை அடைய சுலபமான வழி என்ன என்று கேட்கப்பட்டபோது, "தன்னுடைய செயலற்ற தன்மையை உணர்ந்து எவன் ஒருவன் ஆண்டவனை மனப்பூர்வமாகப் பிரார்த்திக்கின்றானோ அவன் சுலபத்தில் பகவானின் கருணைக்குப் பாத்திரமாகின்றான்" என்று ஆண்டவனே உரைத்துள்ளார். வராக அவதாரம் எடுத்து பூமாதேவியைக் காப்பாற்றியபோதும் இதையே தான் சொல்லுகின்றார். "துயர்படும் எவர் தன்னை மன முருகி வேண்டினாலும் தான் அருகில் இருந்து அவர் துயர் துடைப்பது நிச்சயம்" என ஆண்டவன் கூறுகின்றார். ஆண்டவன் நெஞ்சில் நிறுத்தி தியானிப்பவர்களை தீமை ஒருபோதும் அணுகுவதில்லை.

"தீயவர்கள் தண்டிக்கப் பட வேண்டியவர்களே"

குருக்ஷேத்திரப் போர் ஆரம்பமாகும் போது, "உறவி னர்களையும், ஆச்சாரியர்களையும் (குரு) கொன்று குவிப்ப தால் என்ன லாபம்" என்று அர்ஜுனன் மனக்கலக்கம் அடை கின்றான். அவனுடைய கவலை எல்லாம் அவர்களை எப்படிக் காப்பாற்றுவது என்பதாகும். துரியோதனனும் மனக் கலக்கம் அடைகின்றான். தன்னையும் தனக்குத் துணையாக இருப்பவர்களையும் எப்படிக் காப்பாற்றுவது என்பது மட்டும் தான் அவனுடைய கவலை, தன் விரோதிகள் உயிரிழப் பதைப் பற்றி அவன் கொஞ்சமும் கவலைப்படவில்லை. தீயவர்களும், தீமைக்குத் துணை நிற்பவர்களும் ரத்த சம்பந்தம் உடைய உறவினர்களேயானாலும் அவர்கள்

தண்டிக்கப்பட வேண்டியதின் அவசியத்தை கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்கு எடுத்துக் கூறி அவனைப் போரில் ஈடுபடுத்துகிறார்.

''காரியசித்திக்கு பக்தி அவசியம்''

தாங்க முடியாத துயரம் ஏற்படும் போது சிலர் தற்கொலைக் முயற்சி செய்வார்கள். தற்கொலை எண்ணம் பாவமட்டுமல்ல; தண்டனையும் கடுமையானது. இந்த உடலை ஒரு உன்னதமான நோக்கத்துடன் கடவுள் நமக்களித்திருக்கின்றார். அதை அழித்துவிட நமக்கு எவ்வித உரிமையும் கிடையாது. அடுத்த பிறவியும் மானிடப் பிறவியாக இருக்க வேண்டும் என்ற உத்திரவாதமும் கிடையாது. புழுவாகவோ, பூச்சியாகவோ கூட பிறந்துவிட நேரலாம். தாங்க முடியாத துன்பம் வரும் போது இறைவனின் பாதத்தை உறுதியுடன் பற்றிக் கொள்ள வேண்டும். துன்பத்தைத் தாங்கும் சக்தியை இப்பிறவியிலேயே அளிக்குமாறு இறைவனிடம் வேண்டிக் கொள்ள வேண்டும்.

அப்படி வேண்டினால் அதை இறைவன் ஒரு நாளும் மறுக்க மாட்டார். பக்தியின் சக்தியை நிரூபித்துக் காட்டியவர்களில் அருணகிரி நாதர் குறிப்பிடத் தக்கவர். 'நாதர் என்ற பட்டத்தை அவருக்கு வழங்கியவர் இறைவன்' இளமைப் பருவத்தில் மனம் போனபடி பாவ வாழ்க்கை வாழ்ந்து அருணகிரிநாதர் தீராத நோய்க்கு ஆளாகி திருவண்ணமலை கோயில் கோபுரத்திலிருந்து குதித்து உயிரை மாய்த்துக் கொள்ள முடிவு செய்தார். ஆனால் இறைவன் அவரை தடுத்தாட் கொண்டு மதப் பிரசாரப் பணிக்கு ஆசீர்வதித்தார். அந்த நிமிடத்திலிருந்து அருணகிரியாரின் உள்ளத்தில் பக்தி சுடர் விட்டு பிரகாசிக்கத் தொடங்கியது. இறைவனின் புகழ் பாடிக் கொண்டு ஸ்தல யாத்திரை புறப்பட்டார். அவரின் பக்திப் பதிகங்கள் 'திருப்புகழ்' என்கிற திருநாமம் பெற்றன. உயர்ந்த தத்துவ போதனைகள்

அடங்கிய கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம் ஆகிய நூல்களையும் அருணகிரிநாதர் அருளிச் செய்தார்.

"காட்டுக்குப் போவது மட்டும் ஈஸ்வர வழிபாடு ஆகாது"

மனம் தீய சக்திகளுக்கு இடம் கொடுக்காத வரையில், உலக இன்பங்களின் சக்தியைக் குறித்து மனிதன் கவலைப் பட வேண்டியதில்லை. ஒருவனின் நடத்தையைப் பற்றி முடிவு செய்யும் போது வேறு எதையும் விட அவனுடைய மனோ பாவத்தைத்தான் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். ஒருவன் உலகை விட்டு காட்டிற்குப் போய் விடுவதாலேயே அவனுடைய மனம் ஈஸ்வர தியானத்தில் லயித்து விட்டதாகக் கூற முடியாது. காடுகளின் இயற்கை அழகும் அமைதியும் ஆன்மீகப் பயிற்சிக்கு ஏற்ற சூழ்நிலை தான். அந்த சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு கடுமையான நெறியுடன்மனதை ஒருமைப்படுத்தினாலொழிய மனம் அங்கும் இங்கும் அலைவதை கட்டுப்படுத்த முடியாது. ஆனால் ஒருவன் குடும்ப வாழ்க்கையில் மத்தியில் இருந்து கொண்டும் கூட, மனதை ஈஸ்வரனிடம் ஒருமைப் படுத்து வதுதன் மூலம் அவன் நெருங்கிவிட முடியும். சீதையைத் தேடி இலங்கைக்குப் புறப்பட்ட ஆஞ்சநேயர் இராவண னின் அந்தப்புரத்தில் சீதை இருக்கிறாளா என்று தேட வேண்டியிருந்தது. திடீரென்று ஆஞ்சநேயருக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. பிரும்மச்சாரியாகிய தான் அந்தப் புரம் சென்று பெண்களைப் பார்ப்பது சரியா என்ற சந்தேகம்தான் அது. உடனே அவருக்கு சந்தேக நிவர்த்தி யும் ஏற்பட்டது. தான் பார்க்கின்ற காட்சியால் தன் மனம் பேதலிக்காதவரை அதில் தவறு ஒன்றும் இல்லை என்பதை உணர்ந்தார். ஆஞ்சநேயருக்கு அப்படி ஒரு மனநிலை சாத்யமாக இருந்திருக்கலாம். எல்லோரும் அப்படி மன அடக்கம் உடையவர்களாக இருப்பார்கள் என்று கூற முடியாது. தீமைகளிலிருந்து மனதை விலகிக் கட்டுப்

படுத்தி வைத்திருப்பது என்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை. இலங்கையில் எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்து விட்டு சீதையைக் காணுமல் போன போது ஆஞ்ச நேயர் சோர்வடைந்தார். என்ன செய்வது என்று தெரி யாத நிலையில் ஸ்ரீ ராமபிரானின் திருநாமத்தை மனதில் ஒரு முறை ஜபித்துக் கொண்டார். மறுவிணுடியே அசோக வனத்தில் சீதையைத் தேடவில்லையே என்கிற எண்ணம் அவர் மனதில் பளிச்சிட்டது. சீதையைத் தேட புறப்பட்ட போதே அசோக வனம் பற்றிச் சம்பாதி குறிப்பிட்டது அவரின் நினைவுக்கு வந்தது. கடவுளை நம்பி தைரியமாகச் செயல்பட்டால் ஆரம்பத்தில் குறுக்கிடும் எந்த இடையூரை யும் அப்புறப் படுத்தி காரிய சித்தி பெற்று விடலாம்.

குரு பக்தி:—குருவின் ஆசீர்வாதமும் வழிகாட்டுதலும், இருந்து விட்டால் ஒருவன் கடவுளின் அனுக்கிரகத்தை அடைவது நிச்சயம். நம்முடைய சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் குரு பக்தியின் மகிமை தெளிவாக விளக்கி சொல்லப்பட்டிருக்கிறது. அரச குடும்பத்தில் பிறந்த இளைஞன் ஒருவன் தன் குரு இறக்கும் தருவாயில் ஓலைச் சுவடியில் எழுதி வைத்திருந்த விஷயத்தை தெரிந்து கொள்வதற்காக எத்தனையோ தொல்லைகளை அனுபவித் தான். அவமானங்களைத் தாங்கிக் கொண்டான். கடைசி யாக அந்த ஓலைச் சுவுடியைத் தேடிப் போனவன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை தரிசிக்கும் வாய்ப்பைப் பெற்ருன். அவர் ஸ்ரீ கிருஷ்ணன் என்று தெரியாமலேயே ஆண்ட வனும் அந்த ஓலைச் சுவடி அவனுக்குக் கிடைக்க கருணை செய்தார். அந்தச் சுவடியில் குரு எழுதியிருந்த வாசகம் இதுதான். 'இந்த ஓலைச் சுவடி உன்னிடம் கிடைக்கும் போது நீ பகவானையே நேரில் தரிசிப்பாய்' குருவின் வாசகத்தை விடாமுயற்சியுடன் தேடியவனுக்கு ஆண்ட வனின் தரிசனமே கிடைத்தது.

'சக்தி'யின் ஆற்றல்

இந்த உலகமே அன்னை பராசக்தியின் வெளிப்பாடு தான். அவளே தெய்வ அன்னை என்று அழைக்கப்படு கின்றாள். அவளுடைய ஆற்றல் எல்லையில்லாதது. அவளு டைய கருணை குணங்களைப் புகழ்வதற்கு வார்த்தைகளே கிடையாது. வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கியுள்ள ஒவ்வொருவனும் அன்னைப் பராசக்தியைப் பார்த்து கீழ் கண்டவாறு பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

"உன்னோடு ஒப்பிட்டால் நான் ஒன்றும் இல்லை. நான் பெற்றிருப்பதெல்லாம் நீ அளித்த பிச்சை. அவை அனைத்தும் உனக்கே சொந்தம். நான் வெறும் இயந்திரம், நீ என்னை இயக்கும் சூத்திரக் கயிறு."

சபரிக்கு ராமன் காட்டிய அன்பு:—

தன்னுடைய அருளை வழங்கும் போது கடவுள் ஒருவ னுடைய படிப்பையோ, பணத்தையோ அந்தஸ்தையோ பிறப்பையோ பார்த்து அதை வழங்குவதில்லை. பக்தி யுடைய எவரும் கடவுளின் அருளுக்குப் பாத்திரமாகலாம். பூஜைக்கு ஒருவன் எவ்வளவு நேரம் செலவு செய்கின்றான் என்பது முக்கியமில்லை. உண்டியலில் அவன் எவ்வளவு காணிக்கை செலுத்துகின்றான் என்பதும் முக்கியமில்லை. எத்தகைய இருதய சுத்தியோடு அவன் பக்தி செலுத்து கின்றான் என்பதுதான் முக்கியம். கடவுளை அடைய வேண்டும் என்ற அணையாத ஆசை அவன் மனதில் இருக்க வேண்டும். சீதையை இழந்த மிகப் பெரிய துக்கத்தில் இராமன் இருந்தான். அந்த நிலையிலும் கூட சபரியின் குடிலுக்குச் சென்று அவளின் உபசரிப்பை ஏற்றுக் கொண் டான். காரணம் என்ன? சபரி தன் குரு மதங்க முனிவரி டத்தில் ஆத்மார்த்தமாக ஊழியம் செய்தவள், அதனால் திருப்தி அடைந்த அவர் ஒருநாள் சபரியின் ஆசிரமத்திற்கு விஜயம் செய்யப் போகின்றார் என்ற விஷயத்தை முன்

கூட்டியே சொல்லி வைத்திருந்தார். சபரியும் அந்த நல்ல நாளை எதிர் நோக்கிக் காத்திருந்தாள்.

சபரி கொடுத்த பழங்களை ராமன் மனமுவந்து ஏற்றுக் கொண்டான். வேடர் குலத்தில் பிறந்த சபரிக்கு ராமன் காட்டிய அன்பு சில இராம பக்தர்களிடம்கூட பொறாமையைத் தூண்டிவிட்டது. இந்தப் பொறாமை உணர்வும் ஒருவிதத்தில் நன்மையாகவே முடிவுற்றது. கடவுளின் அன்பைப் பெற்ற தாங்கள் இன்னும் கடுமையான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்கின்ற ஊக்கத்தையே அவர்களிடம் ஏற்படுத்தியது.

மாயையின் மகத்தான சக்தி :—

நீர்ப்பரப்பிலிருந்து பாசியை அப்புறப்படுத்த எவ்வளவு தான் முயன்றாலும் அது மேன்மேலும் வந்து மூடிக்கொள்வதைப்போல மாயா சக்தியினால் விளையும் பந்தபாசம் வாழ்க்கையிலும் படர்ந்து மூடிக்கொண்டு விடுகிறது. அபிமன்யூ எவ்வளவுதான் வீரமாகப் போரிட்டு மாண்டு போயிருந்த போதிலும் அபிமன்யு இறந்துவிட்ட செய்தியை யுதிஷ்டிரரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பரிபூர்ணமாக ஆண்டவனிடம் நம்மை ஒப்படைத்துக் கொள்ளும்போது அவர் நமக்குப் பெரிய பாதுகாப்பு விடுகின்றார். பக்தர்களுக்கு பாதுகாப்பு அளிக்கின்ற பொறுப்பை பகவான் தாமாகவே முன்வந்து ஏற்றுக் கொண்டிருக்கின்றார் என்பதை எந்தச் சமயத்திலும் நாம் மறந்துவிடக் கூடாது. பாண்டவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணன் எப்படி தன்னுடைய தெய்வீக சக்தியை வழங்கி பாதுகாப்புக் கொடுத்திருக்கின்றார் என்பதை பாரதத்தில் பல இடங்களில் காணலாம்.

"ஏழைகளின் நண்பன் இறைவன்"

இருதய சுத்தியுடன் தன் உதவி நாடி வருகின்றவர்களுக்கு இறைவன் இல்லை என்று மறுக்கவே மாட்டார்

ஏழைகளுக்கும் பலஹீனர்களுக்கும் உறுதியான நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் கடவுளே. சுக்ரீவனுடன் வாலி இரண்டாம் முறை போருக்கு வந்தபோது வாலியின் மனைவியான தாரை போருக்குப் போக வேண்டாம் என வாலியைத் தடுத்தாள். ஸ்ரீராமபிரானின் சகாயம் கிடைத்திருப்பதாலேயே சுக்ரீவன் மீண்டும் வாலியை போருக்கு அழைப்பதாக அவள் எடுத்துக் காட்டினாள். நியாயவான்களுக்கும் திக்கற்றோர்களுக்கும் புகலிடமான ஸ்ரீராமபிரான் அபயம் அளிப்பார். வீணான அழிவை விலைக்கு வாங்க வேண்டாம் என வாலியை எச்சரித்தாள் தாரை. வாலி அவள் பேச்சைக் கேட்காமல் சுக்ரீவனுடன் போரிட்டு ராமனின் பாணத்துக்கு இரையானான். திக்கற்றோர் உதவி வேண்டினால் உடனே அவர்களுக்கு உதவி செய்வது இறைவனின் தன்மை. நெருக்கடி நேரத்தில் சுக்ரீவனுக்கு உறுதியான நண்பர் ஆக ஸ்ரீராமபிரான் கிடைத்தார். தெய்வத்தை நம்புகிற யாரும் உதவி கிடைக்காமல் கஷ்டப்படுவது கிடையாது.

"இறைவனின் தாய்மை உணர்வு"

அன்பும் பாசமும் வாழ்க்கையில் காணப்படும் குணங்களே. ஆனால் ஒரு லட்சியத் தாய் காட்டும் பாசம், அன்பு ஆகியவை தூய்மையானவை. தன்னலம் இல்லாதவை. பிரதிபலனை எதிர்பார்க்காதவை. அதுவே அன்புகளிலெல்லாம் மிக உயர்ந்தது. குழந்தைகளின் நன்மைக்காக எதையும் தியாகம் செய்யத் தயாராக இருப்பவள் தாய். அவள் தனக்கென்று எதையும் இச்சிப்பதில்லை. கடவுளின் தாய்மை உணர்வும் அது போன்றதே. கடவுள் ஒவ்வொருவரின் தகுதியை வைத்தும் அதன்பேரில் அவரிடம் அன்பைக் காட்டுவது என்றால் அதற்குப் பாத்திரமாக ஒருவருமே இருக்க மாட்டார்கள். ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு வகையான தீய குணம் இருக்கவே செய்யும். ஆனால்

கடவுள் தாய்மைக் குணம் நிரம்பப் பெற்றவர். அவர் நம்முடைய குற்றங்குறைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. அதனால் நாம் அவரிடம் எவ்வளவு நம்பிக்கை வைக்கிறோமோ அந்த அளவுக்கு அவருடைய அருளுக்குப் பாத்திரமாகின்றோம். நிம்மதியைப் பெறுகின்றோம். ஆன்மீக குருவிடம் முழுமையாக ஈடுபாடு கொண்டு பக்தி செலுத்த வேண்டும் என்பது இந்து தர்மம். ஸ்ரீசாரதா தேவி சுவாமி இராமகிருஷ்ண பரமஹம்சருடைய சேவைக்கே தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டார். வாழ்நாள் பூராவும் அந்த நெறியிலேயே இருந்து தவமியற்றினர். கடவுளின் தாய்மை அன்பைப் பெறுவதற்கு நாம் அவரிடம் மனப்பூர்வமான ஈடுபாட்டைக் காட்ட வேண்டும்.

'கீதையில் கண்ணன் கூறியவை'

"எவனொருவன் லாப நோக்கமில்லாமல் செய்ய வேண்டிய காரியங்களை ஒழுங்காகச் செய்கிறானோ அவனே கர்மயோகி. ஞான யோகி. உணவுக்காக நெருப்பு எரிக்காததாலோ காரியங்களைத் துறந்துவிட்டதாலோ அவன் ஞானியாக மாட்டான்."

"கைமாறு எதிர்பாராமல் அன்பு வைப்பவர்கள் நண்பர்கள், பகைவர்கள், தன்னை அலட்சியப்படுத்துபவர்கள், நடுநிலையில் இருப்பவர்கள், தன்னை வெறுப்பவர்கள், உறவினர்கள், சாதுக்கள், பாவிகள் இவர்கள் அனைவரிடமும் ஒரே மாதிரி நடந்து கொள்பவன் உன்னதமானவன்."

"ஆசையை விட்டவன் யோகி; சொத்துக்களைத் துறந்தவன் யோகி. மன வெறியை அடக்கியவன் யோகி. தனிமையில் இன்பம் காண்பவன் யோகி, இவன், ஆத்மாவையே யோகாத்மா ஆக்கி விடுகின்றான்."

"வயிறு வீங்கச் சாப்பிடுகிறவனுக்கும் யோகம் கிடைக்காது. காலவரையின்றி பட்டினி கிடப்பவனுக்கும் யோகம்

வராது. காலா காலங்களுக்கும் தூங்குகின்றவனுலும் யோகம் கிட்டாது. விடிய விடிய விழித்துக் கொண்டிருப்பவனுக்கும் யோகம் கிட்டாது.''

''எவனுல் மனதைக் கட்டுப்படுத்த முடியவில்லேயோ அவனுக்கு எதுவும் கிடைக்காது. எவன் மனதை ஒழுங்குபடுத்தி ஜாக்கிரதையாக முயற்சி செய்கின்ருனே அவனுக்கு எல்லா யோகமும் கிட்டும்!''

''தனது இறுதி காலத்தில் எவனொருவன் அந்தப் பரம புருஷனே ஒரு மனதாய் ஒரு நிலேயாய் சிந்திப்பானே அவன் அந்தக் கோடி சூரிய பிரகாசமுள்ள பரம புருஷனே அடைகின்ருன்.''

'இவன் வேறு நான் வேறு அல்ல' என நினேத்து பாலில் கலந்த நீர்போல என்னுடன் கலந்து அல்லும் பகலும் அனவரதமும் யார் என்னே வேண்டுகிருர்களோ அவர்களின் நன்மை தீமைகளே நேரடியாக நானே நிர்ணயிப்பேன்.''

''அர்ஜுனு! அழகான பொருள்களேப் பார்க்கும் பெண், அழகான குழந்தைகளேப் பெறுவதுபோல தேவர்களுக்காக விரதம் இருப்பவர்கள் தேவர்களே அடைகின்றனர். மூதாதையர்களே வழிபடுவோர் மூதாதையர்களே அடைகின்றனர். பேய் பூதங்களே தொழுகின்றவர்கள் அவற்றையே அடைகின்றனர். என்னே வணங்குகின்றவர்கள் என்னேயே அடைகின்ருர்கள்.''

''அர்ஜுனு வேதங்களே ஓதுவதின் மூலமோ, கடும் தவம் புரிவதன் மூலமோ தானம் செய்வதின் மூலமோ என்னேக் காண முடியாது. மனதை வேறிடம் செலுத்தாமல் என்னிடம் பக்தி செலுத்துவதின் மூலமே என் வடிவத்தைக் காண முடியும்.

பாண்டவ குமாரா! எவன், தான் செய்யும் கர்மங்களை எனக்காகச் செய்கின்றானோ "இவனே உன்னதம்; இவனே நிரந்தரம்" என்று கண்டு பக்தனாகி பற்றுக்களை நீக்கி வழி படுகின்றானோ, அந்த பக்தன்தான் என்னை அடைகின்றான்."

"அர்ஜுனா! அனைத்து உடலிலும் சத்யமாக நிற்கும் உயிர் நானே. அந்த உடலையும் உயிரையும் உள்ளபடி அறியும் அறிவுக்கே 'ஞானம்' என்று பெயர். அந்த ஞானமே என் உபதேசம்"

"ஒருவன் ஆன்மாவைப் புரிந்து கொள்ள வேண்டும். இயற்கைப் பற்றி தெளிவு பெற வேண்டும். பல்வகையான குணங்களையும் எடை போட்டு முடிவு செய்ய வேண்டும். அப்படி முடிவு செய்பவன் எக்காரணம் கொண்டும் மறுபடி பிறப்பதில்லை"

"அர்ஜுனா! தானங்களில் மூன்று வகையுண்டு; சொல் கிறேன் கேள்! எந்தப் பிரதி பலனையும் எதிர் பார்க்காமல்— தனக்கு எந்தவித உதவியும் செய்யாதவனுக்குக்கூட நடத்தை அறிந்து கொடுப்பது சாத்வீக தானம். 'இதைக் கொடுத்தால் இது கிடைக்கும்' என எதிர்பார்த்து சந்தேகத் தோடும் உள் நோக்கத்துடனும் கொடுப்பது ராஜஸ தானம். பொருத்தமற்ற இடத்தில், பொருத்தமற்ற நேரத்தில், தகுதி யற்றவர்களுக்குத் தருவதும் அலட்சியமாகத் தூக்கி எறிவதும் வசை பாடிக் கொண்டே பிச்சை இடுவதும் தாமச தானம். இயற்கைக்கு—அல்லது ஈஸ்வரனுக்கு— அல்லது பிரும்மத்திற்கு மூன்று பெயர்கள்; ஓம், தத். ஸத் என்பவை அவை. அந்தப் பெயர்களைக் கொண்டு பிர மாணங்களும் வேதங்களும் வேள்விகளும் முன்பு என்னால் படைக்கப்பட்டன. ஆகவே வேத பாராயண முறைப்படி வேதம் அறிந்தவர்களால் செய்யப்படும் தானம், வேள்வி, தவம் எனும் மூன்றும் 'ஓம்' என்று சொன்ன பிறகே தொடங்கப் படுகின்றன. எந்தப் பலனையும் விரும்பாமல்

சொர்க்கத்தை விரும்பும் உத்தர்மர்கள் யாகம், தானம், தவம் செய்யும் போது 'தத்' என்று சொன்ன பிறகே தொடங்குகின்றார்கள்- 'ஸத்' என்ற வார்த்தைக்கு 'இருப்பது' 'நல்லது' என்று இரு பொருள்கள் உண்டு. மங்கலகரமான எல்லாக் காரியங்களிலும் 'ஸத், என்ற வார்த்தையே உபயோகப் படுகிறது. வேள்வியில் நிலைத்தல், தவத்தில் நிலைத்தல், தானத்தில் நிலைத்தல்—அவை சம்பந்தப்பட்ட அனைத்துக் காரியங்கள்—இவை அனைத்தும் 'ஸத்' என்று சொல்லப்படுகின்றன. நம்பிக்கையின்றி செய்யப்படும் யாகமும், தானமும், தவமும் 'அசத்' என்று சொல்லப்படும். அதனால் இகவாழ்விலும் லாபமில்லை. பரலோகத்திலும் சொந்தமில்லை.''

விஜயா! நல்ல காரியங்களுக்குப் பலன் சாத்துவிகம் என்னும் தூய்மை. ரஜோ குணத்திற்குப் பலன் தீர்க்க முடியாத துன்பம்; தமோ குணத்திற்குப் பலன். ஏதுமறியாத மடமை. முதல் குணத்திலிருந்து அறிவு பிறக்கிறது. இரண்டாவது குணத்திலிருந்து பேராசை பிறக்கிறது. மூன்றாவது குணத்திலிருந்து சோம்பல், மயக்கம், அறியாமை பிறக்கின்றன. முதல், இடை, கடை இந்த மூன்று குணங்களுக்கும் மூன்று நிலைகள் உண்டு. சத்துவ குணம் மேல் நோக்கிச் செல்லும். ரஜோ குணம் திரிசங்கு சொர்க்கம் போல் நடுவே நிற்கும். தமோ குணம் கீழ் நோக்கிப் பாதாளத்திற்குச் செல்லும்.

அத்தனை செயல்களுக்கும் குணங்களே மூலம். அனைத்தையும் குணங்களே இயக்குகின்றன. வேறு கர்த்தா இல்லை. இதையும் உணர்ந்து கொண்டு குணங்களுக்கு அப்பாற்பட்ட விஷயங்களையும் யார் தெரிந்து கொள்கின்றார்களோ, அவர்கள் எனது தெய்வீக நிலையை அடைகின்றனர். இந்த மூன்று குணங்களின் மூலம் தான் இந்த உடல் உற்பத்தியாகியிருக்கிறது. எப்போது இந்தக்

குணங்களைக் கடந்து செல்ல முடிகின்றதோ அப்போது பிறப்பு, இறப்பு, வியாதி, அழிவு இவற்றையும் கடந்து செல்ல முடியும்.

அர்ஜுனன் சொல்லுகின்றான்:—

பிரபு! ஒருவன் இந்த மூன்று குணங்களையும் கடந்தவன் என்பதற்கு அடையாளம் என்ன? அவனுடைய நடத்தை எப்படியிருக்கும்? அவன் எந்த வழியில் இந்த மூன்று குணங்களையும் கடந்து செல்கின்றான்?

ஸ்ரீ கிருஷ்ணன் பதிலளிக்கின்றார்:

பாண்டவா! சத்துவத்தின் செயலாகிய மனிதன் ஒளியையும், ரஜோ குணத்தின் செயலாகிய சேட்டையையும், தமோ குணத்தின் செயலாகிய மயக்கத்தையும் நேருக்கு நேர் சந்திக்கும் போது எவன் அவைகளை வெறுப்பதும் இல்லையோ, இல்லாத போது தேடுவதும் இல்லையோ, எவன் ஒரு பக்கமும் சேராது எந்த குணத்தாலும் அசைக்கப் படாமல் குணங்கள் தாங்களே இயங்குகின்றன என்று அறிந்து நிலை பெற்று நிற்கின்றானே, எவன் இன்ப துன்பங்களை ஒரே எடைக் கல்லைப் போட்டு நிற்கின்றானே, எவன் தன்னைத்தான் உணர்ந்து கொண்டவனே. எவன் தங்கமும் செங்கலும் ஒன்றே என்று சமமாக பாவிப்பவனே எவன் விருப்புக்கும் வெறுப்புக்கும் ஒரே மதிப்புக் கொடுக்கின்றானே எவன் திடமான உள்ளம் உடையவனே எவன் இகழ்ச்சியும் புகழ்ச்சியையும் ஒன்றாகக் கண்டவனே, எவன் மானம் அவமானம் இரண்டையும் சமமாக மதிப்பவனே, எவன் நண்பனிடமும் பகைவனிடமும் ஒரே மாதிரி நடந்து கொள்பவனே எவன் ஆசையால் உந்தப்பட்டு ஆரம்பித்த எல்லாத் தொழில்களையும் கைவிட்டவனே, அவனே மேற் சொன்ன மூன்று குணங்களையும் கடந்தவன். முறை பிறழாத பக்தி யோகத்தினால் எவன் என்னைப் பணிக்கின்றானே, அவனும்

இந்தக் குணங்களை எளிதில் கடந்து, ஈஸ்வரனை—இயற்கையை அடையும் தகுதி பெறுகின்றான். ஏனென்றால் அழிவும் தீங்குமற்ற இயற்கைக்கு நானே நிலைக்களன். அசைக்க முடியாத தர்மத்திற்கும் இன்பத்திற்கும் நானே இருப்பிடம்.''

முடிவுரை:—

இந்து மதம் ஒரு மாபெரும் சமுத்திரம். அந்த சமுத்திரத்தின் ஆழத்தில் வேதங்கள், உபநிஷதங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், இதிகாசங்கள், பக்திப் பாசுரங்கள் என்று ஏராளமான ஐசுவரியங்கள் ஏராளமாகப் புதைந்துள்ளது. இவற்றைப் பற்றி எல்லாம் விளக்கிக் கூறுவதோ, இவைகளில் கூறப்பட்டுள்ள விஷயங்களை எடுத்து விளக்குவதென்பதோ சாதாரண விஷயமல்ல. இந்து மதத்தில் கூறப்பட்டுள்ள சில அடிப்படைக் கருத்துக்களை மட்டுமே, மிகச் சுருக்கமாக எனக்குத் தெரிந்த வகையில் எடுத்தெழுதியுள்ளேன். ஆகவே இந்து மதத்தில் கூறப்பட்டுள்ள அனைத்து விஷயத்தையும் எடுத்து எழுதி விட்டேன் என்று கூற எனக்கு அருகதையில்லை. இந்தப் புனித மதத்தைப் பற்றி விரிவாக எழுத ஆரம்பித்தால், அதற்கு முடிவேயின்றி வளர்ந்து கொண்டே செல்லும். ஆகவே, மிகச் சிறிய வனாகிய நான் இம்மதத்தைப் பற்றிய விளக்கங்களை இத்துடன் பூர்த்தி செய்து கொள்ளுகின்றேன்.

# இஸ்லாமிய மதம்

உலகில் உள்ள முக்யமான சமயங்களுள் இஸ்லாமிய சமயமும் ஒன்று. இந்தப் புனித மதத்தைப் பின்பற்றுபவர்கள் உலகெங்கும் பரவியுள்ளனர். பழமையான நாகரீகம் வாய்ந்த சீனு, இங்கிலாந்து, எகிப்து, ஈரான், ஈராக், பாரசீகம் முதலிய நாடுகளிலும், நாகரீகத்தின் அடித்தளத்தில் உள்ள நீக்ரோக்கள் வசிக்கும் பல பகுதிகளிலும்கூட இஸ்லாம் சமயம் பரவியுள்ளது. சுமார் 1500 ஆண்டுகளாக ஆக்கத்தையும், ஊக்கத்தையும், ஆன்மீகத்தையும் ஆற்றலையும் மக்களிடம் பரப்பி தனக்கு ஆதரவையும் செல்வாக்கையும் இஸ்லாம் பெற்றிருக்கிறது.

இந்த உயர்ந்த மதத்தில் பிறப்பினுல் ஒருவன் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற வேற்றுமைக்கு இடமே கிடையாது, பெண்களுக்கு சொத்துரிமை மறுக்கப்படவில்லை. தந்தையின் சொத்தில் மகனுக்கும், மகளுக்கும் உரிமை உண்டு. இம்மதத்தின் திருக்குரானை ஆண்களும் ஓதலாம். பெண்களும் ஓதலாம். இதுதவிர சட்டப்படி தனது வருமானத்தில் நாற்பதில் ஒரு பங்கை மனிதாபிமானத்தோடும், கடமை உணர்வுடனும் அவசியம் தான தருமம் செய்ய வேண்டும்.

இப்படிப்பட்ட மேன்மையான இஸ்லாம் மதத்தை உலகிற்கு வழங்கியவர் யார்? 'அல்லா'.

எல்லாம் வல்லவனை 'அல்லா' யாரைக் கருவியாக கொண்டு இஸ்லாத்தை உலகிற்கு அளித்தான். எழுதப்

படிக்கத் தெரியாத ஒருவர் மூலம் அதை வழங்கினான். அவர்கள் யார்? அவர்தான் முகமது நபி (ஸல்) என்னும் பெருந் தகை. ஒழுக்கம்தான் அனைத்து குணங்களுக்கும் அடிப் படை என்று ஆண்டவன் கருதியதால்தான், எழுதப் படிக்கத் தெரியாத ஒருவர் மூலம் இஸ்லாமியத் திருமறையை இறைவன் இறக்கியுள்ளான். நபிகள் நாயகம் (சல்) அவர்கள் திரு வாழ்க்கையின் அசாதரண வெற்றிக்கு, அவர்கள் ஆண்டவன்மீது வைத்திருந்த அசையாத, அசைக்க முடியாத நம்பிக்கையே அடிப்படையாக இருந்தது. வாழ்வில் எளிமை, உழைப்பின் பெருமை, மனித சகோதரத்துவம் போன்ற உயர்பண்புகளையெல்லாம் நாயகம் அவர்கள் உப தேசித்ததோடு மட்டுமின்றி, தனது வாழ்விலும் அவற்றைக் கடைப்பிடித்து மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாய் விளங் கினார்.

இதுவரை 700 மொழிகளில் முகமது நபியின் வாழ்க்கை வரலாறுகள் பிரசுரிக்கப்பட்டுள்ளன என்றும் அவர்களின் வழியாக ஆண்டவனால் அளிக்கப்பட்ட திருக்குரான் இரண் டாயிரம் மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளதாக அமெரிக்காவில் உள்ள பைபிள் சொசைடியாரின் அறிக்கை ஒப்புக் கொள்ளுகின்றது.

மக்கா மாநகரம் முஸ்லீம்கள் போற்றிக் கொண்டாடும் புனித நகராகும். இந்நகரத்தில்தான் ஏக தெய்வத்தைத் தொழ ஏற்பட்ட கஃபா என்னும் புராதனத் திருக்கோயில் உள்ளது. இங்குதான் முஸ்லீம்கள் போற்றி முத்தமிடும் கருங்கல் உள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்கா என்னும் திருநகரில்தான் பிறந்தார்கள். முதன் முதலில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு வஹீ இறங்கிய இடம் மக்கா நகருக்கு அண்மையில் வடக்கே சுமார் மூன்று மைல் தொலைவில் இருக்கும் ஹிரா என்னும் குகையாகும், ஜிப்ரில் என்னும் வானவர் மூமைம் இறைவன்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் தொடர்பு கொண்ட இடம் அந்த குகைதான். இஸ்லாமிய மதத்தை முதன் முதலில் தழுவிய பெருமாட்டியார் மக்கா நகரில் வாழ்ந்த கதீஜா நாச்சியார் ஆவார். இஸ்லாமிய சமயம் முதன் முதலில் பிரசாரம் செய்யப்பட்ட இடம் மக்கா நகரம். இக் காரணங்களுக்காக மக்கா மாநகரம் மிகவும் புனிதமுடையதாக முஸ்லீம்கள் கொண்டாடுகின்றார்கள்.

மக்காவில் தமக்கும் தன் நண்பர்களுக்கும் இன்னல்கள் பல மக்கள் இழைப்பதைக் கண்டு நபிகள் நாயகம் அவர்கள் தம் தோழர்களுடன் மதீனா சென்று அங்கு வசிக்கத் தொடங்கினார்கள். பத்தாண்டுகள் அங்கு தங்கி இஸ்லாமிய மதத்தைப் பிரசாரம் செய்தார்கள். அந்த நகர்வாசிகளும் நாயகம் அவர்களுக்குப் போதிய ஆதரவு கொடுத்து இஸ்லாமிய மதத்தைத் தழுவினார்கள். அப்படி ஆதரவு கொடுத்தவர்களை இஸ்லாமிய சமயத்தார் அன்சாரிகள் என அழைக்கின்றனர். தன் இறுதி காலம்வரை நாயகம் அவர்கள் மதீனா நகரில் வாழ்ந்தார்கள். உலக வாழ்வை நீத்த பின்னர் நபிகள் நாயகம் அவர்களின் திருமேனி மதினா நகரில்தான் நல்லடக்கம் செய்யப் பெற்றது. அதனால் முஸ்லீம்களுக்கு இது ஒரு முக்ய நகரம் ஆகும். முதன்முறையாகப் பள்ளிவாசல் தோன்றிய இடம் மதீனா நகருக்குத் தெற்கே மூன்று கல் தொலைவில் இருக்கும் 'குபா' ஆகும். இரண்டாவது பள்ளிவாசல் மதீனாவில் ஏற்பட்டதாகும். இந்த இரு பள்ளிவாசல்களையும் நாயகம் அவர்கள் தாமே முன்னின்று தமது மேற்பார்வையில் கட்டி முடித்தார்கள். "அல்லாஹீ அக்பர்!" என்று அழைப்பு விடுத்து முதன்முதலாக ஜீம் ஆ என்னும் கூட்டுத் தொழுகை நடந்த பள்ளி வாசல் இந்த மதீனா பள்ளி வாசல்தான்.

இஸ்லாமிய சமயத்தை தோற்றுவித்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கி. பி. 571ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 20ம்

நாள் திங்கட்கிழமையன்று காலை நேரத்தில் ஆமினா என்ற பெண்ணுக்கும் அப்துல்லா என்ற உயர்ந்த மனிதருக்கும் குழந்தையாகப் பிறந்தார். குழந்தையின் தாய் தன் அருமை மைந்தனுக்கு 'அஹ்மது' என பெயர் சூட்டி மகிழ்ந்தார். ஆரம்பத்தில் சில நாட்கள் ஆமினா தன் குழந்தைக்குப் பால் கொடுத்து வளர்த்தார். பின் குழந்தையின் பெரியப்பா அபூ லஹப் என்பவரின் பணிப்பெண் சுவைபா என்பவளும் குழந்தைக்கு பாலூட்டினாள்.

குழந்தையின் தாத்தா அப்துல் முத்தளப் அவர்கள் தன் குழந்தைக்கு 'முகமது' என்று பெயரிட்டு அழைத்தார். 'முகமது' என்பது அரபுச் சொல். அது புகழுக்குரியவர், பெருமைக்கு உரியவர் என்னும் பொருளைத் தருவதாகும். "என் பேரன் புகழும் பெருமையும் பெற்று விளங்க வேண்டும் என்பது என் ஆசை. அதனால்தான் முகமது என்று பெயர் வைத்தேன்" என்று அப்துல் முத்தளப் தன் நண்பர்களிடம் கூறினார். இக்குழந்தை அனைவரும் போற்றும் வகையில் நன்கு வளர்ச்சி பெற்றிருந்தும், தனது ஆறுவது வயதில் தன் தாயாரையும் இழந்தார். பின் குழந்தையின் பாட்டனார் அப்துல் முத்தளப், முகமதுவை தன் பொறுப்பில் நன்கு வளர்த்து வந்தார். இதன் பின், அப்துல் முத்தள தன் காலத்திற்குப் பிறகு முகமதுவை நன்கு பரிவோடு வளர்த்துக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை தம் புதல்வன் அபுதாலிப்பின் பொறுப்பில் ஒப்படைத்தார்.

நபிகள் நாயகம் அவர்களுக்கு (ஸல்) பன்னிரெண்டு வயதாகும் சமயம், தன் பெரியப்பாவுடன் சிரியா நாட்டிற்கு வியாபாரம் செய்யப் புறப்பட்டார்கள். அபூதாலிபும் நாயகம் அவர்களை தம்மோடு அழைத்துச் சென்றார்கள்.

சிரியாவில் புஸ்ரா என்னுமிடத்தை அவர்கள் அடைந்த போது அங்கே புஹைரா என்ற பாதிரியார் இருந்தார்.

அவர் கிறிஸ்துவ வேத நூலில் சொல்லியிருக்கும் எதிர்கால தீர்க்கதரிசியைக் கண்டு பிடிப்பதில் முனைந்திருந்தார். அவர் முகமது அவர்களைப் பார்த்ததுமே, அவர்தான் வருங் கால தீர்க்க தரிசி என்பதை நிச்சயப் படுத்திக் கொண்டார், அவர் அபூதாலியை அணுகி, "ஐயா, இச்சிறுவனுக்கு மிகச் சிறந்த எதிர்காலம் உள்ளது. இவனை போதிய கவனம் செலுத்தி வளர்த்து வாருங்கள் தாமதிக்காமல் சீக்கிரம் இங்கிருந்து சென்று விடுங்கள். இல்லையேல் இச்சிறுவ னுக்கு யூதர்கள் தீங்குப் புரியக் கூடும்'' என்று கூறினர். ஆகவே தமது வியாபார அலுவல்களை தாமதியாது முடித்துக் கொண்டு தம் தம்பி புதல்வனை மக்காவிற்கு அழைத்து வந்தார் அபூதாலிப். முகமதுவும் தம் பெரிய தந்தையை மதித்து அவர் இட்ட கட்டளைகளை செவ்வனே செய்து நல்ல பெயர் ஈட்டினர். சிற்சில சமயங்களில் தம் பெரிய தந்தைக்காக நபிகள் நாயகம் அவர்கள் ஆடு மேய்த் திருக்கின்றார்கள். மக்கா நகருக்கு வெளியே இருக்கும் கராரீத் என்னும் மைதானத்தில் ஆடுகளை மேயவிட்டு சிந்தனையில் ஆழ்ந்திருப்பார்கள். சிறு வயதிலிருந்தே நேர்மை தவருது நடந்து கொண்டார்கள். சத்யத்தைக் கடைப் பிடித்து ஒழுகினர்கள். அதனல் அவரை "அல் அமீன்," "அல் அமீன்'' என்று மக்கள் பாராட்டினர்கள். 'அல் அமீன்' என்னும் அரபுச் சொல்லுக்கு நேர்மையானன் என்று பொருள்.

மக்கா நகரில் நாற்பது வயது நிரம்பிய செல்வச் சீமாட்டி ஒருவர் இருந்தார். மக்கா நகரிலேயே பெரும் பணக்காரியாகவும் ஒழுக்கத்திலும் பண்பிலும் மேம்பட்ட வராக அவர் விளங்கினர். அவர் பெயர் கதீஜா அம்மை யார். அவர் இருமுறை திருமணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தினர். அவரின் முந்திய கணவன்மார் இருவரும் இறந்து போனர்கள். நபிகள் நாயகத்தின் நாணயம், நேர்மை, சொல் உறுதி கண்ணியம் இவற்றை

எல்லாம் பற்றிக் கேள்விப்பட்ட கதீஜா அம்மையார், அவரை தனக்கு வியாபாரத்தில் உதவியாளஞக ஏற்றுக் கொண்டு, பின் தானே நாயகம் அவர்களை திருமணம் செய்து கொள்ள விரும்பி தன் விருப்பத்தை நபி நாயகம் அவர்களிடமே தெரிவித்து, பெரியவர்களின் சம்மதத்துடன் திருமணம் செய்து கொண்டார். திருமணம் நடக்கும் போது கதீஜா நாச்சியாருக்குத் வயது நாற்பது. நபிகள் நாயகம் அவர்களுக்கு வயது இருபத்தி ஐந்து. இவர் களின் இல்லறம் இனிதே நடைபெற்றது. இந்த இனிய தம்பதியாருக்கு ஏழு குழந்தைகள் பிறந்தனர். காசீம், அப்துல்லா, தாஹீ ஆகிய மூவரும் ஆண் மக்களாவார். ஜைனப், ருக்கியா, உம்மு குல்தூம், பாத்திமா ஆகிய நால் வரும் பெண் குழந்தைகள். ஆண் மக்கள் மூவரும் குழந் தைப் பருவத்திலேயே இறந்து போயினர். கதீஜா நாச்சி யார் உயிருடன் இருக்கும் வரை நபிகள் நாயகம் வேறு எந்தப் பெண்ணையும் திருமணம் செய்து கொள்ளவில்லை. கதீஜா நாச்சியார் காலமான பின்பே அவர் மற்ற சில பெண் களையும் திருமணம் செய்து கொண்டார். கதீஜா நாச்சி யார் இருபத்தைந்து ஆண்டுகள் நபிகள் நாயகம் அவர் களுடன் இல்வாழ்க்கை நடத்திஞர்கள். நாயகம் அவர் களுக்கு நபித்துவம் வந்ததும் அதை உண்மை என முழுக்க முழுக்க நம்பி இஸ்லாமிய சமயத்தை முழு மனதுடன் தழுவி தம் கணவருக்கு கதீஜா நாச்சியார் ஆக்கமும் ஊக்கமும் தந்தார்கள். அதஞல் கதீஜா நாச்சியார் பெருமையும் புகழும் பெற்ருர்கள்.

முகமது நபி நாயகம் அவர்கள்தான் தன்னுடைய தூதன் என்பதை ஜிப்ரில் என்ற தேவன் மூலம் பல அதிச யங்கள் மூலம் ஆண்டவன் நிரூபித்துள்ளார். இறை வனிடம் முழுக்க முழுக்க நம்பிக்கை வைத்து அவன் பணித்த தூது என்னும் பொறுப்பை நாயகம் அவர்கள் முழு மனதுடன் ஏற்றுக் கொண்டனர்.

நபி நாயகம் அவர்கள், தாம் சொல்லுவதை மக்கள் நம்புவார்களா? நம்பிய பின் வாழ்வில் கடைப் பிடித்து ஒழுகுவார்களா? என்று கவலை கொண்டிருந்த போது ஜிப்ரில் மூலம் ஆண்டவன் நாயகம் அவர்களுக்கு கீழ்கண்ட அறிவிப்பின் மூலம் அருள் சுரந்தான்.

"இறைவன் உம்மைக் கைவிடவும் இல்லை; வெறுக்கவும் இல்லை. உமது எதிர்காலம் மிகவும் மேன்மையாக இருக்கும். உமக்கு இறைவன் உயர் பதவிகள் அளிப்பான். அநாதையாக இருந்த உம்மை அவன் ஆதரித்து சரியான வழியைக் காட்டினான். நீர் வறுமையுற்ற போது உம்மை அவன் செல்வந்தன் ஆக்கினான். ஆகவே அநாதையைக் கடிந்து கொள்ளாதீர். இரப்போரை வெருட்டாதீர். இன்னும் உம் இறைவனின் அருட் கொடைகளைப் பற்றி அறிந்து கொண்டிருப்பீராக!"

இதன்பின் நாயகம் அவர்களுக்கு தொழுகை பற்றி அறிவிப்பு வந்தது. ஒருநாள் நாயகம் அவர்கள் மக்கா அருகே இருக்கும் ஒரு குன்றில் இருந்தார்கள். அது சமயம் ஜிப்ரில் அவர் முன் தோன்றி தன் குதி காலால் அழுத்தி பள்ளத்தாக்கில் குழி ஒன்று உண்டாக்கினார். அதினின்று நீர் பொங்கி வழிந்தது. அந்த நீரில் கை கால் முகம் முதலியவற்றைக் கழுவி ஜிப்ரில் ஒலூ செய்து கொள்வதை நபிகள் நாயகம் அவர்கள் கவனித்தார்கள். தொழுவதற்கு முன் சுத்தி செய்து கொள்ள வேண்டிய முறை இது என்பதைத் தெரிந்து கொண்டு நாயகம் அவர்களும் ஜிப்ரில் செய்தது போலவே தாமும் கை, கால், முகம் சுத்தம் செய்து கொண்டார்கள். இதன் பின் எப்படித் தொழ வேண்டும் என்னும் முறையை அவர் கற்றுக் கொண்ட பின் ஜிப்ரில் மறைந்து விட்டார். இந்த முறையை நபிகள் நாயகம் அவர்கள் கதீஜா அம்மையாருக்கு முதன் முதலாகக் கற்றுத் தந்தார்கள்.

முதன் முதலாக இஸ்லாம் மதத்தைத் தழுவிய பெண் கதீஜா அம்மையார்தான். ஆனால் முதன் முதலாக இஸ்லாமைத் தழுவிய ஆடவர் யார் என்பதில் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒரு சாரர் அலீ என்பவர் தான் முதலாவதாக இஸ்லாமைத் தழுவியவர் என்றும், மற்றொரு சாரரர் அபூபக்கர்தான் என்றும் கூறுகின்றனர். வேறு சிலர் நபிகள் நாயகத்திடம் பணி புரிந்த 'ஜைத்' என்பவர்தான் என்றும் கூறுகின்றனர்.

நபிகள் நாயகம் அவர்களின் உயர்ந்த பண்புகள்:—

எளிமை, நாவன்மை, நேர்மை, எச்சரிக்கையுடன் இருத்தல், பெருந்தன்மை, தன்னலமின்மை, பிறருக்கு உதவும் பண்பு, உறுதி ஊக்கம், சோர்வின்மை, நம்பிக்கை, நட்பு, நன்றி மறவாத தன்மை, ஆண்டவனின் ஆற்றலிலும் கருணையிலும் அசைக்க முடியாத நம்பிக்கை ஆகிய இத்தகைய பண்புகளை நிறைவாகப் பெற்றவர் நபிகள் நாயகம் அவர்கள்.

நபிகள் நாயகம் அவர்கள் எப்போதும் பள்ளி வாசலை அடுத்திருந்த எளிய அறைகளிலேயே வாழ்ந்தார்கள். எளிய உணவையே உண்டார்கள். எளிய உடையையே, உடுத்தினார்கள். எளிய படுக்கையில் படுத்தார்கள்.

உணவு :—

தம்முன் வைக்கப்பட்டுள்ள உணவை மட்டுமே நாயகம் அவர்கள் சாப்பிடுவார்கள். ஒரு குறிப்பிட்ட உணவைப் பகுவப்படுத்தி கொணருமாறு கூறி நாயகம் அவர்கள் சாப்பிடும் வழக்கம் இல்லை. பலவிதமான உணவு தம்முன் படைக்கப்பட்டால், தாம் சாப்பிட்டு பழக்கமுள்ள உணவை மட்டும் அவர்கள் சாப்பிடுவார்கள். எந்த உணவையும் மட்டம் என்று கூறுவதே கிடையாது. உயர்ந்தது என்று பாராட்டுவதும் கிடையாது. எதை உண்டாலும் ஆண்ட

வனின் திருப்பெயரைச் சொல்லியே அவர்கள் சாப்பிடுவது வழக்கம். சாப்பிட்டு முடிந்ததும் நன்றி சொல்லி ஆண்டவனை துதிக்க அவர் மறந்ததே கிடையாது.

உடை :—

நபிகள் நாயகம் அவர்கள் எப்போதும் எளிமையான பருத்தி ஆடைகளையே அணிவது வழக்கம். கிழிந்துபோன ஆடைகளை நாயகம் தாமே தைத்துக் கொள்ளுவார்.

சாதாரண எளிய படுக்கையிலே நாயகம் அவர்கள் படுத்துக் கொள்ளுவார்கள். பஞ்சணையையோ, பட்டு மெத்தையையோ அவர்கள் விரும்பியதே கிடையாது. பேரீச்ச இலைகள் அடைத்த தோல் மெத்தையில்தான் நாயகம் அவர்கள் படுத்துறங்குவது வழக்கம். சில சமயங்களில் எளிய மரக் கட்டையிலும்கூட படுத்துக் கொள்ளுவார்கள்.

பேச்சு :—

நபிகள் நாயகம் அவர்கள் நாவன்மையில் சிறந்து விளங்கினர். பேசும்பொழுது நாயகம் அவர்கள் அழுத்தமாகப் பேசுவார்கள். திருத்தமாகப் பேசுவார்கள். இனிமையாகப் பேசுவார்கள். அவசியமின்றி நாயகம் அவர்கள் ஒருபோதும் பேசுவது கிடையாது. பேசும்போது நிறுத்தி நிறுத்தி நிதானமாக பேசுவார்கள். கேட்பவர்கள் மனதில் நன்கு பதியும்படியும் புரிந்து கொள்ளும்படியும் பேசுவார்கள். அவர்கள் பேச்சில் கண்ணியமும் கம்பீரமும் இருக்கும். ஆனல் கோபம் இருக்காது. கண்டிப்பு இருக்கும். அதில் கருணை கலந்திருக்கும். ‘இல்லை’ என்றோ ‘முடியாது’ என்றோ அவர்கள் மறுத்துக் கூறியது கிடையாது.

அப்படிச் சொல்ல வேண்டிய சந்தர்ப்பங்களில் நபிகள் நாயகம் அவர்கள் மௌனமாய் இருந்துவிடுவார்கள்.

இஸ்லாம் பரவுவதற்கு நாயகம் அவர்களின் நாவன்மையும், திருக்குரானின் சொல்வன்மையும் பெரிதும் உதவியுள்ளது.

**தன் கையே தனக்குதவி :**

நபிகள் நாயகம் அவர்கள், பிறரை ஏவாமல் தன் சொந்தக் காரியங்களை தாமே செய்து கொள்ளும் வழக்க முள்ளவர். பொதுக்காரியங்களுக்கு மட்டுமே பிறரை தமக்கு உதவியாகப் பணிகளை மேற்கொள்ளச் செய்வார். நபி நாயகம் அவர்கள் வீட்டைப் பெருக்குவார்கள். செருப்பைத் தைத்துக் கொள்ளுவார். ஆட்டின் பாலைக் கறப்பார்கள். ஒட்டகத்தை எண்ணெ தேய்த்துப் பூசுவார்கள். வீட்டு வேலைகளில் மனைவியருக்கு உதவி செய்வார்கள். எந்த நேரத்திலும் சுறுசுறுப்பாக இயங்குவார்கள்.

நடந்து செல்லும் காலத்தில் நபிகள் நாயகம் அவர்கள் பூமியைப் பார்த்துக் கொண்டே செல்லுவார். வழியில் அறிமுகமானவர்களைக் கண்டால் தாமே முந்திக் கொண்டு வாழ்த்துக் கூறுவார்கள்.

**விருந்து :—**

எவர் தம்மை விருந்துக்கு அழைத்தாலும்—அவர்கள் ஏழையானாலும், செல்வந்தரானாலும் அர்த அழைப்பை ஏற்றுக்கொண்டு விருந்துண்ண நாயகம் அவர்கள் செல்லுவார்கள். தம் இல்லத்திற்கு வந்திருக்கும் விருந்தினர்களையும் நாயகம் அவர்கள் பெருந்தன்மையுடனும், கவனத்துடனும் உபசரிப்பார்கள். தன்னைக் கவனித்து உபசரிக்க நாயகம் அவர்கள் தவறவில்லை என்ற நினைப்பு ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஏற்படும் வகையில் நாயகம் அவர்கள் நடந்து கொள்ளுவார்கள்.

தருமம்

சொந்தத்திற்கு எது கிடைத்தாலும் நபிகள் நாயகம் அவர்கள் வைத்துக் கொள்வது கிடையாது. மூன்று தினங்களுக்குள் அதை அவர்கள் தருமம் செய்துவிடுவார்கள். ஒரு முறை நாயகம் அவர்களுக்கு தொண்ணூராயிரம் தங்க நாணயங்கள் கிடைத்தது. அவற்றை விரிப்பில் வைத்து வந்தவர்களுக்கெல்லாம் நாயகம் அவர்கள் கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள். முழுவதும் கொடுத்து தீர்ந்த பின்னரே அவ்விடத்தைவிட்டு நாயகம் அவர்கள் எழுந்தார்கள்.

தருமம் செய்வதை நபிகள் நாயகம் அவர்கள் விரும்பினாலும் தகுதி படைத்தவர்கள் இரந்து உண்பதை பிச்சை வாங்கி வயிறு வளர்ப்பதை நாயகம் அவர்கள் வெறுத்தார்கள்.

முகஸ்துதி:—

முகஸ்துதி செய்பவர்களை நாயகம் அவர்கள் ஆதரிப்பதும் விரும்புவதும் கிடையாது. எவரும் ஆண்டவனைப் புகழ்ந்து பாடவேண்டுமேயன்றி தன்னைப் புகழக் கூடாது என்பதில் கண்டிப்பாக இருந்தார்.

நபிகள் நாயகம் அவர்களுக்கு குழந்தைகளிடம் அளவற்ற ஆசையுண்டு. குழந்தைகளை இறைவனின் நறு மலர்கள்'' என்று வர்ணிப்பார்கள்.

பணிவு:—

பணிவோடும் பண்போடும் நாயகம் அவர்கள் யாருடனும் கலந்து பழகுவார்கள். அதிகாரத் தொனியோடு நாயகம் அவர்கள் யாரையும் அதட்டுவது கிடையாது. ஒருவன் மேன்மையடைய பணிவு என்றும் பண்பு அவசியம் என்பதற்காகத்தான்—நாள்தோறும் ஐந்து முறை

ஒவ்வொருவனும் தொழ வேண்டும் என்று ஆண்டவன் கட்டளையிட்டுள்ளான். பணிவோடு ஆண்டவனை நாளைக்கு ஐந்து முறை தொழ மனிதன் பழகி விட்டால் பிறகு வாழ்க்கையில் பணிவு அவனுக்கு தானே ஏற்பட்டுவிடும். பணிவுள்ள மனிதன் அக்ரமங்களைச் செய்ய மாட்டான். அநியாயங்களையும் செய்ய மாட்டான்.

முன் ஜாக்கிரதை

நாயகம் அவர்கள் முன் எச்சரிக்கையுடன் எக்காரியத்தையும் செய்வார்கள். வந்தபின் காப்பதைக் காட்டிலும் வருமுன் காப்பதே சாலச் சிறந்தது என்பது அவர்களின் எண்ணம். சமயத் துறையிலும் சரி, அரசியல் துறையிலும் சரி நாயகம் அவர்களுக்கு எதிரிகள் பலர் இருந்தனர். அவர்களைச் சமாளிப்பதற்கு அவர் எச்சரிக்கையுடன் இருப்பது மிகவும் அவசியம் ஆயிற்று. ஆகவே அடிக்கடி ஒற்றர்களை அனுப்பி நாயகம் முன்னதாகவே நிலைமையை நன்கு அறிந்து கொள்ளுவார்கள்.

நபிகள் நாயகம் தீர்க்கதரிசி மட்டுமல்ல. சிறந்த ராஜதந்திரியாகவும் விளங்கினார்கள். எது எதை எந்த நேரத்தில் செய்ய வேண்டும், எது எதை எந்த நேரத்தில் விலக்க வேண்டும் என்பதை நன்கு உணர்ந்து கொண்டு அதன்படி நாயகம் அவர்கள் செய்தார்கள்.

நபிகள் நாயகம் அவர்கள் வெங்காயம் வெள்ளைப் பூண்டு முதலியவற்றை விலக்கியிருந்தார்கள். ஆனால் மற்றவர்கள் இவற்றை விரும்பிச் சாப்பிடுவது குற்றமாகாது என்று நாயகம் அவர்கள் கூறினார்கள். வெள்ளரிக்காய் பரங்கிக் காய், முதலியவற்றை நபி நாயகம் அவர்கள் பிரியமாகச் சாப்பிடுவார்கள். ஆனால் அவைதான் வேண்டும் என்று ஆசைபட்டது கிடையாது.

நபிகள் நாயகம் அவர்களின் உடலிலிருந்து கஸ்தூரி மணம் எப்பவும் கமகமவென்று வெளிப்பட்டுக் கொண்டிருக்கும். அத்தர் போன்ற வாசனைப் பொருட்களை பூசிக் கொள்வதில் நாயகம் அவர்களுக்குப் பிரியம் அதிகம். பள்ளி வாசல் பரிசுத்தமாயும், நறுமணத்துடனும் இருக்க வேண்டும் என்பதற்காக நாயகம் அவர்கள் அடிக்கடி சாம்பிராணி போடச் சொல்லுவார்கள்.

வீதியில் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களின் பிரேதம் சென்றாலும் நாயகம் அவர்கள் எழுந்து நின்று மரியாதை செலுத்துவார்கள்.

சுத்தமாயும் தோற்றப் பொலிவுடனும் இருப்பதை நாயகம் அவர்கள் விரும்புவது உண்டு. தாம் அப்படியே இருப்பதுடன் மற்றவர்களும் அவ்விதம் இருப்பதை நாயகம் அவர்கள் விரும்புவார்கள்.

பொது நலத்திற்குக் குந்தகம் விளைவிப்பவர்களைக் கண்டால் நயமாக எடுத்துக் கூறி அவர்களைத் திருத்த நாயகம் அவர்கள் முயலுவார்கள். திருந்தாமல் மீண்டும் மீண்டும் அவர்கள் தொல்லை தந்தால் கோபம் கொண்டு அவர்களை தண்டிப்பார்கள். தனிப்பட்ட முறையில் யாருடனும் நாயகம் அவர்கள் கோபம் கொண்டது கிடையாது. விரோதம் கொண்டதும் கிடையாது.

இத்தகைய நற்குணங்கள் பொருந்திய பெருந்தகை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஹிஜ்ரி 11ம் ஆண்டு ரப்பியுல் அவ்வல் மாதம் 12ம் நாள் திங்கட்கிழமை நண்பகல் கழிந்து காலமானார்கள். நாயகம் அவர்களின் ஆவி உடலை விட்டுப் பிரிந்த சமயம் நாயகம் அவர்களுக்கு வயது அறுபத்து மூன்று முடித்து நான்கு நாட்கள் ஆகியிருந்தது.

நபிகள் நாயகம் அவர்களின் உபதேசங்கள்:—

ஒரு முறை நபிகள் நாயகம் அவர்களை தரிசிக்க மக்கள் திரள் திரளாக குபா தோட்டத்திற்கு வந்திருந்தார்கள். வந்திருந்த அனைவரையும் நபிகள் நாயகம் வரவேற்று, "அன்புச் சகோதரர்களே! அண்டை வீட்டாரை நேசியுங்கள். அவர்களுடன் ஒற்றுமையாய் வாழுங்கள். ஏழை எளியவர்க்கு உதவி செய்யுங்கள். உறவைப் பலப்படுத்திக் கொள்ளுங்கள். இரவு நேரத்தில் மன அமைதியுடன் இறைவனைத் தொழுங்கள். இப்படி நீங்கள் வாழத் தெரிந்து கொண்டால் சொர்க்கம் இன்பம் உங்களுக்கு எளிதில் கிடைக்கும்" என்றார்.

நபிகள் நாயகம் அவர்கள் ஒரு முறை அராபத் மைதானத்தில் கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்கள் முன்பு கீழ்கண்ட உபதேசங்களைச் செய்தார்கள்.

"மக்களே! இன்று புனிதமான மாதம் புனிதமான நாள். இன்று உங்களின் பொருளும் உயிரும்; பாதுகாப்புடன் இருப்பதைப் போலவே உங்கள் வாழ்நாள் பூராவும் இருக்க ஆண்டவன் அருள் புரியட்டும். நீங்கள் ஆண்டவனைச் சந்திக்க நேரும் போது நீங்கள் செய்தவற்றைப் பற்றி ஆண்டவன் உங்களை விசாரிப்பான். யாரும் அமானிதப் பொருட்கள் வைத்திருந்தால் அதை உரியவரிடம் சேர்த்து விடுங்கள். வட்டி வாங்குவது கூடாது என்று தடை செய்யப்பட்டிருக்கிறது. பழிக்குப் பழி வாங்கும் எண்ணத்தை விட்டு விடுங்கள். நீங்கள் தவறு செய்யாதீர்கள். பிறரும் உங்களுக்கு தவறு செய்யமாட்டார்கள். ஆண்டவன் கட்டளை இட்டு இருப்பதை எல்லாம் நீங்கள் தவறாது நிறைவேற்றுங்கள். அவன் எவற்றையெல்லாம் செய்யக் கூடாது என்று பணித்திருக்கின்றானோ, அவற்றை நீங்களும் செய்யாதீர்கள்" கற்புள்ள மனைவியைக் காப்பாற்ற கணவன் கடமைப்பட்டுள்ளான். மனைவிக்குத் தேவையான உண்டி உடை கொடுத்து அன்புடன் ஆதரி

யுங்கள். கற்பு நெறி தவறிய மனைவியை தண்டியுங்கள், விலக்கி வையுங்கள். ஆண்டவன் உங்களிடம் ஒப்படைக்கப் பட்ட அடைக்கலப் பொருள் அவள் உங்கள் மனைவி. ஆகவே அவர்களிடம் அதிகாரம் செலுத்தும்போது அதை அன்புடன் செலுத்துங்கள்.

ஆண்டவனுடைய திருக்குரானும், அவனுடைய தூதரின் ஒழுக்கமும் உங்களுக்கு இனி வழிகாட்டிகளாக இருக்கும்.

ஒவ்வொரு முஸ்லிமும் மற்றொரு முஸ்லிமைத் தன் சொந்த சகோதரன் போல் நேசிக்க வேண்டும். சகோதரன் மனமுவந்து விரும்பி தருவதை மட்டும் ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று கூறினர்.

இஸ்லாமிய அரசியல் முறை:—

இஸ்லாமிய அரசியல் திட்டம் மூன்று அம்சங்களை அடிப் படையாகக் கொண்டுள்ளது. அவை ஏகத்துவம் (தௌஹீது) ரிஸாலத் (இறை தூதுவம்) கிலாபத் (இறை பிரதி நிதித்துவம்) இந்த மூன்று அடிப்படை விஷயங்களை புரிந்து கொள்ளாமல் இஸ்லாமிய அரசியல் அம்சங்களை அறிந்து கொள்வது மிகக் கடினம்.

இந்த உலகமும் அதிலுள்ள உயிருள்ள, உயிரற்ற ஆகிய அனைத்தையும் படைத்தவன் ஒரே இறைவன்தான் என்பது 'ஏகத்துவம்'. இப்பேரரசின் ஆட்சி அவனிடம் உள்ளது. ஒன்றை ஆணையிடவும் மற்றதை தடுக்கவும் கூடிய உரிமை அவன் ஒருவனுக்கே உண்டு. வணக்கமும் பணிவும் அவன் ஒருவனுக்கே உரியவை. வாழ்க்கையில் எத்தனை வகையுண்டோ, அத்தனை வகைகளும் நடந்து உடலுறுப்புக்கள், கல்வியறிவு, இந்த உலகில் இயங்கிக் கொண்டிருக்கும் எல்லாப் பொருள்களின் மீதும் நமக்குள்ள

வெளிப்படையான அதிகாரம் ஆகிய எதுவுமே நம்மால் உண்டாக்கப் பட்டவையல்ல. நமக்கு நாமே சொந்தமாக பெற்றுக் கொண்டதுமல்ல, அவை எல்லாம் நமக்கு இறைவனால் அருளப்பட்டவை. அந்த ஆண்டவனுக்கு நிகர் அந்த ஆண்டவன்தான். ஆதலால் நாம் படைக்கப்பட்டிருப்பதின் நோக்கமும் லட்சியமும் என்ன என்பது பற்றித் தீர்மாணிப்பதோ, நம் உலக அதிகார வரம்பை வகுத்துக் கொள்வதோ நம் பொறுப்பல்ல. நம் சார்பில் அவற்றைத் தீர்மானிக்க வேறு எவருக்கும் உரிமை கிடையாது. அந்த உரிமை நம்மைப் படைத்த அந்த ஆண்டவனுக்கேதான் உண்டு. இந்த ஏகத்துவக் கொள்கை மனிதனின் ஆட்சி உரிமையை (Sovere ignity) அடியோடு நிராகரிக்கிறது. அந்த ஆட்சி உரிமை இறைவன் ஒருவனுக்குத்தான் உண்டு. அவனின் ஆணைதான் சட்டமாகும்.

"ரிஸாலத்" இறை தூதுத்துவம்

இறைவனின் சட்டத்தை எதன் மூலமாக மக்கள் பெறுகின்றார்களோ அதுதான் 'ரிஸாலத்' இறை தூதுத்துவம் எனப்படுகிறது. அந்த வழியாக இரண்டு விஷயங்கள் தெளிவாக்கப் படுகிறது.

a) இறைவன் தன்னுடைய சட்டத்தை விவரித்துக் கூறுகின்ற வேதம். b) இறைவனால் அனுப்பப்பட்டவர், என்ற அந்தஸ்தில் இறை தூதர் அந்த இறை வேதத்திற்கு தமது சொல்லாலும் செயலாலும் வழங்கிய அதிகார பூர்வமான விளக்கங்களும் வியாக்யானங்களும். மனித வாழ்க்கை முறை அமைக்கப்படவேண்டிய கொள்கைகள் அனைத்துமே இறை வேதத்தில் அமைக்கப்பட்டுள்ளன. இறை வேதம் எடுத்துரைக்கும் கொள்கைகளின் நோக்கை அடைவதற்கு நடைமுறையில் ஒரு வாழ்க்கை முறை அமைத்து அதன்படி மக்கள் நடத்தச் செய்து அதற்கு தேவையான முழுமையான விபரங்களையும் தந்து இறை தூதர் நமக்கு ஒரு முன்

மாதிரியை அமைத்துவிட்டார். இவ்விரண்டின் இணையாக்கத்துக்குத்தான் இஸ்லாமிய மரபில் 'ஷரீ அத் 'என்று கூறுகின்றனர். இதை அமைப்பு வழியாகக் கொண்டுதான் "Constitution" இஸ்லாமிய அரசு நிறுவப்பட்டுள்ளது.

கிலாபத் (இறை பிரதிநிதித்துவம்)

'கிலாபத்' என்பது அரபுச் சொல். அதற்கு 'பிரதிநிதித்துவம்' என்று பொருள். மனிதன் இவ்வுலகில் இறைவனின் பிரதிநிதியாக உள்ளான் என்பதே இஸ்லாமிய கண்ணோட்டத்தின்படி இவ்வுலகில் மனிதனுடைய அந்தஸ்தாகும். இறைவனின் பிரதிநிதி என்று கூறும்போது இறைவனால் தனக்கு அளிக்கப்பட்டுள்ள சக்திகளின் மூலம் வகுத்தளிக்கப்பட்டுள்ள வரம்புக்குள் நின்று இவ்வுலகில் இறையதிகாரத்தை (Divine Authority) பயன்படுத்துமாறு மனிதன் கோரப்படுகிறான்.

இஸ்லாத்தில் மக்களாட்சி :—

இஸ்லாமிய சமூகத்தில் ஒவ்வொருவரும் கிலாபத்தில் உரிமையைப் பெறுகின்றனர், அதேசமயம் அதன் பொறுப்பையும் கடமையையும் ஏற்றுக் கொள்ளுகின்றனர். அதிகாரங்களைப் பங்கு கொள்வதில் எவரொருவரும் மற்றவரைவிட முன்னுரிமையும் பெறமாட்டார். மற்றவரின் உரிமையை அபகரிக்கும் அதிகாரத்தையும் பெறமாட்டார். இச்சமூகத்தில் உள்ள அனைவரின் விருபப்படியே அரசாங்கத்தை நிர்வகிக்கும் ஆட்சிக்குழு அமையும். இத்தகைய மக்கள் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட அதிகாரத்திலிருந்து ஒரு பங்கை ஆட்சிக்குழுவிடம் ஒப்படைக்கின்றனர். ஆட்சிக்குழு அமைவதில் அந்த மக்களுடைய கருத்துத்தான் முடிவானதாக இருக்கும். அவர்களின் விருப்பத்திற்கும் ஆலோசனைக்கும் ஏற்பத்தான் அந்த ஆட்சிக்குழு செயல்படும். அவர்களுடைய நம்பிக்கையைப் பெற்றவர்கள் எவரோ, அவரே அவர்களுடைய

பிரதிநிதியாக (கலீபாவாக) ஆட்சிப் பொறுப்பை ஏற்பார். அவர்களுடைய நம்பிக்கையை இழந்தவர் பதவியைவிட்டு விலகுவார். இந்த விஷயத்தில் இஸ்லாமிய அரசியல்முறை முழுமையான மக்களாட்சி ஒரு இலக்கணமாக விளங்கு கிறது. இஸ்லாமிய ஆட்சி முறைக்கும் மேற்கத்திய ஆட்சி முறைக்கும் சில அடிப்படை வேறுபாடுகள் காணப்படு கிறது. மேற்கத்திய மக்களாட்சி முழு அதிகாரத்தையும் கொண்ட ஒன்று, அது தன் அதிகாரங்களைக் கட்டுப்பாடின்றி தன்னிச்சையாகப் பயன்படுத்திக் கொள்கிறது. ஆனால் இஸ் லாமிய மக்களாட்சியோ இறை கட்டளையைப் பின்பற்றி நடக் கிறது. இறைவனின் போதனைகளுக்கு ஏற்ப அவன் வகுத்த எல்லைகளுக்குள் நின்று தம் அதிகாரத்தை செலுத்து கிறது.

### "இஸ்லாமிய சமூக ஒழுங்கு முறை :—"

திருக்குரானில் அனேக இடங்களில் உறவினர்களை சிறந்த முறையில் நடத்துமாறு வற்புறுத்துகின்றது. தன்னு டைய உறவினர்களை ஆதரிக்க மறுப்பவனையும் அவர்களை மோசமாக நடத்துபவனையும் இஸ்லாம் மிகவும் வெறுப் புடன் நோக்குகிறது. ஆனால் அதற்காக இஸ்லாம் ஒரு வனின் உறவினர்கள் விஷயத்தில் அளவுக்கு அதிகமான தாராளப்போக்கில் இருப்பதாகவோ பாரபட்சமாக இருப்ப தாகவோ அர்த்தமல்ல. ஒருவனுடைய உறவினர்கள் விஷ யத்தில் அப்படிப்பட்ட பாரபட்சமும் ஆதரவும் அநீதிக்கு வழிகோலும் அது இஸ்லாத்திற்கும் நேர்மாறானதாகும். அத்தகைய செயலை (ஜாஹிலியத்) அஞ்ஞானம் என்று இஸ்லாம் கண்டிக்கிறது. அதைப் போன்றே ஒரு அரசாங்க அதிகாரி அல்லது பொது தர்ம கர்த்தா பொதுச் செலவில் தன் உறவினர்களை ஆதரிப்பதும் அரசு அலுவலகங்களில் தமக்கு வேண்டியவர்களுக்கு பாரபட்சம் காட்டுவதும் இஸ்லாமிய கட்டளைகளுக்குப் புறம்பானதாகும்.

சுற்றத்தார்கள் மற்றும் அண்டை வீட்டுக்காரர்கள்பற்றி இஸ்லாம் விரிவாக பல நற்கருத்துக்களைத் தெரிவிக்கிறது. ஒருவனுடைய பாரம்பரியச் சொத்துக்களில்கூட அவரின் அண்டை வீட்டார் வாரிசுகளாக்கப்பட்டு விடுவார்களோ என்று கருதுகின்ற அளவிற்கு ஜிப்ரில் (அலை) அவர்கள் அண்டை வீட்டினரின் உரிமைகளைப் பற்றித் தமக்கு மிகமிக அதிகமான அழுதத்தோடு வலியுறுத்தியிருப்பதாக பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். ஒரு முஸ்லீம் தன் குழந்தைகளுக்காக பழவர்க்கங்கள் வாங்கி வரும்போது தன் அண்டை வீட்டுக்காரருக்கும் அவற்றில் சிலவற்றை அனுப்ப வேண்டுமென்றும் அல்லது குறைந்த பட்சம் அவற்றின் உளுத்த தோலையேனும் தன் வீட்டு வாசலுக்கு வெளியே எறியாமலும் அதன் மூலம் மற்றவர்களின் மனதைக் கஷ்டப் படுத்தாமலும் இருக்க வேண்டுமென்று அறிவுரை கூறும் அளவுக்கு சுற்றத்தார் பற்றிய நல்லொழுக்கத்தை பெருமானார் (ஸல்) அவர்கள் வலியுறுத்தியுள்ளார்கள். ஒருவனை நல்லவன் என்று அவனுடைய அண்டை வீட்டார்கள் கருதினார்களேயானால் உண்மையில் அவன் நல்லவனே, ஒருவனை தீயவன் என்று அவர்கள் கருதினார்களேயானால் அவன் தீயவனே'' என்றும் ஒருசமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### "இஸ்லாத்தின் பொருளியல் கொள்கை"

நேர்மையான வழிகளில் ஈட்டப்பட்ட செல்வத்தின்மீது ஒருவனுக்குள்ள சொத்துரிமைகளை இஸ்லாம் அங்கீகரிக்கிறது. எனினும் இந்த உரிமைகள் ஒரு வரம்பிற்கு உட்படாமலில்லை. ஒருவன் அனுமதிக்கப்பட்ட வழிகளில் சம்பாதித்த தமக்குரிமையான செல்வத்தை நேர்மையான வழிகளிலேயே முறையான காரியங்களுக்கே செலவிட வேண்டும் என்று நிபந்தனைகள் உள்ளது. இத்தகைய கட்டுப்பாடுகளை விதித்ததின் மூலமாக ஒருபுறம் தனிப்பட்ட மனிதனை

நேர்மையானவராவதற்கு இஸ்லாம் துணை புரிகின்றது. மறுபுறம் ஆடம்பரமான வாழ்வு வாழ்ந்து செல்வத்தை விரயம் செய்வதையும் அது தடை செய்கிறது. ஒருவன் தன் அந்தஸ்தையும் செல்வாக்கையும் காட்டிக்கொள்வதில் வரை முறைகளை மீறவோ மற்றவர்களைவிட தன்னை மேலான பிறவியாக எண்ணி நடந்து கொள்ளவோ இயலாது. சில சட்ட விரோதமான வீண் விரயமான செலவினங்கள் தெளி வாகவும் திட்டவட்டமாகவும் தடை செய்யப்பட்டிருக் கின்றன. ஒருவன் தன் நேர்மையான நியாயமான தேவை களைப் பூர்த்தி செய்தபின்னர் எஞ்சியுள்ள செல்வத்தை சேமித்து வைத்துக் கொள்ள இஸ்லாம் அனுமதிக்கிறது. அந்த செல்வத்தைப் பயன்படுத்தி மேலும் அதிகமான செல்வம் திரட்டவும் அவனுக்கு உரிமை அளித்திருக்கிறது. எனினும் இச்செயல்களுக்கு சில கட்டுப்பாடுகள் உண்டு. குறைந்த பட்சத்தொகைக்கு அதிகமாக அவன் சேமித்து வைத்திருக்கும் செல்வத்திலிருந்து ஆண்டுக்கு $2\frac{1}{2}$ சத விகிதம் அவன் ஜகாத் அளிக்க வேண்டும். அத் தொகையை அவன் ஏதேனும் ஒரு தொழிலில் முதலீடு செய்ய விரும்பினால் சட்டத்தில் அனுமதிக்கப்பட்டுள்ள தொழில்களில்தான் முதலீடு செய்ய முடியும். சட்ட பூர்வ மான தொழிலை தானே தனித்துச் செய்ய எந்த மனிதனுக் கும் உரிமையுண்டு. அதைப்போல லாப நஷ்டத்தில் பங்கு என்ற அடிப்படையில் தனது மூலதனத்தை அவன் பிறருக் கும் கொடுக்கலாம். இந்த வரம்பில் செயல்பட்டு எவனும் கோடீஸ்வரன் ஆவதை இஸ்லாம் ஆட்சேபிக்கவில்லை. மாறாக அதனை இறைவனின் அருட் கொடை என்றே இஸ்லாம் கருதுகிறது. ஆனால் சமுதாயம் முழு நலனையும் கருதி தனிப்பட்டவர்களின்மீது இரண்டு நிபந்தனைகளை இஸ்லாம் விதிக்கிறது. முதலாவது அவன் தன் வர்த்தகப் பொருளின்மீதும், விவசாயப் பொருட்களின்மீதும் ஜகாத் தும் உஷ்ரும் கொடுத்தாக வேண்டும். இரண்டாவது வியா பாரம், தொழில் விவசாயம் ஆகியவற்றால் தன்னோடு கூட்

டாகச் சேரும் கூட்டாளிகள் விஷயத்திலும் தன்னிடம் வேலை செய்வோரிடத்திலும் அரசாங்கத்திடமும் அவன் நேர்மையாகவும், நாணயமாகவும் நடந்து கொள்ள வேண்டும். மேலும் இந்த சட்டபூர்வமான எல்லைக்குள் நின்று சேமிக்கப்படும் செல்வத்தை பல காலத்திற்கு ஒரே இடத்திலோ அல்லது ஒரே அம்சத்திலோ முடக்கி வைப்பதையும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை. தன்னுடைய வாரிசுச் சட்டத்தின் மூலம் இஸ்லாம் அந்தச் செல்வத்தை ஏராளமானவர்களிடையே பரம்பரை பரம்பரையாக பரவச் செய்கிறது.

இஸ்லாமிய ஆன்மீக முறை:—

இது ஐந்து அடிப்படைகளின் மீது அமைந்துள்ளது. முதலாவது தொழுகையாகும். நாளொன்றிக் ஐந்து தடவை மனிதனை இறைவனுடன் சேர்த்து வைத்து இறை நினைவை அவனுக்குப் புதுப்பித்து இறையச்சத்தைத் தூண்டி இறை பக்தியை வளர்த்து மீண்டும் மீண்டும் இறைவனின் கட்டளைகளை நினைவு படுத்தி அதன் மூலம் இறைவனுக்கு அடிபணிந்து நடப்பதற்கு அவனுக்கு பயிற்சியளிக்கிறது. இத்தொழுகையை தனித்து நிறைவேற்றக் கூடாது. அவற்றில் சிலவற்றை சமுதாயத்தினர் ஒன்று கூடித் தொழ வேண்டும். அதன் மூலம் ஆன்மீக வளர்ச்சி உருவாவதற்கும் முழுச் சமுதாயமும் சமுகமும் ஆயத்தமாகலாம். இஸ்லாத்தின் ஆன்மீக உயர்வு வழியில் பயிற்சி பெற தனிப்பட்டவர்களுக்கும் சமூகத்திற்கும் இது ஒரு கருவியாகும்.

அடுத்தது நோன்பு. ஒவ்வொரு ஆண்டும் ஒரு மாதம் பூராவும் தனிப்பட்ட ஒவ்வொருவனுக்கும் முஸ்லிம் சமுதாயம் முழுமைக்கும் இறையச்சம் தன்னடக்கம் ஆகியவற்றில் அது பயிற்சி அளிக்கிறது. பணக்காரனாயினும் சரி, ஏழையாயினும் சரி சமூகம் பூராவுமே பசியின் கொடுமையை அனுபவித்து உணரவும், இறையன்பைப் பெற

எத்தகைய கஷ்டங்களையும் தாங்கிக் கொள்ள சித்தமாக இருக்குமானால் அது மக்களை ஆயத்தப் படுத்துகின்றது.

மூன்றாவது ஜகாத். இது முஸ்லீம்களிடையே அனுதாபம் ஒத்துழைப்பு செல்வத் தியாகம் ஆகிய உணர்வுகளை வளர்க்கின்றது. ஜகாத் என்பதின் உண்மையான பொருள் தூய்மைப் படுத்தலும் பெருந்தன்மைப் பண்பை வளர்த்தலும் என்பதாகும். இச்சொல்லைக் கொண்டதன் மூலம் இறை பக்தியினால் தூண்டப்பட்டு தன் சகோதரர்களுக்குப் பண உதவி செய்யும் ஒருவனுடைய ஆன்ம பரிசுத்தமும் மேன்மையும் அடையும் என்ற உண்மையை மனிதனுக்கு உணர்த்த இஸ்லாம் விரும்புகிறது.

நான்காவது 'ஹஜ்' இறைவனை வணங்கும் அடிப்படையில் இறை நம்பிக்கையுள்ளவர்களிடையே அகில உலக சகோதரத் துவத்தை இது ஊட்டி வளர்க்கிறது.

கடைசியாக 'ஜிஹார்த்' அதாவது எண்டிசையும் இறை சொல்லைப் பரப்பவும், அதனை மிஞ்சியது எதுவுமில்லை என்று நிலை நாட்டவும் இஸ்லாத்திற்குச் செல்லும் பாதையில் உள்ள எல்லாத் தடைகளையும் அறுத்தெரியவும் தன் நாவைக் கொண்டோ எழுதுகோலைக் கொண்டோ இதர சாதனங்கள் அனைத்தையும் கொண்டோ ஒருவன் தனக்கு எவ்வளவு அதிகமாக முடியுமோ அவ்வளவு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதாகும். இறைவனுக்காக தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் வாழ்வினை ஒருவன் வாழ வேண்டும் அதற்காக தன் உயிரைத் தத்தம் செய்யவும் தயாராக வேண்டும் என்பதே இதன் பொருள். இத்தகைய ஆன்மீக முறையைத்தான் இஸ்லாம் பேணி வளர்க்க விரும்புகின்றதே தவிர சமூக வாழ்வை வெறுத்து ஒதுங்கி ஓடும் முறையை அல்ல. சமூக வாழ்க்கையை ஏற்றுக் கொண்டு நல்லொழுக்கம், இறையச்சம் ஆகியவற்றின் மூலம் அதனை திருத்தி அமைக்க வேண்டும் என்பதுதான் இஸ்லாத்தின்

நோக்கமேயன்றி சமூக வாழ்க்கையைத் துறப்பு அல்ல. இதுதான் இஸ்லாமிய ஆன்மீக முறையின் தனிச் சிறப்புக்களாகும்.

வாழ்வைப் பற்றியும் ஒழுக்கவியல் பற்றியும்
இஸ்லாத்தின் கொள்கைகள்:—

இந்த உலகம் பூராவும் ஓரே ஒருவனாகிய இறைவனால் படைக்கப்பட்டது, என்பதுதான் இஸ்லாத்தின் கருத்தாகும். அவனே அதனைப் படைத்தான். அவனே அதன் தனிப் பெரும் தலைவன்—எஜமானன். அவனுடைய தெய்வீகக் கட்டளைகளின்படியே இந்தப் பிரபஞ்சம் பூராவும் இயங்கிக் கொண்டிருக்கிறது. எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன், யாவும் தெரிந்தவன் அவனே. அவன் எவ்விதக் குறைபாடோ, தவறோ பலவீனமோ, குற்ற குறையோ, இல்லாதவனாகவும் எல்லா வகைகளிலும் பரிசுத்தமானவனாகவும் இருக்கின்றான். அவனுடைய இறைமை பாரபட்சமோ, அநீதியோ இல்லாதது. மனிதன் அவனுடைய பிறவி அடிமைதான். அதாவது அவனுக்குப் பணிந்து பணிவிடை செய்யப் பிறந்தவன்தான் மனிதன்.

மனிதனுக்குப் பொருத்தமான வாழ்க்கை நெறி இறைவனுக்குப் பரிபூரணமாக பணிந்து வாழ்வதேயாகும். எவ்வாறு பணிய வேண்டும் எவ்வாறு கீழ்ப்படிய வேண்டும் என்ற முறைகளை நிர்ணயிப்பது மனிதனின் பொறுப்பல்ல. அது இறைவனின் அதிகாரத்திற்கு உட்பட்டதாகும். இறைவன் மனிதனுக்கு எஜமானாக இருப்பதால மனித குலத்திற்கு நேர்வழி அறிவித்தான். இந்த இறைவழி காட்டுதலைக் கொண்டு தன் வாழ்க்கை நெறியை வகுத்துக் கொள்ள வேண்டியது மனிதனின் கடமையாகும். தன வாழ்வில் தான் செய்த காரியங்கள் அனைத்திற்கும் இறைவனிடம் பதில் கூற வேண்டிய காலம் மறுமையில் தானே தவிர இம்மையில் இல்லை. இம்மையானது மறுமையில் வெற்றி பெறுவதற்கான தேர்வுக் கூடமாகும். இவ்வுலகில்

மனிதனின் குறுகிய வாழ்வானது அந்த மிகப் பெரிய தேர்வில் அவன் வெற்றி பெறுவதற்கு அருளப்பட்ட ஒரு வாய்ப்பாகும். மறுமையில் இறைவனின் அன்பையும் அருளையும் பெற வேண்டும் என்ற குறிக்கோளையும் நோக்கத்தையும் மனிதனின் அனைத்து முயற்சிகளும் செயல்முறைகளும் மைய்யமாகக் கொண்டு சுழல வேண்டும். இந்த பரீட்சையின் போது ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய நம்பிக்கைகளுக்கும தானே பொறுப்பாளியாகின்றான். அவனுடைய எல்லா ஆற்றல்களும் திறமைகளும் இத் தேர்வில் சோதிக்கப்படுகின்றன. இப்பிரபஞ்சத்தில் உள்ள படைப்பினங்கள் அனைத்துடனும் அவன் எவ்வாறு நடந்து கொண்டான் என்று பார பட்சமின்றி கணிக்கப்படுகிறது. பூமியின் ஒவ்வொரு அணுவின் மீதும் காற்றின் மீதும் நீரின் மீதும் மண்ணின் மீதும விண்ணின் மீதும் மனிதனின் உள்ளத்தின் மீதும் எந்த மாபெரும் இறைவன் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கின்றானோ அவனே மனிதனுடைய உள்ளுணர்வுகள், எண்ணங்கள், நோக்கங்கள், செயல்கள் ஆகியவற்றைப் பற்றிய சரியான முழுமையான கணக்கு வைத்து, மனிதனுடைய நடவடிக்கைகள் அனைத்தைக் குறித்தும் தீர்ப்பு வழங்க இருக்கின்றான்.

இஸ்லாம் உலகாயத வாழ்க்கைக்கும், ஆத்மீக வாழ்க்கைக்கும் இடையில் எந்தவித பிரிவினையும் செய்யாமல் மனிதன் தன் சக்தி முழுவதையும் பயன்படுத்தி ஆக்ககரமான முறையில் வாழக்கையை சீர் அமைக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறது. அதன் போதனைகள் அனைத்தும் மனிதனின் ஆத்மீகம்—இவ்லௌகீகம் ஆகிய இரு தேவைகளை நிறைவு செய்யும வகையிலே அமைந்துள்ளன. ஆகவே கீழ்க்கண்டவாறு இறைவனை இறைஞ்சும்படி குர் ஆன் நமக்கு அறிவுறுத்துகிறது.

*எங்கள் இறைவா! எங்களுக்கு இம்மையிலும் நன்மை அளிப்பாயாக! மறுமையிலும நனமையளிப்பாயாக......!*

—அல் குர் ஆன் 2: 201.

# கிருஸ்துவ மதம்

ஏறக்குறைய 1982 ஆண்டுகளுக்கு முன் பாலஸ்தீன நாட்டில் அக்காலத்தில் ஏரோது என்பவன் ஆட்சி புரிந்து வந்தான். அவன் ரோமானியச் சக்ரவர்த்திக்குட்பட்ட சிற்றரசன். சக்ரவர்த்தி அகஸ்டஸின் ஆணைப்படி ரோம சாம்ராஜ்யம் எங்கும் ஜனத்தொகை கணக்கு எடுக்கப்பட்டு வந்தது. அதில் தன் பெயரைப் பதிவு செய்வதற்காக யோசேப்பு என்ற யூதர் இனத்தைச் சேர்ந்த ஒரு தச்சனும் அவன் மனைவியும் நாஜரேத் நகரிலிருந்து பெத்லஹேம் என்ற நகருக்குக் கிளம்பிச் சென்றனர். கர்ப்பமாக இருந்த அவன் மனைவி மரியம் போன இடத்தில் ஒரு அழகான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அங்கே இருந்த இட நெருக்கடியில் இந்த ஏழைகளுக்குப் பிரயாணிகள் விடுதிகளில் எங்குமே தங்க இடம் கிடைக்கவில்லை. இதனால் அவர்கள் பிறந்த குழந்தையை ஒரு துணியில் சுற்றி எடுத்துக்கொண்டு மாட்டுத் தொழுவத்தில் தங்கி அங்கே இருந்த கவணையில் வைத்துக் காக்க வேண்டி வந்தது. இவ்வளவு கஷ்டமான சூழ்நிலையில் பிறந்த குழந்தைக்கு அவர்கள் தம் வழக்கப்படி எட்டாம் நாளன்று இயேசு என்று பெயரிட்டார்கள். ஒரு சில நாட்களுக்குப் பிறகு மரியமும் யோசேப்பும் குழந்தையை எடுத்துக்கொண்டு எருசலம் சென்றார்கள். அந்தக் காலத்தில் அந்நாட்டில் தலைப் பிள்ளையை பெற்றோர் கோயிலுக்கு எடுத்துச் சென்று கடவுளின் திருவடிகளில் கிடத்துவது வழக்கம். இயேசுவும் இவ்வாறு கிடத்தப்பட்டார். இயேசுவும் நாளொரு

மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். யோசேப்பும் மரியமும் ஆண்டுக்கு ஒருமுறை எருசலத்திற்கு யாத்திரை செல்லுவார்கள். அப்போதெல்லாம் இயேசுவும் உடன் செல்லுவார். இயேசுவுக்கு பன்னிரெண்டு வயதாகும்போது இயேசு அவ்வாண்டு தம் பெற்றோருடன் செய்த யாத்திரையில் எருசலத்தில் இரண்டு நாட்கள் தங்கி புரோகிதர்களுடன் சமயவாதம் செய்தார். சிறுபிராயம் முதலே அவருக்கு சத்தியத்தைத் தேடிக் காண்பதில் பெருவேட்கை இருந்தது.

**உபதேசம் பெற்றது :-**

இயேசுவுக்கு முப்பது வயதானபோது யாரோ எவரிடம் அருகாமையிலிருந்த காட்டில் ஜார்டன் ஆற்றின் கரையில் ஒரு மகான் வந்திருப்பதாகவும், அவர் பெயர் யோவான் **(John)** என்னும் எவ்வளவோ பேர் அவரை அணுகி உபதேசம் பெற்று வருவதாகவும் சொன்னார். இதைக் கேட்டதும் இயேசுவுக்கு அந்தப் பெரியவரை தரிசித்துவர வேண்டுமென்ற ஆவல் உண்டாகி விடவே யோவானை நாடிச் சென்றார்.

யோவான் தம்மிடம் வருகின்றவர்களிடமெல்லாம் "இப்போது இப்புவியில் பரமனின் ஆட்சி தொடங்கும் சமயம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. ஆண்டவனின் ஆட்சியில் மக்கள் அனைவரும் சரிசமம் என்பதை ஒவ்வொரு மனிதனும் உணர்ந்து கொள்வான், எவனும் தன்னை மற்றவனைவிட உயர்ந்தவனென்றோ, எவனும் தன்னைக் காட்டிலும் கீழானவனென்றோ நினைக்க மாட்டான். ஆகையால் இனி அனைவரும் மற்ற அனைவரிடமும் நேர்மையாக நடந்து கொள்ளவும் வேண்டும். இவ்வாறு வாழ்ந்து பாவங்களைத் தவிர்த்தால்தான் இப்புவியின் மீது ஆண்டவனின் ஆட்சி தோன்றும்' என்று கூறி வந்தார்.

அவரை அணுகும் இராணுவ வீரர்களிடம், "பிறர் பொருளைப் பறிக்காதீர்கள். போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து, ஆண்டவன் உங்களுக்கு அளித்திருப் பதைக் கொண்டு மன நிறைவு கொள்ளுங்கள், எவரையும் திட்டவோ தூஷிக்கவோ வேண்டாம்." என்று கூறுவார். அப்படியானால் நாங்கள் என்ன செய்வது கேட்பவர்களுக்கு யோவான் "இரண்டு சட்டைகள் வைத்திருப்பவர் அதில் ஒன்றை சட்டையே இல்லாதவனுக்குக் கொடுத்துவிடுங்கள். உணவு வைத்திருப்பவர் உணவே இல்லாதவனுக்கு அளித்து மகிழுங்கள்" என்று கூறிவந்தார்.

தம்மை அணுகும் செல்வந்தர்களிடம், யோவான், "நீங்கள் ஏழை எளியோரைத் துன்புறுத்தாதீர்கள், அவர் களிடம் உள்ளதைப் பறிக்காதீர்கள்" என்பர். யோவான் தன்னை நோக்கி வருகின்றவர்களிடம் "நற்காரியங்களைச் செய்யுங்கள்; வாழ்க்கையை திருத்தி செம்மையாக்கிக் கொள்ளுங்கள்; இல்லையேல் காய்க்காத காட்டுமரம் விறகுக் காக வெட்டி வீழ்த்தப்படுவதுபோல உங்கள் வாழ்க்கையும் வீணே பாழாகும்" என்று உபதேசித்து வந்தார். நாங்கள் எங்கள் வாழ்க்கையை மாற்றிக் கொள்ளுகின்றோம். தீய வழியைவிட்டு விலகி சன்மார்க்கத்தில் செல்லுகிறோம்"என்று சொல்லுகின்றவர்களை அவர் ஜார்டன் ஆற்றில் முழுக் காட்டி "உங்களை நீரினால் புனிதமாக்கி விட்டேன். உங்கள் அகத்தில் பொதிந்துள்ள தேவனின் சக்தி உங்களிடமுள்ள மானசக் கழுவி உங்களை முற்றிலும் புனிதமாக்கி வீடும்" என்று நல்லாசி கூறி அனுப்பினார். இவற்றையெல்லாம் கவனித்த ஏசுவுக்கு இவை யாவும் மிகவும் பிடித்தன. இதனால் அவரும் அந்தப் பெரியவரிடம் உபதேசம் பெற்றார். உபதேசம் பெற்ற அவர், அவரது உபதேசங்கள் குறித்து தாமே நன்கு சிந்தித்து தெளிவு பெறும் பொருட்டு காட்டிலேயே தங்கிவிட்டார். யோவானின் உபதேச மொழி கள் குறித்து இயேசு பல நாட்கள் ஆழ்ந்து சிந்தனை செய்

தார். யோவான் கூறிய மொழிகளில் காரண காரியத்தை வெகுவாக அலசி ஆராய்ந்தார். இறுதியில் தாமும் கடவுளின் விருப்பப்படி மக்களின் பணியில் இறங்கி இறைவன் விருப்பத்தை நிறைவேற்றுவதென்று முடிவு செய்தார்.

இதன்பின் இயேசு பல இடங்களுக்கும் சென்று நல்லுரைகள் வழங்கலானார். அவர் தாம் போகுமிடங்கள் அனைத்திலும், "ஆண்டவனின் ராஜ்யம் எங்கோ வெகுதொலைவில் இல்லை: அது நம் ஒவ்வொருவர் மனதிலும் உள்ளது. நாம் விரும்பினால் நாம் ஆன்மாவின் உள்ளே அதைக் காணலாம். நாமேதான் அதை அங்கே நிறுவ வேண்டும். நாம் நம்மை மாற்றிக் கொண்டுவிட்டால் கடவுளின் ராஜ்யம் நம்முன் அமைந்துவிடும். அதற்கு நாம் அனைவரிடமும் அன்பு செலுத்த வேண்டும். அனைவரும் இன்பமுறுவதைக் கண்டு நாம் மகிழவும், பிறர் துயருறுகையில் நாம் கண்ணீர் சிந்தவும் வேண்டும். நாம் வேறு, மற்றவர்கள் வேறு என்று நினைப்பதை விடுத்து நாம் அனைவரும் ஒன்று என்று எண்ணவும் அதற்கு ஏற்றவாறு நடந்து கொள்ளவும் வேண்டும்.

கடவுளின் ராஜ்யத்தில் அகங்காரத்திற்கும் தற்பெருமைக்கும் இடமே இல்லை. தனவந்தர்கள் அதில் புக அனுமதிக்கப்பட மாட்டார்கள். ஏழைகளாய், பணிவுள்ளவர்களாய், எளிய நிலையில் இருந்தும் உண்மை தவறாமலும் யோக்யமாயும், இருப்பவர்களும் கருணையுள்ளம் படைத்தவர்களுமே அந்த சாம்ராஜ்யத்தில் புக அனுமதி பெறுவார்கள். கடவுளின் ராஜ்யத்தில், சுவர்க்க சாம்ராஜ்யத்தில் புகுவதற்கு கடவுளின் கட்டளைகளை ஏற்று அவைகளினின்று இம்மியளவும் வழுவாது நடந்துவர வேண்டும்" என்றெல்லாம் உபதேசித்து வந்தார்.

"ஐந்து கட்டளைகள்"

இயேசு பெருமகனார் ஐந்து கட்டளைகளைப் பிறப்பித்தார். அவை,

1) பழமையான மத நூல்களில் 'யாரையும் கொலை புரியாதீர்கள் என்றும், கொலை புரிபவனை பாவம் பற்றிக்கொள்ளும்' என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் நானோ தன் உடன் பிறந்தானிடம் கோபம் கொள்ளுகின்றவனும், பரம் பொருளின் பார்வையில் பாவியாகிவிடுகின்றான். தம் சகோதரனை திட்டுகின்றவனும் கடுஞ்சொல்லால் தாக்குகிறவனுமோ அவனைவிடப் பெரிய பாவி. ஒவ்வொரு முறையும் பிரார்த்தனை தொடங்குமுன் தன் சகோதரனிடம் உனக்குள்ள கோபத்தை மனதினின்று அகற்றிவிட்டு அவனுடன் ஒத்துப்போ என்று உங்களுக்கு நான் கூறுகின்றேன்.

2) பண்டைய மத நூல்களில் "விபசாரம் செய்யாதே: நீ உன் மனைவியிடமிருந்து விலகுவதானால் அவளை முறைப்படி விவாகரத்து செய்துவிடு" என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் நானோ. விபசாரம் செய்வது அறவே தவிர்க்கப்பட வேண்டியதுதான். ஆனால் அது மட்டும் போதாது. எந்தப் பெண்ணையும் தீய நோக்குடன் பார்க்கக் கூடாது. அவ்வாறு பார்ப்பவனும் கடவுள் சந்நிதியில் பாவியேயாவான். விவாகரத்து செய்து தன் மனைவியை விலக்குபவன்தான் விபசாரம் செய்வதுடன் தன் மனைவி விபசாரம் செய்வதற்கும் காரணமாகின்றான். பிறகு அப்பெண்ணைத் திருமணம் செய்துகொள்பவனையும் பாவியாக்குகின்றான்" என்றேன்.

3) பண்டைய மத நூல்களில் "ஆணை வையாதே. ஆனால் தான் செய்துள்ள உறுதியினின்றும் வழுவாமலும் இரு" என்று சொல்லியிருக்கிறது. ஆனால் நானோ, எந்த நிலையிலும் ஆணை வைத்தல் என்பதே கூடாது. எவரேனும் உன்னிடம் இன்னொருவரைப் பற்றி விசாரித்தால் 'ஆம்' அல்லது 'இல்லை' 'சரி' அல்லது 'தவறு, என்று ஒரே வார்த்தையில் பதில் கூறி நிறுத்திக்கொள் என்கின்றேன்.

4) பழைய சமய நூல்களில் 'கண்ணுக்கு கண்; ஒருவன் உன் பல்லை உடைத்தால் நீ அவன் பல்லை உடை

என்றும், அவன் உன் கண்ணைக் குத்தினால் நீ அவன் கண்ணைக் குத்து' என்றும் கூறியிருக்கிறது. ஆனால் நானோ ஒருவன் செய்யும் தீங்கிற்கு பிரதியாக நீ தீங்கு செய்யாதே என்றும், ஒருவன் உனது வலது கன்னத்தில் அறைந்தால் 'இதினும் அறை' என்று கூறி. நீ அவனிடம் உன் இடது கன்னத்தையும் காட்டு' என்றும் சொல்லுகின்றேன்.

5) பழமையான மத நூலில் தன் ஜாதியினரிடம் மட்டும் அன்பாயிருக்குமாறு சொல்லியிருக்கிறது. ஆனால் நானோ, நீ எல்லா மனிதர்களிடமும் அன்பு காட்ட வேண்டும். உன்னிடம் பகைமை கொண்டிருப்பவனிடம் நீ அன்பு செலுத்த வேண்டும்: மக்களனைவரும் ஒரே தந்தையின் புத்திரர்கள்— அனைவரும் சகோதரர்கள்—சகோதரிகள். அனைவரிடமும் நீ அன்பாய்ப் பழகி வர வேண்டுமென்று கூறுகின்றேன்.

"தூய வாழ்க்கை"

வாழ்க்கையில் உண்மையைக் கடைப்பிடி. அனைவரையும் நேசி. எல்லோரிடமும் கருணை காட்டு. தானம் செய். கோபம் கொள்ளாதே. பேராசை கொள்ள வேண்டாம். சிற்றின்பத்தில் ஆர்வம் காட்டாதே. தவறு செய்பவனை மன்னித்துவிடு. பாவத்தை வெறு ஆனால் பாவம் செய்தவனை வெறுக்காதே. நீ உண்மை என்று உணர்வதை வெளியிடுவதில் எவ்வித தயக்கமும் காட்டாதே. நியாயத்திற்கு மாறாக நடக்காதே. கொடுமை புரியவே கூடாது. ஆடம்பரம் கூடாது. ஆண்டவனிடம் நம்பிக்கை வை. ஏழை எளியோர்க்கு உதவு"—என்ற இவையே ஏசுவின் போதனைகள். இவர் மக்களுக்கு போதித்ததுடன் தன் வாழ்க்கையிலும் நடத்தியும் காட்டினார். அவரது வாழ்க்கை பூராவும் தியாகமயமாய் சேவைமயமாய் பிறருக்கெனவே வாழ்ந்தே கழிந்தது.

**அற்புதங்கள்:—**

நம்பினோர் கெடுவதில்லை; கடவுளை நம்பினோர் கைவிடப் படார். ஆண்டவனே கதி என்றிருந்த எத்தனையோ நோயாளிகள் அந்த தன் நம்பிக்கையினாலேயே நோய் தீர்ந்து குணப் பெற்றது பற்றி கேட்டிருக்கின்றோம். இயேசு நாதரின் புகழ் எல்லாத் திசைகளிலும் பரவலாயிற்று. பன்னிரெண்டு பேர்கள் அவர்களிடம் சீடர்களாய் வந்து அமர்ந்தனர்.

**எதிரிகள்:—**தனவந்தர்களுக்கு சொர்க்கத்தின் வாயில் திறவாது. ஓர் ஊசியின் காதில் ஓர் ஒட்டகம் நுழைந்து வெளி வருவது சாத்யமானாலும் பணக்காரனால் பரம பிதா வின் இராஜ்யத்தில் பிரவேசிக்கவே முடியாது. 'தன்னிட முள்ள பொருளையும் பணத்தையும் அனைத்தையுமே ஏழை களுக்கு வாரி வழங்கி விட்டு, கையில் சல்லிக் காசும் இல்லாமல் என் பின்னே வா'' என்பவை போன்ற நல்லுரை களைக் கேட்டதும் பணக்காரர்களுக்கு அவரிடம் கோபம் வந்து விடவே, அவர்கள் அவரை எதிர்த்துக் கிளம்பினார் கள். தவறான பழைய சம்பிரதாயங்களையும் வழக்கங்களை கூட இயேசு எதிர்த்தார். கண்டித்தார். உண்மையை எடுத்தோதுவதில் அவருக்குச் சிறிதும் தயக்கமிருக்கவில்லை. யார் என்ன சொல்லுவார்களோ, என்ன நினைப்பார்களோ என்று அவர் யோஜிக்கவும் இல்லை. இதனால் தினம் தினம் அவருக்கு எதிர்ப்புகள் அதிகமாகிக் கொண்டே வந்தது.

கி. பி. 29 ஆம் ஆண்டின் அளவில் இயேசு பெருமான் ஒரு கழுதையின் மீது ஏறிக் கொண்டு எருசலம் சென்றார். அவரது வரவை எதிர்பார்த்திருந்த அவரது எதிரிகள் அவரை அங்கே பிடித்து தண்டிப்பதற்கு சூழ்ச்சி செய்திருந் தார்கள். பிலாதுாஷ் என்பவர் அவருக்காக வாதாடி அவர் நிரபராதி என்று வற்புறுத்திக் கூறினர். ஆனால் எதிரிகள்

"இவன் தன்னை ஆண்டவனின் திருக்குமாரன் என்று சொல்லி தற்பெருமை கொள்வதால் இவனைச் சிலுவையில் அறைந்து கொல்ல வேண்டும்'' என்று பரிந்துரைத்தனர். இறுதியில் மன்னனும் இயேசுவை தண்டிக்க முடிவு செய்து விட்டான். இயேசு சிலுவையில் அறைபட்டு உயிர் போகும் தறுவாயில் இருந்த போது அவர் பகவானிடம், "ஏ ஆண்டவனே என்னை இந்த நிலைக்கு ஆளாகச் செய்தவர்களை நீங்கள் கருணை கூர்ந்து மன்னிக்க வேண்டும்; அவர்கள் அறியாதவர்கள். தாங்கள் செய்யக் கூடிய காரியம் எத்தகையது என்பதை சிறிதும் அவர்கள் அறிந்திலர்'' என்றார். இப்படிப்பட்ட பரந்த மனப்பான்மை, தனக்கு தீங்கு செய்பவர்களுக்குக் கூட, ஆண்டவனிடம் மன்னிப்பு கேட்கும் மனப் பக்குவம் இயேசு நாதர் போன்ற அவதார புருஷர்களிடம் மட்டுமே காண முடியும்.

இயேசு நாதர் தன் இளமைக் காலம் தொட்டே தமது யூத மதத்தில் பல்வகைப்பட்ட பிழையுள்ள நம்பிக்கைகள் நிலவுவதையும், அவைகளையெல்லாம் எதிர்த்து மக்களை நல்வழிப்படுத்துவதே தமக்குள்ள வேலையென்றும் உணரலானார்.

முற்காலத்தில் மக்களெல்லாம் தம்மை இழி பிறப்பாளர் என்றும், பாவிகள் என்றும், தூய்மையற்றவர்கள் என்றும் எண்ணி மன வேதனைப்பட்டுக் கொண்டிருந்தனர். ஆதியில் ஆதாமும், ஈவாளும் புரிந்த பாவச் செயல்கள் தங்களையும் தொடர்ந்து துன்புறுத்தி வருவதாக எண்ணி மனம் நொந்தனர், இயேசு நாதருக்கு இது பெரிய தவறு என்று புலப்பட்டது. இதனால் அவர் மக்களைக் கண்டு, "நீங்கள் அனைவரும் இப்புவியின் உப்பைப் போன்றவர்கள். உலகிற்கு ஒளி வழங்குவோர் நீங்களே, நீங்கள் தங்களைப் பாவிகளென்றும் இழிந்தவர்களென்றும் எண்ணிக் கொள்ள எவ்வித முகாந்திரமும் இல்லை. மிகவும் புனிதமான

ஆண்டவனின் குழந்தைகள். தம்மைப் பற்றி இவ்வாறு இழிவாக எண்ணிக் கொள்ளலாமா! இந்த எண்ணத்தையே விட்டு விடுங்கள். மனிதப் பிறவி பெற்றிருப்பது நினைத்து பெருமைப் படுங்கள். நீங்கள் தன்மானம் உடையவர்களாக ஆக வேண்டும். அந்தப் பரம பிதாவின் பிள்ளைகளான நீங்கள் அனைவரும் சரி நிகர் சமானவர்கள் உங்களில் எவரும் உயர்ந்தவரோ தாழ்ந்தவரோ இல்லை."

இயேசு பெருமானை நினைத்ததும் அவர் அன்பின் அவதாரம் என்று தான் நமக்குக் கூறத் தோன்றுகிறது. உச்சி முதல் உள்ளங்கால் வரையில் அன்பு மயமானவர் அவர், அவரிடம் அன்பைத் தவிர வேறு எதுவுமே இருக்க வில்லை; கடவுளிடம் அன்பு: மானிடனிடம் அன்பு, குழந்தைகளிடம் அன்பு; விலங்குகள் மற்றும் பறவைகளிடம் அன்பு; ஆண்டவனால் படைக்கப் பெற்ற அனைத்துப் பொருட்களிடமும் அன்பு. அவரது வாழ்க்கை பூராவுமே ஒரு அன்புக் காவியம்.— அன்பின் அமுதகீதம், இவ்வாறு அன்பு மயமாய், அன்பிலே ஆழ்ந்திருந்த இயேசு இந்த அன்பு காரணமாகவே சிலுவையில் தொங்க நேர்ந்தது. உண்மையிடம் அவருக்கிருந்த ஆழ்ந்த பற்று அவரை இந்த கதிக்கு உள்ளாக்கியது. உலகில் அவதரித்து உண்மைக்காகவும் சத்தியத்திற்கும் பாடுபட்ட மகான்கள். பலரும் தம் உயிரை பலியிட நேர்ந்துள்ளது.

"சர்ச்"

உலகெங்கும் வாழ்ந்து வரும் கிருஸ்துவ அன்பர்களிடையே நிலவும் சகோதர உறவில் சர்ச்சில் நம்பிக்கை கொள்ளுதலும் கிருஸ்துவ சமயத்தின் ஒரு கொள்கையாகும். இக்கோயிலின் தலைமைப் பீடத்திலிருக்கும் அதிகாரி போப்பாண்டவர் என அழைக்கப்படுகின்றார். அவருக்கும் மேலே, அனைவருக்கும் மேலே இருக்கும் அதிகாரிதான் இயேசு பெருமான்.

**பைபிள்:—**

பைபிள் அல்லது விவிலியம் கிருஸ்துவர்களின் புனிதமான வேதமாகும். அதை அவர்கள் தெய்வீக நூலாக, கடவுளே அருளியதாக நம்புகின்றனர். விவிலியம் இரண்டு ஏற்பாடுகள் கொண்டது. ஒன்று பழைய ஏற்பாடு என்றும் மற்றது புதிய ஏற்பாடு என்றும் சொல்லப்படும். விவிலியம் என்பது இரண்டு பக்கங்கள் கொண்டது. அது 'பழைய ஏற்பாடு' (Old Testament) என்றும் 'புதிய ஏற்பாடு' (New Testament) என்றும் சொல்லப்படுகிறது. இயேசு பெருமான் அவதரித்த காலத்தில் பழைய ஏற்பாடு தான் வழங்கிற்று. இயேசு நாதர் புதிய புத்தகம் எதையும் எழுதவில்லை. தன் உபதேசங்களை வாய் மொழியாகவே மக்களுக்குப் போதித்து வந்தார். பிறகு அவரது சீடர்கள் அவரைப் போலவே பல்வேறு இடங்களுக்கும் சென்று தம் குருநாதர் அளித்த நற்செய்தியைப் பரப்பினர்கள். சுமார் முப்பதாண்டுகளுக்கு புதிய சமய நூலின் அவசியமே உணரப்படவில்லை. அதன் பிறகு தான் இயேசுவின் சீடர்கள் இயேசுவின் நற்செய்தியை எழுதி வைத்தார்கள். முதன் முதலாக மாற்கு (Mark) நற்செய்தியை எழுத, அவரையடுத்து மத்தேயு (Mathew)வும், அவருக்குப் பின் லூக்காவும் (Luka) எழுதினர்கள். இவர்கள் மூவரும் தம் தம் வழியில் எழுதிய நற்செய்திகளிலிருந்து நமக்குப் பல செய்திகள் தெரிய வருகின்றன. யோவான் என்பவர் (John) இயற்றிய நற்செய்தி இந்த மூவர் படைப்புகளிலிருந்தும் சிறிது மாற்றம் காணப்படுகிறது. புதிய ஏற்பாட்டில்' இந்த நான்கு பேருடைய நற்செய்திகள் அல்லது சுவேஷங்கள் அல்லாமல் பேதுருவும் (Peter) பிறரும் இயற்றிய நிருபங்களும் அடங்கியிருக்கின்றன. விவிலிய நூலில், மனிதனின் வாழ்க்கையை மேன்மையுறச் செய்யும் எண்ணாற்ற விஷயங்கள் அடங்கியுள்ளன.

*தர்மம்:—* கிருஸ்துவ மதம் அன்பின் மீதும் அஹிம்சையின் அடிப்படையிலும் அமைந்து நிற்கிறது. மக்கள் பணி

யும் தியாகமுமே அதற்கு அடிப்படை. இயேசு பெரு மானின் புனித வாழ்க்கை அதன் மீது நின்று ஒளி வீசும் நந்தா விளக்காகும். ஒருவரை ஒருவர் நேசித்துக் கொண்டு வாழுங்கள். பகைவனுக்கும் அருளுங்கள். தவறு செய்த வனை மன்னியுங்கள். பாவத்தை மட்டும் வெறுத்து பாவிக்கு உதவுங்கள். துன்புற்றோர், துன்பத்திற்குள்ளானோர் ஆகியோருக்காக தம்மிடம் உள்ள அனைத்தையும் செலவிட்டு அவர்களின் துயரைப் போக்குங்கள். என்ற இவையே இயேசு பெருமான் அளித்த போதம். உலகின் மூலை முடுக்குகளிளெல்லாம் பரவியுள்ள எண்ணற்ற போதகர்கள் இயேசு பெருமானின் இந்த போதத்தின் படி வாழ்வில் நடந்து நிருபித்திருக்கின்றனர். மாந்தர் அனைவரையும் நேசிப்பவனும், உயிர்களின் நலனுக்காக தம்மிடம் உள்ளவை அனைத்தையும் துறக்க, தியாகம் செய்ய எப்போதும் சித்தமாய் இருப்பவனே கிருஸ்துவன் என்ற பெயருக்கு தகுதியுள்ளவனுவான்.

### ஆண்டவனின் மூன்று உருவங்கள்:—

கிருஸ்துவ அன்பர்கள், ஆண்டவன் மூன்று வகை களில் காட்சி அளிப்பதாக நம்புகின்றனர். 1. பரமபிதா வான பரம் பொருளாகவும், 2. பகவானின் மைந்தன் இயேசுவாகவும் 3. புண்ணிய ஆன்மாவாகவும் வழிபட்டு வருகின்றனர். அவர்கள் கடவுள் இருக்கின்றனர் என்றும், அவர் ஒருவரே என்றும நம்புகின்றனர். அவரே உலகிற்கும் தந்தை. அவர் எல்லாம் அறிந்தவர். எங்கும் இருப்பார். அவர் மிகவும் புனிதனமானவர். நியாயம் தவருதவர். எல்லையற்ற கருணை கொண்டவர். அவரின் மன்னிக்கும் தன்மைக்கு ஒரு அளவே கிடையாது. ஆதி யும் அந்தமும இல்லாதவர். பூரணமானவர். அனைத்து மக்களுக்கும் நன்மையே செய்பவர். அவர் பாதுகாப்பவர், விகாரங்கள் இல்லாதவர். உலகில காணப்படும் அனைத்துப்

பொருளும் அவரின் படைப்பே, அகில உலகமும் அந்தப் பரம் பொருள் வகுத்துள்ள நியமங்களுக்கு. விதிகளுக்கு ஒத்து நடந்து வருகிறது. அனுபவத்திலிருந்தும், அக உணர்வின் மூலமும் நாம் அவரை உணருகின்றோம்.

இயேசு நாதர் அவர்கள் ஆண்டவனின் ஒரே குழந்தை என்பது கிருஸ்துவ அன்பர்களின் நம்பிக்கை. ஆண்டவனையும், மக்களையும் அவர் இணைங் சங்கிலியாக இருந்து இணைத்து வருகின்றார், அவர் இந்த மண்ணில் மனிதனாக வந்து பிறந்தார், மனிதர்களிடையே, அவர்களுள் ஒருவராக வாழ்ந்தார். அவர்களுக்கு நல்லுரைகள் வழங்கினார்.

உலகில் ஒரு தெய்வீக ஆன்மா இருப்பதாக கிருஸ்துவர்கள் நம்புகின்றனர். அது மனிதனின் உள்ளத்தைத் தூய்மையாக்கி ஆண்டவனிடம் இட்டுச் செல்லுகிறது. அதன் உதவியினால் மனிதன் பரம்பொருளின் ராஜ்யத்தில் புக முடிகிறது. அது ஆண்டவனின் ஏவலாகும்;— பகவானின் சத்யமாகும். அது நம்மை விழிப்புறச் செய்கிறது.

கோபம் பற்றி:—

கோபமே நாம் படும் எல்லாத் துன்பங்களுக்கும் உலகில் தோன்றும் அனைத்துக் கஷ்டங்களுக்கும் காரணம். உலகில் காணும் எல்லாத் தொல்லைகளும் கோபத்திலிருந்தே பிறக்கின்றன. ஆகையால் கோபத்தை அழித்தல் மிகவும் அவசியம். உலகில் ஏற்படும் கடும் போர்களெல்லாம் சிறு சிறு காரணங்களிலிருந்தே தோன்றுகின்றன" என்றெல்லாம் உபதேசித்த இயேசு அதைத் தடுக்க பின்வரும் வழிகளைக் கூறுகின்றார்.

1. தன் உடன்பிறந்தான் ஒருவன் மீது கோபம் கொள்ளுபவன் கடவுளின் தண்டனைக்கு உள்ளாவான்.

2. நீ பிறரை இம்சித்து தண்டித்து அடக்கலாமென்று எண்ணாதே; உனக்கு எவ்வளவு கோபம் வந்தாலும் மற்றவரை அடிப்பது, உதைப்பது என்ற எண்ணமே உனக்கு வேண்டாம். உனக்கு ஒருவர் இழைக்கும் தீங்கிற்கு பிரதியாக நீ தீங்கு செய்யாதே. 3. நண்பர்களிடம் மட்டுமின்றி பகைவனிடமும் அன்பு வை. நீ நடக்கும் வழியில் முள்ளைப் போடுபவன் முன் நீ மலர்களைப் பரப்பி வை.

''மனத் தூய்மை''

இயேசுநாதர் மனத்தூய்மையை பெரிதும் வலியுறுத்துகின்றார். ''ஒருவன் ஒரு பெண்ணை கெட்ட நோக்குடன் பார்த்தால் போதும், தான் கெடுவதற்கு வேறு எதுவும் செய்ய வேண்டாம். மனதில் கோளாறு இருந்தால் அது மனிதனையே கெடுத்துவிடும். நான் எதுவும் செய்யவில்லையே என்று கூறித் தப்ப முடியாது'' என்று அவர் மிகவும் நுணுக்கமாக நன்னடத்தைபற்றி வலியுறுத்துகின்றார்.

நல்ல செயல்கள் பற்றி :—

இயேசுநாதர் ஆடம்பரத்தையும் வேஷத்தையும் கண்டித்தார். இதனால் ''நல்ல காரியத்தைச் செய். பிறகு செய்ததை நினைத்துக் கொண்டும் சொல்லிக் கொண்டும் இராதே; யோக்யனாக இருந்து வா. நாணயம் தவறாதே. பிறருடன் எந்நிலையிலும் நல்ல விதத்தில் பழகு. தவறு செய்பவன் மன்னித்துக் கொண்டே இரு'' என்றார்.

உண்மை :—

எவரும் உண்மை பேசுவதில்லை; பொய்யே பேசுகின்றனர். தங்களின் பொய்யை நிலை நிறுத்த வார்த்தைக்கு வார்த்தை ஆணையிடுகின்றனர்; என்பதை இயேசு கண்டார். இதை நினைத்து மனம் நொ ந்த அவர்,

"நீங்கள் சொல்ல விரும்புவதை "ஆம்" "சரி" என்றோ, "இல்லை—முடியாது" என்றோ ஒரே வார்த்தையில் கூறி நிறுத்துங்கள். வளவளவென்று பேசிக் கொண்டிருந் தால் உங்கள் மனதில் உள்ள சகதிதான் வெளிவரும். அதனால் உங்களுக்கும் உங்கள் பேச்சைக் கேட்போருக்கும், தீங்கே விளையும்" என்று உபதேசித்தார்.

**கடவுள் நம்பிக்கை :—**

நாம் வெளியில் ஏதோ கடவுளை நம்புவதாகச் சொல்லிக் கொண்டிருக்கோமே தவிர நாம் நம்புவதெல்லாம் நம்மைப் பற்றியேதான். நம்மால் ஆகாதது எதுவும் இல்லை என்று மார் தட்டுகின்றோம். இயேசுநாதர் "நீ வீணே தேவைகள் பற்றி துன்பப்படுகின்றாய்: இதற்கு அவசியமே இல்லை: நீ கேள்; அது உனக்கு நிச்சயம் கிடைக்கும். கதவைத் தட்டு, அது திறக்கப்படும்" என்கிறார். இதுவே இயேசு பெரு மானின் புனிதச் செயல், நற்போதம். அவரது உபதேசங் கள் உண்மை, அன்பு, கருணை ஆகியவற்றில் முழுதும் தோய்ந்திருப்பவையாகும். இவைகளினின்று வழுவாதிருப் பவனுக்கு எல்லாம் நன்மையாகவே நடக்கும். துன்பம் அவனை அணுகாது. மன, மெய், மொழிகளினால் இவை களைக் கடைப்பிடித்தால் போதும், வேறு எதுவுமே செய்யத் தேவையில்லை.

**விவிலியம் கூறும் புனித மொழிகள் :—**

1) தன் நண்பனுக்காக ஒருவன் தன் உயிரை அளிப் பதைவிட உயர்ந்த அன்பு வேறு இருக்க முடியாது. (யோவான் 15, 13.)

2) நோயாளிகளின் நோயை குணமாக்கு. சவங்களை எடுத்து அடக்கம் செய். தொழுநோய் வந்தவர்களின் புண் களை கழுவி மருந்திடு. துஷ்டர்களை வெளியேற்று.

ஆண்டவன் அளவு சங்கையில்லாமல் உனக்கு அளித்திருக்கிறார். நீயும் கை சுடுக்காமல் தேவையானவர்களுக்கு வாரி வழங்கு. (மத்தேயு 10, 8.)

3) உங்களில் எவனும் தன்னிடமுள்ளவை அனைத்தையுமே தியாகம் செய்யாவிடில் அவன் என் சீடன் ஆக மாட்டான். (லூக்கா 14, 33.)

4) எனக்காக வீடு வாசலையும், அண்ணன் தம்பிகளையும், தாய் தந்தையரையும், குழந்தை குட்டிகளையும் நில புலன்களையும் துறந்தவனுக்கு அவை ஒன்றுக்கு நூறாகக் கிடைக்கும் (மத்தேயு 19—19, 30)

5) நீ பிறரை ஏமாற்றுவதற்காக நீ பெரிய தர்மவானைபோல வேடம் போடாதே. அவ்வாறு செய்தால் சொர்க்கத்திளிருக்கும் உனது பரம பிதா உனக்கு நன்மை செய்யமாட்டார். (மத்தேயு 6,1.)

6) உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரை நீளமான அங்கி அணிந்து கொண்டு ஊரைச் சுற்றுவதும், பலர் பார்த்துக் கொண்டிருக்கையில் வணக்கம் பெறுவதும் கூட்டங்களில் முதலிடம் அளிக்கப் பெறுவதும் எந்தப் பாதிரிகளுக்கு மிகவும் பிடிக்கிறதோ அவர்களிடம் நீ எச்சரிக்கையாக இரு. அவர்கள் ஆதரவற்ற கைம்பெண்களின் வீடு வாயிலை விழுங்கி ஏப்பம் விட்டுவிட்டு உலகை ஏமாற்றுவதற்காக மணிக்கணக்கில் கண்ணை மூடிக்கொண்டு பிரார்த்தனை செய்வதாகப் பாசாங்கு செய்வார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு நரக தண்டனை காத்திருக்கிறது.

(லூக்கா 20, 45—47.)

7. நீங்கள் பிறர்மீது குற்றம் கூறினால் நீங்களும் குற்றவாளியாக்கப்படுகின்றீர்கள் என்பது நினைவிருக்கட்டும். நீங்கள் பிறரை அளக்கும் அளவுகோலால் நீங்களும்

அளக்கப்படுவீர்கள். நீ தன் சகோதரன் கண்ணிலுள்ள தூசியைப் பார்க்கின்றாய். தவிர உன் கண்ணிலுள்ள உத்திரம் உனக்குத் தெரியவில்லை. உன் கண்ணில் தூசு இருக்கும்போது நீ உன் அயலான் கண்ணிலுள்ள தூசியை அகற்றும்படி எப்படிக் கூறலாம்? ஏ கபடு நிறைந்தவனே, நீ முதலில் தன் கண்ணில் உள்ள தூசியை அகற்று. அதன் பிறகுதான் உன் சகோதரன் கண் தூசியை அகற்றச் செய்வதில் தவறில்லை. (மத்தேயு 7, 1–5.)

8) கபடமுள்ளவர்களும் வேஷதாரிகளும் கூட்டம் கூட்டி, தண்டோராப் போட்டு எல்லோரும் தம்மைப் புகழ வேண்டும் என்பதற்காக தானம் செய்வதைப்போல நீ செய்யாதே. அவர்கள் செய்யும் இந்த ஆடம்பரமான தானத்திற்குரிய பயனை அவர்கள் பெற்றுவிட்டார்கள் என்று நான் உனக்கு உண்மையாகச் சொல்லுகின்றேன். ஆகையால் தானம் செய்கையில் நீ வலக் கையால் அளிப்பது. உனது இடது கைக்கும் தெரியாதிருக்கட்டும். இவ்வாறு வெளியே தெரியாமல் இருந்தால், எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கும் பரமபிதா உனக்குப் பயன் அளிப்பார். (மத்தேயு 6, 2—4.)

9) நடத்தைக் கேடு காரணம் தவிர வேறு எதற்காகவும் தன் கட்டிய மனைவியை விலக்கிவிட்டு மற்றவளை மணம் செய்து கொள்பவன் பாவம் செய்தவன் ஆகின்றான். தள்ளி வைக்கப்பட்ட அந்தப் பெண்ணை மணந்து கொள்பவனும் பாவமே புரிகின்றான். (மத்தேயு 19, 9.)

10) நீ எப்போதும் வரிந்து கட்டிக்கொண்டு நில். விளக்கை அணையாமல் பார்த்துக் கொள். உனக்கு மெய் மறதி சிறிதும் வேண்டாம். (லூக்கா 12, 35.)

11) எப்போதும் விழிப்புடன் இருந்துகொண்டு சோதனையில் விழாதவாறு காக்கும்படி இறைவனிடம் வேண்டிக்

கொண்டே இரு. ஆன்மாவுக்குச் சோறு இராது, அது சித்தமாகத்தான் இருக்கும். ஆனால் உடல் பலவீனமானது. (மத்தேயு 26, 41,)

12) நீ குறுகிய பாதை வழியே செல். நரகத்திற்குப் போகும் பாதை அகலமாயும் நரகத்தின் வாயில் விரிந்தும் இருக்கும். மிகுதியான பேர்கள் அதில் புகுவார்கள். குறுகிய பாதையும் வாயிலும் கொண்ட சொர்க்கத்திற்குப் போவோர் மிகவும் குறைவு. (மத்தேயு 8, 13-14.)

13) உன் கையோ காலோ உன்னை இடறிவிட்டால் நீ அந்தக் கை அல்லது காலை வெட்டி எறிதல் உனக்கு நல்லது. உன் கண் உன்னைத் தடுமாறி விழச் செய்தால் கண்ணைப் பறித்து எறிந்துவிடு. இரண்டு கண்கள் இருந்தும் நீ நரகத் தீயில் விழுந்து வதைபடுவதைவிட கண்ணற்ற குருடனாக வாழ்வது உனக்கு எவ்வளவோ நல்லது. (மத்தேயு 18, 8—9.)

14) ஏ, தகுதியற்ற அடிமையே! நீ என்னிடம் வேண்டிக் கொண்டமையால் உனது குற்றத்தை நான் மன்னித்துவிட்டேன்; அதன்பிறகும் நீ பிறரை இதேமுறையில் ஏன் மன்னிக்கவில்லை. நீ என்னிடம் மன்னிப்பு விரும்பினால் அவனை நீ மன்னிக்க வேண்டும். (மத்தேயு 18, 32–33.)

15. பிரார்த்தனை

நீ மாயக்காரனைப் போல பிரார்த்தனை செய்யாதே. பிறர் காண வேண்டும் என்பதற்காக அவர்கள் நாற்சந்திகள் கூடுமிடங்களிலும் கோயில்களிலும் பிரார்த்தனை செய்ய விரும்புகின்றனர். அதற்குரிய பயன் அவர்களுக்குக் கிடைத்து விட்டது என்று நான் உண்மையாகச் சொல்லுகின்றேன். நீ பிரார்த்தனை செய்ய தனி அறைக்குள் சென்று கதவுகளை மூடிக்கொண்டு பரம பிதாவிடம்

வேண்டிக் கொள். அவரிடமிருந்து எதையும் மறைக்க முடியாது. அவர் உலகறிய அதற்குப் பலனளிப்பார். பிரார்த்தனையின் போது நீ அஞ்ஞானிகளைப்போல சொன்னதையே திரும்பத் திரும்பக் கூறுவதை தவிர். வளவளவென்று சொல்லிக் கொண்டிருந்தால் அதிகம் கவனிக்கப்படுமென்று அவர்கள் நினைப்பு. நீ அவர்களைப்போல் வீண் வார்த்தைகளை அளந்து கொண்டிருக்காதே. ஏனெனில் நீ கேட்பதற்கு முன்பே உன் தேவை என்ன என்பதை உன் தந்தை அறிவார். எனவே நீ கீழ்க்கண்டவாறு பிரார்த்தனை செய்.

"பரமண்டலத்திருக்கும் எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தப் படுவதாக. உம்முடைய ராஜ்யம் வருவதாக/ உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப் படுவது போல பூமியிலும் செய்யப்படட்டும்.

எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்.

எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னித்தருளும். எங்களை சோதனைக்குள்ளாக்காமல் தீமையினின்று எங்களை இரட்சித்தருளும். இராஜ்யமும் வல்லமையும் மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே" ஆமென்.'

(மத்தேயு 6, 5—14)

16. **வாளெடுத்தவன்:**—இயேசு பெருமானைப் பிடித்துக் கைது செய்த போது அவரது சகா பேதுரு என்பார் தமது வாளை உருவிக் கொண்டு கைது செய்தவர்களைத் தாக்கக் கிளம்பினார். கிளம்பியவர் பிரதான ஆசாரியரின் வேலையாள் மீது வாளை எறிந்து அவன் காதைத் துண்டித்தும் விட்டார். அப்போது ஏசு அவரை கையமர்த்தி நீ உன் வாளை உன் உறையுள் வை. ஏனெனில் வாளை வீசுகின்றவர்கள் எல்லோரும் வாளினாலேயே மடிவார்கள் என்றார். (மத்தேயு 26 51—52)

17. பேதுரு ஏசுவிடம், "ஏ பிரபுவே! என் சகோதரன் குற்றம் இழைத்த படியே இருந்தால் அவனை நான் எவ்வளவு முறைகள் தான் மன்னிப்பது? ஏழு முறை மன்னிக்கலாமா? என்றார்". அதற்கு இயேசு, "ஏழு முறை என்று என்ன கணக்கு? எழுபது முறையும் மன்னித்துக் கொண்டே இரு" என்று பதில் கூறினார்.

18. நீங்கள் ஏன் நாம் என்ன சாப்பிடுவோம், அருந்து வோம், உடுத்துவோம் என்றெல்லாம் கவலைப்படுகின்றீர் கள்? ஆவி உணவை விடவும், ஆடையை விடவும் உயர்ந்த தல்லவா? வானத்தில் பறக்கும் பறவையைப் பாருங்கள். அவை விதை விதைப்பதோ, விளைந்ததை அறுப்பதோ, களஞ்சியத்தில் சேமித்து வைப்பதோ கிடையாது, ஆயினும் சொர்க்கத்தில் வதியும் உமது பரமபிதா அவைகளுக்கெல் லாம உணவு அளிக்கின்றார். அவைகளைவிட உமது மதிப்பு எவ்வளவோ அதிகமல்லவா? (மத்தேயு 6, 25, 26.)

19. செய்யும் தானம் எதையும் நேரிடையாகச் செய். புரியும் கருணை எதையும் மனமுவந்து மகிழ்ச்சியுடன் செய். நீ காட்டும் அன்பில் கள்ளம் கபடு கலக்க விடாதே. தீமையை வெறுத்துவிடு; நற்காரியங்களில் நாட்டம் கொள் பிறருடன் சகோதரப் பாசத்துடன் பழகு. நன்முயற்சிகளில் சோர்வு கொள்ளாதே. பிறருக்கு மதிப்பளிக்கத் தயங் காதே. நன்மையே விளையுமென்று நம்பு. துயரம் வந்தா லும் மனம் தளராதே. நல்லவர்களுக்கு உதவு. உன் வீட் டிற்கு வந்தவர்களுக்கு மரியாதை செய். துன்பம் இழைத்த வனையும் வாழ்த்து. துயருற்றவரின் துன்பத்தைப் பகிர்ந்து கொள். உனக்கு இழைக்கப்பட்ட கொடுமைக்கு பிரதி செய் யாதே. பசித்திருக்கும் பகைவனின் பசியையும் போக்கு. அவன் தாகத்திற்கு நீர் கொடு. தீமைக்கு ஆளாகாதே. தீமை உன்னை ஆட்கொள்ள விடாதே. நன்மையினால் தீமையை வெற்றி கொள்.

பெரியவர்களின் பொன்மொழிகள் :

அர்ச் பவுல் கூறியது.

தாராளம் தலைசிறந்த குணமாகும். நான் மனிதனையும் தேவதூதனையும் போல இனிக்கப் பேசினாலும் என்னிடம் தாராளம் இல்லையேல் பித்தளைப் பாத்திரங்கள் மோதும் சத்தத்தையும், கைத்தாளத்தின் கலகலப்பையும் போன்று என் பேச்சு எதற்கும் பயன்படாது போகும். தாராளம் இல்லையேல் நான் ஒன்றுக்கும் உதவமாட்டேன். தாராளம் என்பது சகிப்புத் தன்மையையும் தயையும் குறிக்கும். தாராளமுள்ள இடத்தில் பொறாமை, ஆடம்பரம், ஆணவம், சுயநலம், ஆகியவை இராது. சத்யம் அதற்கு மிகவும் பிடிக்கும். அது எல்லோரையும் நம்பும். எல்லோருமே திருந்துவார்கள், என்ன கருத்தில் அது அனைவருடனும் ஒத்துப் போகும்.

குமாரி தெரசா : துயரங்களை அனுபவிப்பதற்காகவே உயிர் வாழ வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. பேரன்புடன் துயரங்களையே நல்குமாறு நான் இறைவனிடம் வேண்டுகிறேன்.

அர்ச் அகஸ்தீன் :— நான் துயரங்களில் சிக்குவதே நல்லது. இறைவன் அவைகளை எனக்கு அளித்திருக்கின்றான் என்ற எண்ணத்தில் நான் அவைகளுடன் இன்பமாகவே இருக்கின்றேன். எல்லா வகையிலும் பொருத்தமான நிலையையே இறைவன் நமக்கு ஏற்பாடு செய்திருக்கின்றான்.

தாமஸ்-அ-கெம்பிஸ் "Imitation of Christ"

நம்மீது அவ்வப்போது துன்பங்கள், துயரங்கள் ஆகியவற்றின் சுமை வந்து விழுவது நல்லது. இவை மனிதனுக்கு ஆன்ம சிந்தனை புரிய வாய்ப்பளிக்கின்றன.

அர்ச்-பிரான்சிஸ் :—

இறைவா! நான் அன்பு விதையை விதைப்பேனாக. ஆண்டவனே! ஆறுதல் கூறித் தேற்றும் அவசியமே எழாத வகையில் எனக்கு தயை கூர்ந்து சக்தியை அருளும். மக்கள் என்னைப் புரிந்து கொள்வது இருக்கட்டும். முதலில் நான் அவர்களைப் புரிந்து கொள்வேனாக. மக்கள் என்னிடம் அன்பு செலுத்துவதற்கு முன் நான் அவர்களிடம் அன்பு காட்டுவேனாக. அளிக்கப்படுவதே நமக்குக் கிடைக்கும். பிறரை மதிப்பதினாலேயே மனிதன் மன்னிப்புக்குத் தகுதி பெறுகின்றான். தன்னை அர்ப்பணிப்பதினாலேயே நமக்கு அமர வாழ்வு கிடைக்கிறது.

இந்தியாவில் கிருஸ்துவ சமயத்தைப் பரப்பியவர் 'செயிண்ட் தாமஸ்' என்று கூறப்படுகிறது. கிருஸ்துவின் முக்ய மாணாக்கர்களில் இவரும் ஒருவர். இவர் வடமேற்கு இந்தியப் பகுதித் வந்தபோது அதனை ஆண்டு வந்த கொண்டோபர்னஸ் என்ற மன்னர் கிருஸ்துவின் கொள்கைகளை ஏற்றார். பின்னர் மேற்குக் கடற்கரை பகுதியில் கிருஸ்துவக் கொள்கைகளைப் பரப்பினார். இறுதியாக கிழக்குக் கடற்ரைப் பகுதியில் சமயப் பிரசாரம் செய்யும் போது அதற்காகவே உயிர் துறக்க நேரிட்டது. அவரது உடல் சென்னையில் உள்ள மயிலாப்பூரில் அடக்கம் செய்யப் பட்டுள்ளதாகக் கூறுகின்றனர்.

கிருஸ்துவ சமயம் விரைவாகப் பரவக் காரணமாக இருந்தவர்களுள் செயிண்ட் பால் முக்யமானவர். இவர் டார்ஸ் என்னுமிடத்தில் பிறந்த யூதராவார். முதன் முதலாக கிருஸ்துவக் கொள்கைகளை மிகத் தீவிரமாக எதிர்த்து வந்த சால் என்பவரே திடீரென மனம் மாறி செயிண்ட் பால் என்ற பெயரில் கிருஸ்துவின் போதனைகளைப் பரப்பி கிருஸ்துவ சமயத்தின் ஒப்பற்ற தொண்டரானார். இவர் தமது வாதத் திறமையால் பிற சமயத்தவர்களை வென்றார். மேற்கு ஆசிய நாடுகளிலும் கிரீசிலும் ரோமிலும் கிருஸ்துவ சமயத்தைப் பரப்பினார்.

இவர் ஆங்காங்கே திருச் சபைகளை நிறுவி அவற்றை ஏசு கிருஸ்துவின் வழிபாட்டுக்குறிய புனிதத் திருக்கோவில் களாக்கினார். இவர் ரோமாபுரியில் பணியாற்றும் போது கி. பி. 64ல் நீரோ மன்னரால் கொல்லப்பட்டார். இவ்வாறு கிருஸ்துவ சமயம் பிற நாடுகளிலும் பரவியது. தொடக் கத்தில் ரோமானியர் கிருஸ்துவர்களைப் பலவிதங்களிலும் துன்புறுத்தினர். ஆனால் கிருஸ்துவர்கள் பொறுமையாக எல்லா இன்னல்களையும் ஏற்றுக் கொண்டனர். இறுத்த வினால் கிருஸ்துவ சமயத்தை தடை செய்ய இயலாது என் பதனை உணர்ந்து அதனைத் தழுவிய முதல் ரோமானிய மன்னர் கான்ஸ்டன் டைன் என்பவர் ஆவார். கான்ஸ் டன்டை கி. பி. 313ல் மிலான் அறிக்கையை வெளியிட்டார். அதன்படி கிருஸ்துவர்களுக்கு சமய உரிமை வழங்கப் பட்டது. அவர் கிருஸ்துவ சமயத்தை ஆதரித்தார். கி. பி. 325-ல் நைசியா (Nicaea) என்னுமிடத்தில் ஒரு சமயச் சபையைக் கூட்டி அதில் கிருஸ்துவ சமயக் கோட் பாடுகளை ஒழுங்கு படுத்தினர். இவருக்குப் பின் பட்டத் திற்கு வந்த தியோடோஸியஸ் காலத்தில் கிருஸ்துவ சமயம் அரசாங்க சமயமாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதனால் ரோமப் பேரரசு பூராவும் கிருஸ்துவ சமயம் பரவியது. எவ்வாறு புத்த சமயம் இந்தியாவை விட்டு வெளியேறி உலக சமயமாயிற்றோ, அவ்வாறு கிருஸ்துவ சமயம் ஒரு யூதரால் தோற்றுவிக்கப்பட்டும், யூத நாட்டில் வளராமல் அயல் நாடுகளில் பரவி உலக சமயமாக இன்றும் திகழ் கிறது.

# புத்த மதம்

புத்தர் பெருமானின் தந்தை சாக்கிய குலத்தில் பிறந்தவர். தாய் கோலிய குலத்தில் தோன்றியவள். சாக்கியர்களின் தலைநகர் கபிலவஸ்து. சாக்கிய குலத்தில் பிறந்தவர்களை கௌதம கோத்திரத்தினர் என்றும் சொல்லுவது உண்டு. சாக்கியர்கள் தங்களை ஏன் அவ்வாறு அழைத்துக் கொண்டனர் என்பதற்கு சரியான காரணங்கள் எதுவும் தெரியவில்லை. கோலிய வம்சத்தில் தேவதாகன் என ஒரு அரசன் இருந்து வந்தான். இவனுக்கு அஞ்சனன் என்று ஒரு மகன். அவனுக்கு தண்டபாணி—சுப்பிரபுத்தன் என இரு புதல்வர்களும் மாயா, பிரஜாபதி என்று இரு புதல்வியரும் பிறந்தனர். சாக்கிய அரசன் சுத்தோதன மன்னன், கோலிய அரசன் அஞ்சனன் புதல்வியர் இருவரையும் திருமணம் செய்து கொண்டான். இருவரில் மூத்தவள் மாயா தேவி. இவள்தான் புத்தரைப் பெற்றெடுத்தவள். இளையவள் பிரஜாபதி. புத்தர் பெருமானை வளர்த்து ஆளாக்கிய பெருமையும் பாக்கியத்தையும் பெற்றவள் பிரஜாபதிதான்.

மாயாதேவி முற்பிறவி ஒன்றில் ஒரு அந்தணருக்கு மகளாகப் பிறந்திருந்தாள். தன் மகளிடம் அவருக்கு மிக அதிகமான பிரேமையும் பாசமும் உண்டு. ஒருமுறை தன் தந்தை அன்புடன் அளித்த நறுமணர்களை அப்பெண் அப்போது புத்தராக இருந்து வந்தவரின் காலடிகளில் சமர்பித்தாள். அதைக் கண்டு அகமகிழ்ந்த புத்தர், "இனி நீ எடுக்க இருக்கும் பிறவியில் புத்தர் ஒருவரைப் பெற்றெடுக்கும் பாக்கியத்தைப் பெறுவாய்" என ஆசீர்வதித்தார்.

அந்தப் பெண்தான் தமது மறுபிறப்பில் கோலியநாட்டு மன்னன் அஞ்சனன் என்பவனுக்கு மகளாகப் பிறந்து மாயா தேவி என்னும் பெயருடன் விளங்கினாள். (பத்து லட்சம் ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் புத்தர் ஒருவர் தோன்றக் கூடும் என்பது பௌத்தர்களின் நம்பிக்கை.) அதுசமயம் தேவலோகத்தில் மேம்பட்டு விளங்கி வந்த சுமேதர் என்பவர்தான் பூலோகத்தில் புத்தராக அவதரிக்கப் போகின்றார் என்பதை அறிந்து தேவர்கள் மகிழ்ந்தனர். சுமேதர் இந்தியாவில் உள்ள சாக்கியர்களின் நாடான கபிலவஸ்துவைத் தமது நாடாகத் தேர்ந்தெடுத்தார். பின் அரச குலமே தாம் பிறப்பதற்கு சிறந்த குலம் என முடிவெடுத்து, சுத்தோதனரையும், மாயா தேவியையும் தம் தாய் தந்தையராகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்.

கௌதம புத்தராக அவதரிக்கப்போகும் போதிசத்துவர் தமது அன்னையின் கருவில் புகுந்த சமயம் பூவுலகில் பல்வேறு அற்புதங்கள் நிகழ்ந்தது. விலங்குகளும் பறவைகளும் சந்தோஷத்தால் பரவசமடைத்தன; நோயுற்றோர் அதிலிருந்து திடீரென நிவாரணம் பெற்றனர். தேவலோகத்திலிருந்து பூமாரி பொழிந்தது. பின் சில நாட்களில் மாயா தேவிக்கு கி, மு. 623ம் ஆண்டு மே மாதத்தில் புத்தர் பிறந்தார். புத்தர் பிறந்த ஆண்டு சம்மந்தமாக சரித்திர ஆராய்ச்சியாளர்களிடம் கருத்துவேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆனாலும் அவர் பிறந்த ஆண்டு கி. மு. 623 என பெரும்பாலானவர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். மற்றும் சிலர் கி. மு. 563ல்தான் போதிசத்துவர் அவதரித்தார் எனக் கருதுகின்றனர்.

புத்தர் பௌர்ணமியன்றுதான் பிறந்தார் என்பதை இரு சாராரும் ஏற்றுக் கொண்ட போதிலும், புத்தர் பிறந்த கிழமையையும், நேரத்தையும் சரியாகச் சொல்ல சரியான சரித்திர ஆதாரங்கள் நம்மிடையே காணப்படவில்லை. அது போல் புத்தர் பிறந்த இடம் லூம்பினித் தோட்டம் என்பதை

அனைவரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். அதுவும் அசோகன் ஏற்படுத்திய கல்வெட்டு ஒன்று நேபாளத்தில் உள்ளது. அதில் "இந்த இடம் புத்த பெருமான் பிறந்த இடம்" என்னும் வாசகம் காணப்படுகிறது. அதனால் அவர் பிறந்த இடத்தைப் பற்றிய சர்ச்சை எதுவும் எழவில்லை. சிலர் வெள்ளிக்கிழமையன்று விசாக நட்சத்திரத்தில் புத்தர் தோன்றினர் என்று கருதுகின்றனர். போதிசத்துவர் தோன்றியன்றே போதி மரம், ராகுலனின் தாயார், யானை, கந்தகன் என்னும் குதிரை மந்திரி மகன் அனைவரும் பூவுலகில் தோன்றியதாக பௌத்த நூல்கள் தெரிவிக்கின்றன. மாயா தேவி கருவுற்றிருந்தபோது முப்பத்தி இரண்டு அதிசயங்கள் நிழ்ந்ததாம். அதுபோல போதிசத்துவர் பிறந்தபோதும் முப்பத்தி இரண்டு அதிசயங்கள் நிகழ்ந்ததாம். போதிசத்துவர் பிறந்த ஐந்தாவது நாளன்று குழந்தையை நறுமண நீரால் நீராட்டி அதற்கு பெயர் சூட்ட ஏற்பாடு செய்தனர். அதன்படி அரண்மனைக்கு 108 அந்தணர்கள் வந்திருந்தனர். இவர்களுள் எட்டுப்பேர் சோதிடக் கலையில் வல்லவர்கள். இவர்களில் ஏழுபேர் போதிசத்துவரின் உடலில் காணப்பட்ட அங்க அடையாளங்களைக் கொண்டு இக்குழந்தை பேறும் புகழும் பெற்று சிறந்த அரசனாவான். அல்லது துறவறம் மேற்கொண்டு சிறந்த துறவியாகத் திகழும்" என்று உரைத்தனர். ஆனால் எட்டாவது சோதிடனோ, "இக்குழந்தை உலகம் போற்றும் மாபெரும் துறவியாவார். ஒருபோதும் இவருக்கு அரசியலில் ஆர்வம் ஏற்படாது" என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டார். முதியவன், நோயாளி, பிணம், துறவி இந்த நான்கையும் காண நேர்ந்தால் அதன் பயனாகக் குழந்தை துறவறத்தை மேற்கொள்ளும்" என்றும் கூறினர். பின் குழந்தைக்கு "சித்தார்த்தன்" எனப் பெயரிட்டனர். போதிசத்துவர் பிறந்த ஏழாம் நாளன்று. மாயாதேவி இறந்து விட்டாள். தான் இறப்பதற்குமுன், தன் சகோதரி பிரஜாபதியிடம், பிற்காலத்தில் உலகம் போற்றும் புத்தராக விளங்கப்

போகும் தன் குழந்தையை அன்புடன் வளர்க்கும்படி வேண்டிக் கொண்டு போதிசத்துவரை அவளிடம் ஒப்படைத்தாள். இதன்பின் பிரஜாபதி சுத்தோதனின் மனைவியானாள். தன் சகோதரி வேண்டிக் கொண்டபடி போதிசத்துவரை கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்தாள். சுத்தோதன மன்னன் அரண்மனைக்குள் தன் மகனின் மனதை மாற்றக்கூடிய அபசகுணம் எதுவும் ஏற்படாமல் கவனித்து வந்தான். பின்னர் போதிசத்துவரின் பத்தொன்பதாம் வயதில், சுத்தோதனன் தனது சகோதரியின் மகள் யசோதாவை திருமணம் செய்துவைத்தான்.

சித்தார்ததன், தன் உறவினர்களும் நண்பர்களும் மகிழ ஒருசமயம் வாள்வித்தை வில்வித்தை ஆகிய கலைகளில் தனக்குள்ள திறமையை வெளிப்படுத்திக் காட்டினான். ஒருசமயம் சந்தகன் என்னும் தேர்ப்பாகன் சித்தார்த்தனை, தன் தேரில் வைத்து நகர்வலம் வந்து கொண்டிருந்தபோது. ஒரு தலை நரைத்த வயோதிகன், நோயாளி, பிணம் ஆகியவற்றை சித்தார்த்தன் காண நேர்ந்தது. அதுபோல் அவர்கள் விளையாகம் தோட்டத்தில் ஒரு துறவியையும் சித்தார்த்தன் கண்டான். இதன் மூலம் ஒருவன் தன் வாழ்வில் மூப்படைவதும், நோயுறுவதும், இறந்துவிடுவதும் தவிர்க்க முடியாதது என்ற உண்மையை உணர்ந்து கொண்டான். உலகில் அனைத்தும் நிலையற்றது என்பதை அறிந்துதான் அத்துறவி துறவறத்தை மேற்கொண்டுள்ளார் என்பதையும் சித்தார்த்தன் உணர்ந்து கொண்டான். இது சமயம் சித்தார்த்தனுக்கு ராகுலன் என்ற மகன் பிறந்தான். இந்த மகிழ்ச்சி மிக்க செய்தியை கேட்டும் சித்தார்த்தன் மனம் சந்தோஷம் கொள்ளவில்லை. வாழ்வின் நிலையாமை குறித்து ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கிவிட்டார். அவர் சோர்ந்திருப்பதைப் பார்த்த யசோதை அதற்கான காரணத்தைக் கேட்டபோது, சித்தார்த்தன். "பிணி, மூப்பு, சாக்காடு என்ற மூன்றும் உயிர்களை பாதிப்பதை எங்கும்

நான் காண்கின்றேன். அதனால் வாழ்க்கையில் ஆர்வம் குறைந்து எனக்கு கவலை ஏற்பட்டுள்ளது" என்றார்.

தனக்கு மகன் பிறந்த ஏழாம் நாளன்று, அதாவது சுத்த பூர்ணமி—வெள்ளிக் கிழமையன்று சித்தார்த்தன் பெருந்துறவு மேற்கொள்ள கிளம்பிவிட்டார். அன்று தன் ஊழியன் சந்தகனைக் கொண்டு கந்திகம் என்னும் தன் குதிரையைக் கொண்டுவரச் செய்து அரண்மனையைவிட்டு கிளம்பிவிட்டான். ஆயிரம் பேர் சேர்ந்து திறக்க வேண்டிய கோட்டைக் கதவு தானாகவே திறந்து கொண்டது. கடைசியாக ஒருமுறை தன் மகன் இராகுலனைப் பார்க்க விரும்பினான் சித்தார்த்தன். ஆனால் தன் மனைவி விழித்துக் கொண்டால் தன் தீர்மானம் கெட்டுவிடும் என்று கருதி புத்த நிலை அடைந்த பிறகு மகனைப் பார்த்துக் கொள்ளலாம் என்று கிளம்பிவிட்டார். கோலிய நாட்டில் உள்ள அநோம நதிக் கரையை சூரிய உதயமாவதற்குமுன் சித்தார்த்தன் அடைந்தான். நதியை, அவருடைய குதிரை ஒரே தாவில் தாவி மறுகரையை அடைந்தது. அங்கு சித்தார்த்தன் தன் ஆபரணங்களையெல்லாம் சந்தகனுக்கு அளித்து "நான் துறவறத்தை மேற்கொள்ளுகின்றேன்—இந்த விபரத்தை என் தந்தையிடம் தெரிவித்துவிடு" என்று கூறினான். பிறகு வாளை உருவி தனது தலையிலிருக்கும் மயிரையும் ஒரு அங்குல நீளத்திற்கு மட்டும் விட்டுவிட்டு மீதமிருப்பதை துண்டித்து ஆகாயத்தில் வீசினான். அது பூமியில் விழாமல் இந்திரன் அதை ஒரு பொற்பாத்திரத்தில் பெற்றுக் கொண்டான்.

சித்தார்த்தனின் தலையில் அது முதல் வளரவும் இல்லை. குறையவும் இல்லை. பின் கடிகாரன் என்னும் பிரம்ம தேவர் துறவறத்துக்குறிய பாத்திரம், உடை முதலியவற்றுடன் சித்தார்த்தன் முன் தோன்றி, அதை அவனிடம் அளித்தார். சித்தார்த்தன் அதைப் பெற்றுக் கொண்டு

பிச்சைப் பாத்திரத்தையும் கையில் வாங்கிக் கொண்டான். பின் சந்தகன் சித்தார்த்தனை அடி பணிந்து மூன்று முறை வணங்கி விடை பெற்றுக்கொண்டான். கந்திகம் என்னும் குதிரை சித்தார்த்தனைப் பிரிய மனமின்றி அந்த இடத்திலேயே இறந்து விட்டது.

துறவறத்தை மேற்கொண்ட பின்னர், போதிசத்துவர் மகத நாட்டின் தலைநகரான ராஜகிருகத்துக்குச் சென்றார். அங்கு அவர் பிம்பசாரனால் வரவேற்கப்பட்டார். தனதும் தன் நாட்டு மக்களுக்கும் நல்ல உபதேசங்கள் செய்யுமாறு பணிவன்புடன் அவன் வேண்டிக் கொண்டான். இதன் பிறகு ஆளாரா காலாமன், உத்தகன் போன்ற முனிவர்களைச் சந்தித்து உலகின் துன்பங்களுக்கு காரணங்களையும், முக்தி அடையும் வழிகளையும் கூறுமாறு பணித்தார். ஆனால் அவர்கள் கூறிய விளக்கங்கள் போதுசத்துவரை திருப்திப் படுத்தவில்லை. அதன்பின் அவர் உருவேலாக் காட்டிற்குப் போய்ச் சேர்ந்தார்.

உருவேலக் காட்டை அடைந்த போதி சத்துவர் அங்கு ஐந்து துறவிகள் தவம் செய்து கொண்டிருப்பதைக் கண்டார். அந்த ஐந்து துறவிகளும் பொறி புலன்களைக் கட்டுப் படுத்தி, அடக்க ஒடுக்கத்துடன் தவத்தில் ஈடுபட்டிருப் பதைக் கவனித்தார். ஆகவே அவரும் அவர்களைப் போலவே தவம் செய்வதில் ஈடுபட்டார். நாள்தோறும் உண்ணும் அளவைக் குறைத்துக் கொண்டே வந்து கடைசி யாக ஒரு தானிய அளவு மட்டும் உட்கொண்டு தவம் செய் தார். இதனால் இவரின் உடல் மிகவும் மெலிவுற்றது. உடலை வருத்தி தவம் செய்தும் எதிர்பார்த்த பலன் எதுவும் போதி சத்துவருக்கு கிட்டவில்லை. ஆகவே தவநிலை கலைந்து நீராடச் சென்றார். நீராடி முடிந்த பின் பலவீனத் தால் மிகவும் தள்ளாடி மயக்கமடைந்து கீழே விழுந்து விட் டார். இதைக் கவனித்த ஐந்து துறவிகளும் சுத்தோத

மன்னனிடம், போதி சத்துவர் இறந்து விட்டதாக தெரி வித்து விட்டனர்.

ஆனால் சுத்தோதனர் அதை நம்ப மறுத்து "என் மகன் புத்த நிலையை அடைவதற்கு முன் நிச்சயம் இறக்க மாட்டான்" என்று திட்டவட்டமாக அறிவித்தார். முனிவர்கள் திரும்ப வந்த போது, போதி சத்துவர் மயக்கம் தெளிந்து நடந்து கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தனர்.

போதி சத்துவர் தங்கியிருந்த உருவேலக் காட்டை அடுத்துள்ள சேனானி என்ற கிராமத்தில், சுஜாதா என்ற பெண் தனக்கு நல்ல கணவன் கிடைக்கப் பெற்று முதல் குழந்தை ஆணாகவும் பிறந்த காரணத்தால், அங்குள்ள ஆல மரத்தடியில் ஆண்டுதோறும் சிறந்த தான தருமங்கள் செய் வதாக வேண்டிக் கொண்டு அதன்படி செய்து வந்தாள். சுஜாதாவுக்கு ஆயிரம் பசுக்கள் உண்டு. அந்த செழிப் பான ஆயிரம் பசுக்களின் பாலை அவள் ஐநூறு பசுக் களுக்கு உணவாகக் கொடுத்தாள். இப்படி பசுக்களின் எண்ணிக்கையை படிப்படியாக குறைத்துக் கொண்டு கடைசியாக பதினாறு பசுக்களுக்கு மட்டும் பாலைக் கொடுத் தாள். அதன்பின் பதினாறு பசுக்களின் பாலை எட்டுப் பசுக் களுக்குக் கொடுத்தாள். அப்பாலின் தரமும் மணமும் விவரிக்க முடியாத அளவுக்கு சிறப்புப் பெற்றவை. குறிப் பிட்ட நாளன்று குறிப்பிட்ட எட்டுப் பசுக்களின் கன்றுகள் தாய்ப் பசுவிடம் செல்லாமல் விலகி நின்று கொண்டன.

பாத்திரத்தை பசுக்களிடம் எடுத்துச் சென்ற போது பசுக்களின் மடியினின்று பால் தானே சுரந்து பால் பாத்திரம் நிரம்பி வழிந்தது. இப்பாலை சுஜாதா காய்ச்சியவுடன் அதில் தேவர்கள் தேனைச் சொரிந்தனர். அப்பாலை எடுத்துக் கொண்டு ஆலமரத்தடியை அடைந்தாள். அங்கு தேவ மகன் போன்று போதிசத்துவர் இருப்பதைக் கண்டு

பக்தியுடன் தான் தயார் செய்திருந்த பாயாசத்தை அவருக்கு அளிக்க முற்பட்டாள். போதி சத்துவரும் அதை அன்புடன் பெற்றுக் கொண்டார். பாயசப் பாத்திரத்தை பெற்றுக் கொண்ட அவர் நிரஞ்சனை நதியை அடைந்தார். நதியில் நீராடிய பிறகு மஞ்சள் நிற ஆடையை அணிந்து கொண்டு பாயசப் பாத்திரத்தை கையில் எடுத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பினர். புறப்பட்டுச் சென்ற அவர் போதி மரத்தை—அரச மரத்தை அடைந்து கிழக்குத் திசை நோக்கி உட்கார்ந்தார். பிறகு பாத்திரத்தில் உள்ள பாயாசத்தை வாய் நிறைய 49 முறைகள் அருந்தினர். பின் 49 நாட்கள் போதி மரத்தடியிலேயே கழித்தார். நாற்பத்தி ஒன்பது நாட்களும் தியானத்தில் இருந்த சமயம் சுஜாதா தங்க பாத்திரத்தைக் கையில் வைத்துக் கொண்டே இருந்து கடைசி நாளன்று "இன்று தினம் நான் புத்த நிலை அடைவது உறுதியாயின் இந்தத் தங்கப் பாத்திரம் ஆற்றில் எதிர் நீந்தி வேகமாகச் செல்லக் கடவது என நினைத்து அதை ஆற்றில் எறிந்தார். அவர் எதிர்பார்த்தபடியே பாத்திரம் ஆற்றை எதிர்த்து நீந்திச் சென்றது. அப்போது அங்கு வந்த வாலிபன் ஒருவன் தான் சுமந்து சென்ற புல்லுக் கட்டில் எட்டுப் பிடி அளவு போதி சத்துவரிடம் அளித்தான். அதை தான் இருந்த இடத்தில் பரப்பி கிழக்குத் திசை நோக்கி அமர்ந்தார். "புத்த நிலை அடையாமல் இந்த இடத்தை விட்டு நகருவது இல்லை" என்று உறுதியுடன் அரச மரத்தடியில் சப்பணம் போட்டு அமர்ந்தார். பின் கொஞ்சம் கொஞ்சமாக பிறவிக்குக் காரணமாக இருப்பது அவர் என்பதைத் தெரிந்து கொண்டார். ஆசையால் உந்தப்பட்டு, அதனுல் அறியாமல் இருளில் சிக்கி உண்மை நிலையை உள்ளபடி உணர முடியாமல் பொறி புலன்கள் அவதிப்படுகின்றன. ஆகவே அறியாமையே துன்பத்தின் பிறப்பிடம் என்பதை சந்தேகத்திற்கு இடமின்றி தெரிந்து கொண்டார். கீழ்கண்ட எட்டுவித சீலங்களைக் கடைப்பிடித்து அறியாமையை அகற்ற முடியும் என்பதையும் உணர்ந்தார்.

1. நற்காட்சி 2. நல்லெண்ணம் 3. நற்சொல். 4. நற்செய்கை. 5. நல்வாழ்க்கை. 6. நன் முயற்சி. 7. நல்லனவற்றைக் கடைப் பிடித்தல். 8. நல்லோர் உறவு. கௌதமர் தன் 35வது வயதில் புத்த நிலையை அடைந்தார். கி. மு. 568ம் ஆண்டு, வைகாசி மாதம் ஆறாம் நாள், புதன் கிழமை இரவு நேரத்தில் போதி சத்துவர் பூரண ஞானத்தைப் பெற்று புத்தரானார். புத்தர் வைகாசி மாதம் பௌர்ணமியன்று பிறந்தார். முப்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் வைகாசி மாதம் முழுமதி நாளன்று போதி ஞானம் பெற்றார். அதன்பின் தன் என்பதாவது வயதில் கி. மு. 543ம் ஆண்டில் முழுமதி நாளில் செவ்வாய்க் கிழமையன்று மகா பரிநிர்வாணத்தை அடைந்தார். ஆகவே உலகில் உள்ள பௌத்தர்கள் அனைவருக்கும் வைகாசி—பௌர்ணமி நாள் மிகச் சிறப்பான நாளாகும்.

சுஜாதா கொடுத்த பாயாசத்தை 49 நாள் அருந்திய பின், புத்தருக்குப் பசி உண்டாயிற்று. அப்போது திரிபுஷன், பல்லிகள் என்ற இரு வியாபாரிகள் புத்தரை காட்டு வழியில் சந்தித்தனர். அவர்கள் புத்தருக்கு அன்புடன் ஒரு பாத்திரத்தில் உணவளித்தார்கள். அதை அன்புடன் பெற்றுக் கொண்ட புத்தர், அந்த வியாபாரிகளின் விருப்பப் படி அவர்களுக்கு நல் உபதேசங்கள் செய்தார். அதைக் கேட்ட அந்த வியாபாரிகள் முதன் முதலாக புத்த மதத்தைத் தழுவும் பேறு பெற்றவர்களானார்கள். புத்த மதத்தைத் தழுவிய இந்த இருவரும் பௌத்த சமய மணிகள் மூன்றில் முதல் இரு மணிகளைக் கூறி பௌத்த சமயத்தைத் தழுவினர். 1. புத்தம் சரணம் கச்சாமி 2. தம்மம் சரணம் கச்சாமி என்பனவே அவை. மூன்றாவதான சங்கம் சரணம் கச்சாமி பின்னால்தான் உருப்பெற்றது.

புத்தரின் உபதேசத்தை மான் வனத்தில் தவநிலை மேற்கொண்டிருந்த கௌண்டினியர், வப்பர், பாஷ்பர், மகா

நாமர், அசுவஜித் என்பவர்கள் புத்தரின் உபதேசங்களை செவிமடுத்து, அவர் கூறிய உயர் கருத்துக்களைப் புரிந்து கொண்டனர். பின் கௌண்டினியரை தம் சீடராக ஏற்றுக் கொண்டார். அவரைப் பின்பற்றி மற்ற நான்கு பேரும் பௌத்த பிக்குகளானார்கள். இந்த ஐந்து பிக்குகளையும் கொண்டு தான் கடைசி மணியான சங்கம் ஏற்படுத்தப் பட்டது.

சில ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு முறை புத்தர் தன் தந்தையின் அரண்மனைக்கு விஜயம் செய்தார். அப்போது தன் மனைவியும் துறவி வாழ்க்கை வாழ்ந்து வருவதை அறிந்து அவளை அவளின் அந்தப்புறத்தில் சென்று பார்த்தார். அப்போது சுத்தோதனன் புத்தரிடம் "யசோதரைக்கு உன்னிடம் அளவற்ற பக்தி உண்டு. அவள், நீர் மஞ்சள் நிற ஆடையை அணிந்ததை கேள்விப்பட்டு அவளும் மஞ்சள் நிற ஆடையை அணிந்து வருகின்றாள். ஒவ்வொரு நாளும் ஒரு வேளைதான் சாப்பிடுகின்றாள். வெறும் தரையில்தான் படுத்து உறங்குகின்றாள்" என்றார். அதற்குப் புத்தர், "அவள் பூர்வ ஜென்மத்தில் செய்த புண்ணியத்தால்தான் புத்தர் ஒருவருக்கு மனைவியாகும் பேறு பெற்றாள்" என்று கூறி, தன் மனைவிக்கு சில உபதேசங்கள் செய்தார் அந்த உபதேசங்களைக் கேட்ட யசோதரை பௌத்த மதத்தைத் தழுவினாள்.

புத்தர் அரண்மனையில் தங்கியிருந்த நாட்களில் ஒரு நாள் யசோதரை தன் மகன் இராகுலனை அழைத்து, "அன்பே, துறவிகளுக்கு மத்தியில் மஞ்சள் நிற ஆடை அணிந்திருக்கின்றாரே அவர் தான் உன் தந்தை; அவரிடம் நீ சென்று உனக்குறிய பிதுர் ராஜ்யத்தை தரும்படி கேள்" என்று கூறி அனுப்பி வைத்தாள். அப்போது எட்டு வயது நிரம்பிய அச்சிறுவன் அதன் உட்கருத்தைப் புரிந்து கொள்ளாமல் தாய் கூறியபடி புத்தரிடம் சென்று கேட்டான். இதைக் கேட்ட புத்தர் வெகுநேரம் எதுவும் பேசாதிருந்து

விட்டு, இந்த வயதில் இவனைத் துயவறத்தை மேற் கொள்ளச் செய்வது பொருத்தமாக இருக்குமோ என்று சிந்தித்தார். அப்போது அவர் மகன் இராகுலன் "தங்களின் நிழலில் தங்கியிருப்பது எனக்கு பேரானந்தத்தை அளிக் கிறது" என்றான். இந்த வார்த்தைகளைக் கேட்ட புத்தர் தன் மகனை நோக்கி, "மகனே, போதி மரத்தில் எனக்கு கிடைத்த பிதுர் ராஜ்யத்தையே உனக்கு நான் அளிக்க ஆவலாய் உள்ளேன்" என்று கூறினார். இதன் பிறகு புத்தரின் ஆணைப்படி சாரிபுத்திரன் இராகுலனுக்கு துறவற தீட்சையை செய்து வைத்தான். இராகுலன் பின் சாரி புத்திரனுக்கு சீடனாகி பௌத்த தருமங்களைப் பயின்று வந்தான்.

வைசாலியில் தங்கியிருக்கும் புத்தர் பெருமான் ஒரு நாள் அதிகாலையில் வழக்கம் போல் தியானத்தில் மூழ்கி யிருந்தார். அப்போது தம் தந்தை நோயுற்று அவதிப்படு வதைத் தெரிந்து கொண்டார். உடனே தன் சீடர்கள் சிலரை அழைத்துக் கொண்டு ஆகாய வழியாக கபில வஸ்துவை அடைந்தார். அங்கு சென்றவுடன், தம் தந்தை யின் தலை மீது தன் கையை வைத்து "எண்ணற்ற பிறவி களில் நான் செய்திருக்கும் நல்வினைகளாலும் 49 நாட்கள் போதி மரத்தின் கீழ் செய்த தியானத்தின் பயனாலும் இந்தத் தலையை பாதித்துக் கொண்டிருக்கும் வேதனை பூராவும் அகலட்டும்" என்று கூறினார். உடனே சுத்தோதனின் உடல் வேதனை பூராவும் அகன்றது. ஆனால் உடலில் பலவீனம் மட்டும் இருந்து வந்தது. அப்போது புத்தர் தன் தந்தைக்கு யாக்கை நிலையாமை பற்றிய உபதேசங் களைச் செய்தார். இதைக் கேட்ட சுத்தோதனன் அறிவு விளக்கம் பெற்று தனது 9/வது வயதில் நிர்வாண நிலையை அடைந்தார்.

பௌத்த மதத்தில் பெண்கள் :—

சுத்தோதன மன்னன் இறந்தபிறகு அவன் மனைவி பிரஜாபதி துறவற வாழ்க்கையை மேற்கொள்ள விரும்பினாள். ஆனால் புத்தர் பெருமான் அவளை தன் சங்கத்தில் அவளைச் சேர்த்துக் கொள்ள இசைவு தரவில்லை. ஆனால் பிரஜாபதியும் வேறு பல பெண்களும் துறவறத்தில் ஆசை கொண்டு புத்த மதத்தைத் தழுவ வைசாலியிலுள்ள புத்தரை காண கால்நடையாகவே புறப்பட்டு விட்டனர். வைசாலியில், ஆனந்தன் என்பவன் மூலம் தங்கள் வருகையையும், காரணத்தையும் புத்தர் பெருமானுக்குத் தெரிவித்தனர். ஆனால் புத்தர் அதுசமயம் ஆனந்தனிடம், "ஆனந்தா! பெண்களை நம் சங்கத்தில் சேர்ப்பதில் எனக்கு விருப்பமில்லை; அதனால் சங்கம் தொடர்ந்து செயல்படாத நிலை ஏற்படலாம். பெண்கள் சங்கத்தில் சேராது இருந்தால் சங்கம் ஆயிரம் ஆண்டுகள் நீடித்து நிலைக்கும். அவர்களை சேர்த்துக் கொண்டால் ஐநூறு ஆண்டுகள் மட்டுமே அது நிலை பெற்றிருக்கும். பெண்கள் எட்டு நெறிகளை கடைப்பிடித்து ஒழுகச் சம்மதித்தால் அவர்களை சங்கத்தில் சேர்த்துக்கொள்ளலாம்" என்று கூறினார். இதை ஆனந்தன் பிரஜாபதியிடம் தெரிவித்தபோது அவர்களும் மன மகிழ்ச்சியோடு பகவான் புத்தர் கூறியபடி நடப்பதாகக் கூறி புத்த சங்கத்தில் சேர்ந்து கொண்டனர்.

புத்தர் பிக்குணிகளுக்கு கீழ்கண்ட எட்டு விதிகளை ஏற்படுத்தினர். 1) பிக்குகள் இல்லாத எந்த ஊரிலும், பிரதேசத்திலும் எந்த பிக்குணியும் இருக்கக் கூடாது. 2) பதினைந்து தினங்களுக்கு ஒருமுறை பிக்குகள் கூடும்போது அவர்களிடம் அவள் உபதேசம் பெற வேண்டும். 3) எக்காரணம் பற்றியும் ஒரு பிக்குவை பிக்குணி கண்டிக்கவோ ஏசவோ கூடாது. 4) இரண்டாண்டு கால பயிற்சிக்குப் பிறகே சங்கத்தில் பிக்குணியாக ஏற்றுக் கொள்ளப்படுவாள்.

5) பிக்குணி பிக்குவுக்கு உபதேசம் செய்யலாகாது. ஆனால் பிக்குணிகளுக்கு பிக்கு உபதேசம் செய்யலாம். 6) தவறு செய்த பிக்குணி இருபாலரும் கூடி இருக்கும் சங்கத்தார் விதிக்கும் பரிகாரத்தை தவறாது செய்ய வேண்டும். 7) ஆண்டுக்கு ஒருமுறை மார்க்காலவாசத் திற்குப்பின் பிக்குகளும் பிக்குணிகளும் கூடியுள்ள சங்கத் தில் தனது குற்றங்களை எடுத்துக் கூறும்படி சங்கத்திடம் ஒவ்வொரு பிக்குணியும் கேட்க வேண்டும். 8) தாம் சங்கத் தில் சேர்ந்த ஆண்டுகளையோ அல்லது தமது வயதையோ கணக்கில் கொள்ளாது. சிறிய பிக்குகளையும் பெரிய பிக்கு களையும் பிக்குணிகள் வணங்க வேண்டும்.

புத்தர் அறநெறிப் பிரசாரம் செய்ய ஆரம்பித்து இருபது ஆண்டுகள் ஆனபிறகு பிக்குகளின் கூட்டத்தில் கட்டுப்பாடற்ற நிலைமை உருவாகியது. ஆகவே தனக்கு பிறகு ஒரு அணுக்கத் தொண்டர் ஒருவரை தேர்ந்தெடுக்க விரும்பினர். அவரின் கட்டளைப்படி, அவருடன் அவருக் காக பல காலம் பணியாற்றிய ஆனந்தன் என்பவனை வற் புறுத்தி அப்பொறுப்பை அளித்தார். ஆனந்தன் சில நிபந் தனைகளின் பேரில் அப்பொறுப்பை ஏற்றுக் கொண்டான். அவற்றில் சில. 1) புத்தருக்கும் கிடைக்கும் சிறந்த உடை களை அவர் தனக்கு தரக்கூடாது. 2) அதுபோல் பிச்சை யையும் தரக்கூடாது. 3) புத்தர் அமரும் அரையில் தன்னையும் அமரச் சொல்லக் கூடாது. 4) பெருமானுக்கும் கிடைக் கும் மரியாதைகளில் தனக்கும் பங்கு இருத்தல் கூடாது. 5) எச்சமயத்திலும் பெருமானைச் சந்திக்க தடை இருக்கக் கூடாது. 6) தான் வெளியே சென்ற சமயம் பிறருக்கு உபதேசம் செய்ததை தான் திரும்பியதும் தனக்கும் உப தேசிக்க வேண்டும் போன்றவையாகும். பௌத்த சமயத் தொண்டர்களில் ஆனந்தன் முதன்மை ஸ்தானம் பெற்றவர். பௌத்தர்களின் மறையான திரிபிடகத்தில் அபிதம்மபிடகம் என்பது ஆனந்தரின் வாய்மொழியாகக் கிடைத்தவை.

ஆனாலும் சாரிபுத்திரர், மொக்கலானர் ஆகிய இருவருக்கும் கிடைத்திருக்கும் உன்னத நிலையை பௌத்த நூல்கள் ஆனந்தருக்கு அளிக்கவில்லை. காரணம் இந்த இருவரும் ஞானத்திலும் வாதம் புரியும் தகுதியிலும் ஆனந்தரைக் காட்டிலும் மேலானவர்கள்.

கடைசியாக கௌதமபுத்தர் குசிநகரம் என்னும் சிற்றூரை வந்தடைந்தார். அது ஒரு சாதாரண சிற்றூர். அங்குதான் தான் பரிநிர்வாணம் அடையப்போவதாக புத்தர் பெருமான் ஆனந்தனிடம் தெரிவித்தார். அதற்கு ஆனந்தன், "பெருமானே, தாங்கள் இந்த சிற்றூரில் பரிநிர்வாணம் அடைவது பொருத்தமாக இராது. காசி, கொசாம்பி, சம்பா, இராஜகிருகம், சிராவஸ்தி போன்ற பெரிய நகரங்களில் தாங்கள் அந்த நிலையை அடைந்தால், தங்களின் சடலத்தைப் பெருமையுடன் அடக்கம் செய்ய வசதியாக இருக்கும்" என்று கூறினர். அதற்கு புத்தர், "இந்த ஊர் முன்பு ஒரு காலத்தில் குசவதி என்னும் பெயரில் பெருமை பெற்ற நகராக இருந்தது. ஆகவே இது பற்றி நீ கவலைப்படாமல், இந்த ஊரில் உள்ள மன்னர்களிடம் சென்று நான் நாளை மகாபரிநிர்வாணம் எய்தப் போகும் செய்தியைத் தெரிவித்துவிட்டு வா" என்றூர். ஆனந்தரும் இந்த விஷயத்தை அவ்வூர் மக்களிடம் தெரிவிக்க, அவர்கள் துக்கம் மேலிட ஒவ்வொருவராக பெருமானை வந்து தரிசித்தனர்.

பின் அங்கு கூடியிருந்த பிக்குகளைப் பார்த்து, "என் அருமைச் சீடர்களே! பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் உண்டான எந்தப் பொருளுக்கும் அழிவுண்டு. இதை எப்பவும் மனதில் கொண்டு விழிப்புடன் இருங்கள். நிர்வாணப் பேற்றை அடைவதற்கு உண்மையோடும் ஊக்கத்தோடும் உறுதியோடும் முயலுங்கள்" என்று கூறினர். இதுதான் புத்தர் போதித்த கடைசி உபதேசமாகும். பின் வைகாசி மாதம் முழுமதி நாளன்று புத்தர் மகாபரிநிர்வாணம் எய்தி

ணர். அப்போது அவருக்கு வயது எண்பது பூர்த்தியாகி எண்பத்தி ஒன்று தொடங்கியிருந்தது.

விவரம் தெரிந்ததும் அவ்வூர் மன்னர்களும், ஸ்ரீ சத்துவ மடையாத அவரின் சில சீடர்களும் உலகின் ஒளி மறைந்து விட்டதே என புலம்பித் தவித்தனர். பின் பல பூமாலைகளி ணுலும், நறுமணப் பொருட்களினுலும் போதிசத்துவரின் உடலை அலங்கரித்தனர். புத்தரின் புகழைப் பாடிக் கொண்டே அவரின் உடலை தீ மூட்டாமல் ஆறு நாட்கள் வரை வைத்திருந்தனர். பிறகு புத்தர் பெருமானின் திரு மேனியை துணியாலும் பஞ்சினுலும் ஒன்றன்பின் ஒன்றுக ஐநூறு தடவை சுற்றினுர்கள். அதன்பின்னர் பெரிய ஒரு இரும்பு பாத்திரத்தில் நிறைய எண்ணை விட்டு துணியில் சுற்றின உடலை அதற்குள் வைத்து மற்றொரு இரும்புப் பாத் திரத்தினுல் அதை மூடினுர்கள். பிறகு பாத்திரத்தைச் சுற்றி ஈம விறகுகளை அடுக்கினுர்கள். ஆனுல் மன்னர்கள் எவ் வளவு முயன்றும் தீபற்றவில்லை. இதைக் கண்ட ஆச்சரிய முற்ற மன்னர் தலைவர்கள் அனுருத்த மகாதேரரை அணுகி விபரம் கேட்டனர். கசியபமகாதேரர் வந்து புத்தரை தரி சித்தபின்னர் தீ மூட்ட வேண்டும் என்று தேவர்களின் விருப்பம் எனக் கூறினுர். புத்தர் மகாபரிநிர்வாணம் அடைந்த செய்தி தெரிந்து தன் சீடர்களுடன் விரைந்து கசியபமகாதேரர் குசி நகரம் வந்தடைந்தார். பெருமானின் திருமேனி மும்முறை வலம் வந்தார். உடனே ஈம விறகில் நெருப்பு தானே பற்றிக்கொண்டு எரியத் தொடங்கியது. புத்தரின் பூதவுடல் எரிந்தபிறகு வானிலிருந்து மழை பொழிந்து தீயை அவித்தது. புத்தரின் உடல் சாம்பலான பிறகு மன்னர்கள் அதை பொற்பாத்திரங்களில் வைத்து வழி பட்டு வந்தனர். ஆனுல் அப்போது ஒவ்வொரு தேசத்து அரசனும் புத்தரின் தாதுக்களில் தங்களுக்கும் உரிமை உண்டு என்று கூறினுர்கள். அதனுல் அந்தப் பெரு மானின் பூதவுடல் சாம்பல் பல கூறுகளாகப் பிரித்து பல மன்னர்களுக்கும் வழங்கப்பட்டது.

இத்துடன், புனித புத்தரின் வாழ்க்கை சரித்திரத்தை முடித்து, இனி அவர் போதித்த முக்ய போதனைகளை எதிர் வரும் பக்கங்களில் தொகுத்தளிக்க ஆசைப்படுகிறேன்.

திரிபீடகம் :—

பௌத்த மதத்தினர் போற்றிப் புகழும் சிறப்பான நூல் திரிபீடகம் என்பது. திரிபீடகம் என்றால் மூன்று கூடைகள் என்பது பொருள். புத்தர் நாற்பத்து ஐந்து ஆண்டுகள் தன் சீடர்களுடன் ஊர் ஊராகச் சென்று தரும உபதேசங்கள் செய்தார். அவர் அவ்வப்போது செய்த உபதேசங்களை அவர்களின் சீடர்கள் மனப்பாடம் செய்து வைத்திருந்தனர். புத்தர் மகா பரி நிர்வாணம் அடைந்தபிறகு சீடர்கள் மனப்பாடம் செய்து வைத்திருந்த உபதேசங்களை ஒன்று சேர்த்து மூன்று பிரிவுகளாகச் செய்தனர். அவை 1. விநய பிடகம் 2. சூத்திரம் பிடகம் மற்றும் 3. அபிதம்ம பிடகம் என அழைக்கப்படுகிறது. இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையது.

பிக்குகளும் பிக்குணிகளும் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளை விளக்குவது விநய பிடகம்.

புத்தரின் உபதேசங்களை விளக்குவது சூத்திர பிடகம்.

பௌத்த சமய கோட்பாடுகள், தத்துவங்கள் ஆகியன பற்றி தர்க்க ரீதியில் விளக்குவது அபிதம்ம பிடகம்.

இந்த நூல் பாலி மொழியில் எழுதப்பட்டுள்ளது. விநயம் பற்றிய போதனைகளை உபாலி என்னும் அருகத் தொகுத்தளித்தார். தருமம் பற்றிய விளக்கங்களை ஆனந்தர் வாய் மூலம் கேட்டறிந்து ஒப்பு நோக்கி ஆராய்ந்து ஒரு முடிவு எடுத்து வரையறை செய்தார். புத்தரின் போதனைகள் யாவும் வெகு காலம் வரை ஒலி

வடிவத்திலேயே இருந்து வந்தது. விநய பிடகத்தை மனப் பாடம் செய்தவர்கள் விநயதரர் என்றும், சூத்திர பிடகத்தை மனப்பாடம் செய்தவர்கள் சூத்ராந்திகர் என்றும், அபிதம்ம பிடகத்தை மனப்பாடம் செய்தவர்கள் அபிதம்மிகர் எனவும் சிறப்பாக அழைக்கப் பட்டனர். ஒலி வடிவில் இருந்து வந்த திரிபிடகத்தை வரி வடிவில் கொணர்ந்த பெருமை சிங்கள நாட்டினரையே சேரும். சிங்களத்தை ஆண்ட வந்த காமினி அபயன் என்னும் அரசன் தான் போற்றத் தக்க இக்காரியத்தை செய்து முடித்தான். இந்நூல் முதல் முதலாக பாலி மொழியிலும், பின் சம்ஸ்கிருத, பர்மிய, சயாமிய, சிங்கள மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பட்டது. மற்ற மதங்களைப் போல இதிலும் கருத்து வேறுபாடுகள் காரணமாக இரண்டாகப் பிரிந்து ஹீனயானம்—மகாயானம் என இரு பிரிவுகளாகப் பிரிந்தது.

இலங்கை, மலேயா, பர்மா, தாய்லாந்து, கம்போடியா, வியட்நாம், இந்தோனிஷ்யா போன்ற நாடுகளில் ஹீன யானம் பிரிவையும் (தேரவாத பௌத்தம்—அதாவது பெரி யோர் கடைப் பிடிக்கும் பௌத்தப்) மத்ய ஆசியா, கொரியா, சீனு, ஜப்பான், நேபாளம், திபெத்தின் மத்ய பாகம் ஆகிய பிரதேசங்களில் மகாயான புத்த மதத்தையும் பின்பற்றி வரு கின்றனர்.

திரிபீடகத்தை ஆழ்ந்து படித்தால், சுமார் 2500 ஆண்டு களுக்கு முன் இமயத்திலிருந்து கங்கை நதி வரை பரவி யிருந்த சமய வாதங்கள், பழக்க வழக்கங்கள் புத்தரின் போதனைகள் ஆகியவற்றை நன்கு தெரிந்து கொள்ள முடியும்.

பௌத்த தருமம்:—

பௌத்த மதத்தில் அநித்தியம், அநாத்துமம், மற்றும் துக்கம் ஆகிய இவை மூன்றும் அடிப்படைக் கோட்பாடு

களாகக் கூறப்பட்டுள்ளது. அநித்தியம் என்னும் சொல் நிலையற்ற தன்மையைக் குறிப்பது. மனிதன் மட்டுமன்றி மரம், செடி, கொடி முதலியனவும், விலங்கு, பறவை போன்றவையும் கூட இந்த அநித்யத்துக்கு உட்பட்டே செயல்படுகின்றது.

விநாடிக்கு விநாடி, மனமும் சடப் பொருளும்—அதாவது உயிரும் உடலும் மாற்றம் அடைந்து கொண்டே இருப்பதால் உலகில் எந்த ஒரு பொருளும் நிலையானதாக அழிவில்லாததாக இருக்க முடியாது என இம்மதம் வலியுறுத்திக் கூறுகிறது. நிலையான ஜீவாத்மாவோ பரமாத்மாவோ இல்லை என்றும் பௌத்தம் கூறுகிறது. ஜடப் பொருட்கள் ஒன்று சேரும் போது குறிப்பிட்ட நிலையை அடைந்ததும் உயிர் உருவாகின்றது. பிறகு நாளடைவில் அந்தப் பொருட்கள் சிதைந்து அழிந்து விடுமாயின் ஆத்மாவும் அழிந்து விடுகிறது. எனவே நிலையான ஆத்மா என்று எதுவும் இல்லை என இம்மதம் கருதுகிறது. காரண காரியத்தை ஆராய்ந்து துக்கத்தை அகற்றி விட்டால் இப்பூவுலகில் அனைவரும் பேரின்ப நிலையை எய்தலாம் என்று பௌத்தம் போதனை செய்கிறது.

சரி, துக்கங்கள் எதனால் ஏற்படுகின்றது? பிறப்பதும், மூப்படைவதும், இறப்பதும், விரும்பியவை கிடைக்காமல் இருப்பதும், விருப்பம் இல்லாதவற்றுடன் சேர்ந்திருப்பதும் நம்மை துக்கத்தில் ஆழ்த்துகின்றன. ஆனால் இத்தகைய துக்கங்கள் எதனால் ஏற்படுகின்றன—ஆசையினால் ஏற்படுகின்றன. அறியாமையால் ஆசை ஏற்படுகின்றது. ஆகவே ஒருவன் பேதமை, அவா ஆகிய இரண்டையும் களைந்து விட்டால், ஒருவன் எளிதாக வீடு பேற்றை அடைய முடியும். பேதமையை ஞானத்தினாலும், ஆசையை தியானத்தினாலும் கட்டுப்படுத்தி விடலாம் என பௌத்தம் போதிக்கிறது. இவற்றைப் போக்க இல்லறத்தார் கீழ்

கண்ட ஐந்து சீலங்களைக் கடைப் பிடித்து ஒழுக வேண்டும் என பௌத்தம் கூறுகிறது. 1. எந்த உயிரையும் கொல்லலாகாது. அனைத்து உயிரையும் அன்போடு நேசிக்க வேண்டும். 2. பிறர் பொருளை விரும்பலாகாது. 3. மனைவியைத் தவிர மற்ற மாதர் எவருடனும் சிற்றின்பம் பெறக் கூடாது. 4. உண்மையே பேச வேண்டும். 5. மது அருந்தக் கூடாது.

இல்லத்தில் இருந்து கொண்டே மேன்மேலும் உயர் ஞானம் பெற விரும்புவோர் மேலும் கீழ்கண்ட விதிகளையும் கடைப் பிடிக்க வேண்டும். 1. இரவில் மிதமான உணவு உட்கொள் 2. மலர், சந்தணம் போன்ற வாசனைப் பொருட்களை பயன்படுத்தாமல் இருத்தல் 3. பஞ்சணையில் படுக்காமல் தரைமீது பாய் விரித்துப் படுத்தல். துறவு நிலை மேற்கொள்ளுவோர் கீழ் கண்ட இரு விதிகளையும் சேர்த்து கடைப்பிடிக்க வேண்டும். 1. இசை, நடனம், நாடகம் ஆகியவற்றில் விருப்பம் கொள்ளாமை. 2. தங்கம் வெள்ளி இவற்றைத் தொடாதிருத்தல். இவற்றைக் கடைப்பிடித்து ஒழுகுபவனே பிக்கு எனப்படுவான்.

தியானம் செய்வதினால் புலனடக்கம் ஏற்படுவதுடன் தீயனவற்றை விலக்கவும் நல்லனவற்றை ஏற்றுக் கொள்ளவும் ஏற்கும் மனப் பக்குவம் ஏற்படுகிறது.

பௌத்தர்கள் வேள்வி செய்வதை ஒரு அறமாகக் கொள்ளவில்லை. நிர்வாணம் அல்லது மோட்சம் என்பது சொந்த அனுபவத்தினால் மட்டுமே தெரிந்து கொள்ளக் கூடிய ஒரு நிலை என்றும், பிறர் கூறுவதைக் கேட்டு அதை உணர்ந்து கொள்ளவோ, தெரிந்து கொள்ளவோ முடியாது என்றும் பௌத்தம் கூறுகிறது.

ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமா இருப்பது அவனவன் செய்யும் நல்வினை தீவினைகளே—

அதாவது கருமமே என்று பௌத்தம் கருதுகிறது—எண்ணம்—சொல்—செயல் ஆகிய மூன்றும் கருமம் என்பதாகும். புத்தர் போதித்தவற்றை கடைப்பிடித்து ஒழுகுவது நற்கருமத்தின் பாற்படும் என்றும், அவர் விலக்கியதைக் கடைப்பிடித்து ஒழுகுவது தீய கருமத்தின் பாற்படும்.

பத்து தீய ஒழுக்கங்களை விட்டுவிடுமாறு பௌத்தம் வற்புறுத்துகிறது. பொய் கூறுதல்—பிறரை இகழ்ந்து பேசுதல்—பயனற்ற சொற்களை கூறுவது—பிறர் பற்றி கோள் சொல்லுதல்—இந்த நான்கும் வாக்கு சம்பந்தமான தீமைகள்.

கொலை செய்தல்—திருடுதல்—விபசாரம் செய்தல்—இவை மூன்றும் உடலால் ஏற்படும் குற்றங்களாகும். ஆசை—குரோதம்—தவறான எண்ணங்கள்—இந்த மூன்றும் மனம் பற்றிய தீமைகள். இந்தப் பத்துக் குற்றங்களையும் ஒருவன் அகற்றுவதில் வெற்றி பெற்றால், பற்றின்றி நற்காரியங்களை செய்யக்கூடிய பரிபக்குவம் அவனுக்கு பழக்கமாகி விடும். உலகில் காணப்படும் ஏற்ற தாழ்வுகளுக்கு முற்பிறவியில் செய்த கருமங்கள் மட்டுமின்றி இப்பிறவியில் செய்யப்படும் கருமங்களும் காரணம் என பௌத்தம் வலியுறுத்துகின்றது.

**தம்மபதம் :—**

பகைமையை பகைமையால் தணிக்க முடியாது. அன்பின் மூலமே அதைத் தணிக்க முடியும். இதுவே தொன்றுதொட்டு வரும் அறநெறியாகும்.

நன்கு கூரை வேய்ந்த வீட்டினுள் மழை நீர் புகாதது போல நன்கு பயிற்சி பெற்ற மனதில் தீய ஆசைகள் புக முடியாது.

விடாமுயற்சி, ஆர்வம், அடக்கம், ஒழுங்கு ஆகியவை மூலமாக தம்மை ஒரு தீவுபோல் ஆக்கிக்கொண்டு வெள்ளத்

தில் சிக்கிக் கொள்ளாமல் அறிஞர்கள் தங்களைப் பாது காத்துக் கொள்ளுகின்றனர்.

விழிப்புடன் இருப்பது ஒருவனைத் தீய நெறிகளில் செல் லாது தடுக்கிறது. அதன் மூலம் அவன் எளிதில் வீடு பேற்றை அடைகின்றான்.

உறுதியற்றவன், உண்மையறிவு இல்லாதவன், சஞ்சல புத்தியுடையவன் ஆகியோர் ஒருபோதும் முழுமையான மெய்யுணர்வைப் பெறமாட்டார்கள்.

தாய் தந்தையர், உற்றார் உறவினர் செய்யும் நன் மையைக் காட்டிலும் அடக்கமுள்ள மனம் ஒருவனுக்கு அதிக நன்மையைச் செய்கிறது.

மல்லிகை மலர், தகர மலர், தாமரை மலர் சந்தனம் இவற்றின் நறுமணத்தைக் காட்டிலும் நல்லோரின் நடத்தை என்னும் நறுமணம் அதிக மேன்மை பெற்றது.

தேன்போல் இனிப்பதாக நினைத்துக் கொண்டு பயன் தெரியும்வரை தீய செயல்களைப் பேதை செய்துவருகின்றான். தீய செயல்களின் விளைவுகள் தெரிந்த பின்னர் அவன் துன் புற்று ஏங்குகிறான்.

தீயவர்களுடன் நட்புக் கொள்ள வேண்டாம். அற்பர் களோடும் நட்புக் கொள்ள வேண்டாம். நல்லவர்களோடு நட்புக் கொள்ளுங்கள். மேன் மக்களுடன் நட்புக் கொள் ளுங்கள்.

பூமிக்கு ஒப்பான பொறுமையும், வாயில் கம்பம் போன்ற உறுதியும், சேறு இல்லாத குளத்து நீர் போன்ற தூய்மையும் எவனிடம் உள்ளதோ அவன் பிறப்பு இறப்பு என்னும் சுழலில் சிக்கிக் கொள்வது கிடையாது.

பொருளற்ற பயன் தராத ஆயிரம் வார்த்தைகளைக் காட் டிலும் மனதுக்கு அமைதி தரும் பொருள் பொதிந்த ஒரு வார்த்தையே மேலானது.

புண்ணியத்தைச் செய்வோர் அதை மீண்டும் மீண்டும் தொடர்ந்து செய்யட்டும். மனம் அதிலேயே தோய்ந்து இருக்கட்டும். புண்ணியம் சேரச்சேர இன்பமும் அதிகமாகி விடுகிறது.

தன்னைப் போலவே இன்பமுள்ள உயிர்களை தன் சுகம் கருதி எவன் துன்புறுத்துகின்றானோ. அவனுக்கு மறுமையில் இன்பம் கிடைப்பதில்லை.

எவனும் தனக்குத் தானே தலைவன். தன்னைத் தானே அடக்கிக் ஒழுகக் கற்றுக் கொண்டவன் அரிய தலைமையைப் பெறுகின்றான்.

பெண்ணுக்கு இழுக்கு தீய நடத்தை. வள்ளலுக்கு இழுக்கு லோப குணம். தீய குணங்கள் இம்மைக்கும் மறுமைக்கும் இழுக்கைச் செய்கின்றன.

இளமையும் வலிமையும் இருப்பினும் சோம்பலும் அசட்டையும் கொண்டு மந்த புத்தியுடன் சோம்பலுற்று இருப்பவன் மெய்யறிவை அடைவான்.

தனியே இருந்து, தனியே அமர்ந்து தனியே நடந்து அகந்தை இன்றி செயல் புரிந்து அடக்கத்துடன் வாழ்பவன், கானகத்திலும் இன்பத்தைக் காண்கின்றான்.

பழக்கப்பட்ட கோவேறு கழுதைகள் சிறந்தவை. சிந்து நாட்டான் சாதிக் குதிரைகளும் சிறந்தவை. போரில் பயன் படும் பெரிய யானைகளும சிறந்தவை. தன்னைத் தானே அடக்கிக் கொண்டவன் அனைத்திலும் சிறந்தவன்.

எவன் அடக்க அரிதான கொடிய ஆசையை அடக்கி வெல்கின்றானோ, அவனுடைய துயரங்கள் தாமரை இலை மீது தண்ணீர்த் துளிகள் ஒட்டாது விலகி ஓடுவதைப் போல அவனை விட்டு ஓடி விடுகின்றன.

கண்ணையும், காதையும், மூக்கையும், நாக்கையும் காத்தல் நலமாகும்.

புத்தரின் அறநெறியில் உறுதியும் உவகையும் கொண்டுள்ள துறவி துக்கத்தைக் கடந்து இன்பமான சாந்தி நிலையை எய்துகின்றார்.

தனது பழம் பிறப்புக்களை அறிந்தவன், சொர்க்கம் நரகம் இவற்றின் இயல்பை நன்கு அறிந்தவன், பிறப்பின் முடிவைக் கடந்தவன், அறிவு நிறைந்தவன் ஞானத்தை எய்தியவன் எவனோ அவனையே நான் பிராமணன் என்பேன்.

இளமையிலேயே புத்தரின் போதனைகளில் ஈடுபாடு பாடு கொண்டு வாழும் பிக்கு மேகமறைப்பிலிருந்து விலகிய சந்திரன் பிரகாசிப்பதைப் போன்று உலகில் பிரகாசிக்கின்றார்.

ஒரு பிக்கு என்பவன் எளிமையான வாழ்க்கை நடத்த கீழ்கண்ட எட்டுப் பொருட்களை மட்டும் வைத்துக்கொள்ளலாம் என்று புத்தர் அங்கீகாரம் அளித்துள்ளார்.

| | |
|---|---|
| துவராடைகள் | மூன்று |
| ஊசி | ஒன்று |
| நீர் வடி கட்டும் துணி | ஒன்று |
| பிச்சைப் பாத்திரம் | ஒன்று |
| சவரக் கத்தி | ஒன்று |
| இடையில் கட்டும் கச்சை | ஒன்று |

மேலே போட்டுக் கொள்ளும் துவராடை மூன்று துண்டுகளை ஒட்டுப் போட்டுத் தைத்ததாக இருக்கும்' மஞ்சள் நிற ஆடையை பிக்குகள் தேர்ந்தெடுத்துக் கொண்டனர், புத்த பிக்குகள் எந்த நேரத்திலும் உடலில் ஆடைகள் இன்றி காட்சி அளிக்கக் கூடாது.

உலக மக்களில் ஐந்தில் ஒரு பகுதியினர், அதாவது சுமார் ஐம்பது கோடி மக்கள் புத்த மதத்தைப் பின் பற்றி வருகின்றனர். கடைசியாக புத்தரின் உபதேசங்களை கீழ் கண்ட முறையில் மிகச் சுருக்கமாகக் கூறி இந்நூலைப் பூர்த்தி செய்வதில் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன்.

1. தக்கார்க்கு அறஞ் செய்.

2. ஒழுக்க போதனைகளைப் பற்றி நில்.

3. நல்ல நினைவுகளை வளர்த்து வா.

4. பிறர்க்குப் பணி செய்.

5. பெற்றோரையும் மூத்தோரையும் மதித்து வேண்டுவன செய்.

6. உன் புண்ணியங்களால் ஒரு பகுதியை மற்றவர்க்குக் கொடு.

7. பிறர் உனக்கு அளிக்கும் புண்ணியங்களை ஏற்றுக் கொள்.

8. நேர்மைக் கொள்கையை அறிந்து நட.

9. நேர்மைக் கொள்கையை பிறர்க்கும் உபதேசம் செய்.

10. உன் குற்றங்களைக் களை.

# "சமணம்"

வைசாலி என்பது இன்றய பீகார் மாகாணத்தை சேர்ந்த முஜபூர் மாவட்டத்தில் உள்ள ஒரு நகராகும். அது பஸாட் என்றும் அழைக்கப்பட்டு வந்தது. ஏறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முன் கி. மு. 599க்கு முன், ஜனநாயக ஆட்சி இயங்கிய வைசாலி நாட்டில் குண்ட கிராமம் என்ற ஊரில் சித்தார்த்தன் என்ற அரசனுக்கு சித்திரை மாதம் சுக்கில பட்சம் திரயோதசி திதியன்று மகாவீரர் பிறந்தார். மகாவீரரின் தந்தையார் பெயர் சித்தார்த்தன் என்றிருந்தாலும், அவரை எல்லோரும் சாதாரணமாக புகழ் பெற்றவர் என்று பொருள் உள்ள ஸஜ்ஜம்ஸ் என்றும் ஜஸஸ் என்றும் அழைத்து வந்தார்கள்; மகாவீரர் ஞாத்ரு என்ற வம்சத்தில் கசியப கோத்திரத்தில் பிறந்தவர். மகாவீரரின் தாயாரின் பெயர் திரிசலை. மகாவீரரின் அண்ணன் நந்திவர்தனன் என்பவர். அண்ணனுக்கு அடுத்துப் பிறந்திருந்த மூத்த சகோதரி சுதேசனை ஆவாள். இவரையும் அடுத்து மூன்ருவதாகப் பிறந்தவர் மகாவீரர். இவர்தான் குடும்பத்தில் கடைசிக் குழந்தை. பிறந்ததும் இவருக்கு இவரது பெற்ரோர்கள் வர்த்தமானன் என்று பெயர் சூட்டினர்கள்.

வர்த்தமானரின் குழந்தைப் பிராயம் பூராவும் அரண்மனையிலேயே கழிந்தது. இப்பிராயத்தில் இவர் யாருக்கும் எதற்கும் அஞ்சாதவராக வளர்ந்து வந்தார். இவருக்கு எட்டு வயது நிரம்பும் சமயம் கல்வி கற்கவும், வில் வித்தை முதலான அரசனுக்குறிய வீரக் கலைகளில் பயிற்சி பெறவும்

என இவர் பள்ளிக்கு அனுப்பப் பெற்றார். ஆனால் வர்த்த மானருக்கு இக்கலைகளிலும், கல்வியிலும் கொஞ்சமும் நாட்டம் கொள்ளவில்லை. மகனின் போக்கை உணர்ந்த பெற்றோர் இவரைப் பள்ளியிலிருந்து அழைத்து வந்து அரண்மனையிலேயே தம் இஷ்டம் போல் இருக்கச் செய்து விட்டார்கள்.

வர்த்தமான மகாவீரரின் திருமணம் பற்றி இரண்டு விதமான கருத்துக்கள் நிலவி வருகின்றது.

சமண மதத்தின் திகம்பரப் பிரிவினர் வர்த்தமானர் திருமணமே செய்து கொள்ளவில்லை என்று கருதுகின் றனர். ஆனால் சமண மதத்தின் சுவேதாம்பரப் பிரிவினர் கருத்துப்படி இவருக்குப் பெற்றோர் தக்க தருணத்தில் திருமணம் செய்து வைத்தார்கள் எனத் தெரிகிறது. இவர் மனைவியின் பெயர் யசோதை என்றும், இவர்களுக்கு ஒரு பெண் பிறந்தது என்றும், அவள் பெயர் அயோஜ்யை என்றும் கூறப்படுகிறது. அப்பெண்ணை ஜமாலி என்ற இளவரசருக்குத் திருமணம் செய்து வைத்தார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

வர்த்தமானருக்கு இளவயதிலிருந்தே அகிம்சையில் மிகுந்த ஈடுபாடு இருந்து வந்தது. இவரது பெற்றோர் சமண மதத்தின் 23-வது தீர்த்தங்கரர் ஆன பார்சுவநாத ரைப் பின்பற்றுவோர் மகாவீரரின் காலம் 250 ஆண்டுகள் பிற்பட்டதாகும். வர்த்தமானர் எல்லோருடனும் மிகவும் அன்பாகப் பழகுவார். தமது எந்தச் சொல்லினாலும் செய லினாலும் எவருக்கும் சிறிதும் நேரக் கூடாது, எவர் மனமும் நோகக் கூடாது என்பதில் மிகவும் கருத்தாய் இருப்பார். புலன்களின் இன்பமும் சிற்றின்பங்களும் பெறுவது பிறருக்கு துன்பம் இழைத்தால்லது முடியாது என்பதை இவர் அனுபவத்தில் அறிந்தார். இதனால் இவர் மனம் நாளுக்கு நாள் வைராக்யத்தில் அதிக நாட்டம் கொண்டது. பெற்

ரோர் இறந்த அடியில் முப்பதே வயதாகியிருந்த போது இவர் வீடு வாயிலை விட்டு ஆன்மீக சாதனை புரியும் பொருட்டு வெளியேறி விட்டார்.

வர்த்தமான மகாவீரருக்கு யோக வழி மிகவும் பிடித்தது. யோக சாதனையினால் ஆன்ம ஞானம் பெறலாம் என்றும், ஆன்ம தரிசனத்திற்கு யோகமே வழியென்றும் நினைத்தார்.

கடைசியில் யோகத்தினாலேயே முக்தி பெறலாம்—நிர்வாணம் எய்தலாம் என்றும் நம்பினார். அதனால் அனைத்து ஆசைகளையும் துறந்து யோக சாதனையில் தீவிரமாக ஈடுபடத் துவங்கினார். இதற்காக மக்கள் அதிகம் நடமாடாத இடங்களைத் தேடிச் சென்று சாதனை புரியத் தொடங்கினார். அல்லும் பகலும் தியானத்தில் ஆழ்ந்தவராக, மௌனவிரதம் ஏற்று தம் உணவை தம் கைகளினாலேயே சமைத்து உண்டு வந்தார். எவரையும் அணுகாமலும் எவரிடம் எதையும் யாசித்துப் பெறாமலும் இருந்துவந்தார். இவ்வாறு பன்னிரெண்டு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்ததின் விளைவாக யோக மார்க்கத்தில் வெகுவாக முன்னேறி ஞானம் பெற்றார். இந்நிலையை அடைந்தபிறகு மகாவீரர் மக்கள் நலனைக் கருதி உபதேசம் அளிக்கத் துவங்கினார். தாம் அளிக்கும் உபதேசங்களும் விளக்கங்களும் மக்கள் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில், "அர்த்தமாகதி" எனப்படும் மக்களின் பேச்சு மொழியிலேயே நல்லுபதேசங்களைக் கூறிவந்தார். சுமார் முப்பது ஆண்டு காலம், மகாவீரர் இவ்வாறு மக்களை சந்தித்து உபதேசங்கள் கூற ஊர் ஊராகச் சுற்றி வந்தார்.

மகாவீரர் தன் உபதேசங்களில் பிரதானமாக அஹிம்சை சத்தியம், கள்ளாமை, பிரம்மசரியம், வெளவாமை ஆகியவற்றை வற்புறுத்தி வந்தார். தியாகமும், புலனடக்கமும், அன்பும், கருணையும், சீலமும், நல்லொழுக்கமும் இவரது அறிவுரைகளின் சாரமாக அமைந்திருந்தது.

மகாவீரர், இந்த நிலைக்குப் பிறகு நான்கு வகைச்சங்கங்களைத் தோற்றுவித்தார். சிரமணன், சிரமணி, சிரமணோபாசகன், சிரமணோபாசிகை என்ற நான்கு பிரிவினரைக் கொண்ட சங்கத்தை இவர் நிறுவினார். இந்த நான்கு பிரிவுகளில் அனைவரும் அவரவருக்கு உகந்த பிரிவுகளில் சேர்ந்து, வாழ்க்கையின் குறிக்கோளான சமநிலையையடைய முயற்சி செய்யவும் முன்னேற்றமடையவும் வேண்டும் என்றும் கூறினார்.

மகாவீரர் தோற்றுவித்த இச்சங்கங்கள் சிறிது சிறிதாக வளரலாயிற்று. பகவான் மகாவீரர் நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் சுற்றி, அனைத்து மக்களுக்கும் தமது புனிதச் செய்தியை எங்கும் பரப்பி வந்தார். இவ்வாறு முப்பது ஆண்டுகள் சலிப்பின்றி சுற்றி தாம் கண்ட உண்மைகளை மக்களுக்கு அளித்து, அவர்களை உய்வித்தபின், சமண சமயத்தின் 'கடைசி தீர்த்தங்கரர்' என்று கொண்டாடப்படும் பகவான் மகாவீரர் கி.மு. 527—ல் அபாபாபுரி என்ற ஊரில் கார்த்திகை மாதம் அமாவாசையன்று நிர்வாணம் எய்தினார் இன்றும் ஜெயினர்கள் வாழும் இடங்களில் எல்லா வீடுகளிலும் திருக்கார்த்திகை போன்று தீப விளக்குகள் ஏற்றப் பெற்று கொண்டாடி வருகின்றனர். பகவான் மகாவீரரின் உபதேசங்களின் சாரமாக கருதப்படுவது என்னவெனில், "உலகில் வாழும் சிறிதோ பெரிதோ ஆன எல்லா உயிர்களும் நம்மைப் போன்றவையே. நம் ஆன்மாவின் பல கூறுகளே" என்பதாகும். இதைப் பின்பற்றி முக்தியடைய வேண்டும் என்பது மகாவீரரின் குறிக்கோளாகும்.

"ஜெயினம்"

ஜீனரின் வழிசெல்லுபவர்கள் ஜெயினர் எனப்படுவர். 'ஜின்' என்பது 'ஜீ' என்ற பகுதியின் அடியாகப் பிறந்த சொல். 'ஜி' என்பதற்கு ஜெயித்தல் வெற்றி பெறுதல் என்று பொருள். ஜினன் என்றால் வெற்றி கொண்டவன்,

தன் மனத்தையும் தன் வாயையும் தன் உடலையும் அடக்கி வெற்றி கண்டவன் ஆவான்.

இத்தகைய ஜினர்கள் மக்களைக் கடைத்தேற்றிய மகாத்மாக்கள் எண்ணில் அடங்காத ஜீவன்களை இந்த சம்சார சாகரத்திலிருந்து கரையேற்றியிருக்கின்றனர். 'தீர்த்தம்' என்பது ஆறு,—குளத்தின் கரை எனப்படும். சம்சார சாகரத்திலிருந்து கரைக்கும் துறைக்கும் ஏற்றியவர்கள் தீர்த்தங்கரர் எனப்பட்டனர். ஜெயின சமயத்தில் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் இருந்திருக்கின்றார்கள் என நம்பப்படுகிறது. அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு சின்னமும் வழங்கப்படுகிறது.

| தீர்த்தங்கரரின் பெயர் | அவர்களுக்குரிய சின்னம் |
|---|---|
| ரிடபநாதர் | எருது |
| அஜிதநாதர் | யானை |
| சம்பவநாதர் | குதிரை |
| அபிநந்தனர் | குரங்கு |
| சுமதிநாதர் | சக்ரவாகப்புள் |
| பத்மபிரபர் | தாமரை |
| சுபார்சுவநாதர் | ஸ்வஸ்திகம் |
| சந்திரபிரபர் | சந்திரன் |
| புஷ்பதந்தர் | முதலை |
| சீதளநாதர் | கற்பக தரு |
| சிரேயாம்ஸநாதர் | கருப்பந் தழை |
| வாசு பூஜ்யர் | எருமைக் கடா |
| விமல நாதர் | பன்றி |
| அனந்தநாதர் | முள்ளம்பன்றி |
| தர்மநாதர் | வஜ்ராயுதம் |
| சாந்திநாதர் | மான் |
| குந்துநாதர் | ஆடு |
| அரஹநாதர் | மீன் |

| | |
|---|---|
| மல்லிநாதர் | கலசம் |
| முனிசுவ்ரதர் | ஆமை |
| நமிநாதர் | செந்தாமரை |
| நேமிநாதர் | சங்கு |
| பார்சுவநாதர் | பாம்பு |
| மகாவீரர் | சிங்கம் |

ரிடப நாதர் ஆதி நாதர் என்றும், புஷ்பதந்தர் சுவிதி நாதர் என்றும் அழைக்கப்படுவது உண்டு, மகாவீரருக்கு வர்த்தமானர், வீரர், அதிவீரர், நன்மதி என்ற பல பெயர்கள் வழங்குகின்றன. ரிடபநாதர் முதலாவது தீர்த்தங்கராக இருக்க மகாவீரர் இறுதி தீர்த்தங்கராக உள்ளார். இந்த ஜைன சமயத்தில் இந்த தீர்த்தங்கர்களுக்கு மதிப்பும் மரியாதையும் நிரம்ப அளிக்கப்படுகின்றது. ஆனல் இவர்களை அவதாரங்கள் என்று கூறுவதில்லை.

இந்த மதத்தினரிடம் திகம்பரம், சுவேதாம்பரம் என்று இரு சம்பிரதாயங்கள் காணப்படுகின்றன, சுவேதாம்பரர் என்பவர்கள் வெள்ளை ஆடை அணிபவர்கள். இந்தப் பிரிவினர் வெண்ணிறத் துகில அணிகின்றனர். ஆனல் திகம்பரர்கள் ஆடைகள் அணிவதில்லை. ‘திக்’ என்ருல் திசை. ‘அம்பரம்’ என்ருல் ஆடை. எவன் திசைகளையே ஆடைகளாகக் கொண்டு வாழ்கின்ருனே, அவனே திகம்பரன். இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆடைகள் எதுவும் அணியாமல் பிறந்த மேனியாகத் இருந்து வருவார்கள். சுமார் மூன்னூறு ஆண்டுகளுக்குமுன் இந்த சுவேதாம்பரரிடமிருந்து பிரிந்து போன ஒரு கிளையினர் ‘ஸ்தானவாசிகள்” எனப்பட்டனர். இவர்கள் உருவ வழிபாடு செய்வதில்லை. இவர்களைத் தவிர தேரஹ்பந்தி (13ம் வழி) பீஸ் பந்தி (20–வது வழி) தாரணபந்தி பயோபனியர் என்ற வேறு சில கிளையினரும் இருக்கிருர்கள். இவர்கள் ஆசாரம், வழிபாடு முதலியவைகளில் ஒருவருக்கொருவர் சிறிது மாறுபட்டாலும் இவர்கள் அனைவருமே பகவான் மகாவீரரிடத்திலும்

அஹிம்சையிலும் புலனடக்கத்திலும் 'அநேகாந்த வாதம்' எனப்படும் கோட்பாட்டிலும் ஒரேவகையான நம்பிக்கை கொண்டிருக்கின்றூர்கள்.

ஜெயின தத்துவத்தின் மிகவும் உயர்ந்த கொள்கை அநேகாந்தம் என்பது, ஒரே பொருள் அனேக தர்மங்கள் (இயல்புகள்) பொருந்தியதாய் இருப்பதே அநேகாந்தம். பல்வேறு வகைகளில் பார்க்கையில் ஒரே பொருள் அநேக தர்மங்கள் உள்ளதாய் காணப்படுகிறது. ஒருவகையில் பார்த்தால் சத் அல்லது நல்லதென்று கொள்ளப்படக் கூடிய ஒன்று, வேருெரு வகையில் பார்க்கையில் அசத்து அல்லது தீயதாய் காண்கிறது. அநேகாந்த தத்துவத்தில் எல்லா முரண்பாடுகளுமே தீர்ந்துபோய், ஓர் இணக்கம் அமைந்து விடுகிறது.

எல்லாப் பொருட்களும் நித்யமானவை, என்றென்றும் இருப்பவை என்று அறிந்தவன் வாழ்விலும் சாவிலும் ஒரே மாதிரியாக இருப்பான். எந்தப் பொருளும் நித்தியமான தல்ல, அழியக் கூடியதும் இல்லே என்று அறிபவன் பிற ருடன் சேருகையிலும் பிறரிடமிருந்து பிரிவதிலும் ஒரேவகை யாக இருந்து வருவான். எல்லாப்பொருட்களும் யுத்தவை என்பதை அறிந்தவன் எந்த உயிரையும் வெறுக்க மாட் டான். எல்லாப் பொருட்களும் ஒன்று போன்றவையுமல்ல, வேறுபடுவையுமல்ல என்பதை அறிந்தவன் எதிலும் பற்று வைக்க மாட்டான். ஆகையால் அநேகாந்த தத்துவத்தை ஏற்று சத்தியத்தைப் பல திசைகளிலிருந்து நோக்கி உணரு பவன் எதிலும் பிடிவாதம் காட்ட மாட்டான். தான் கூறு வதே சரியென்று சண்டைப் பிடிக்க மாட்டான். சம நோக் குடனும் பாவத்துடனும் இருந்து வருவான். இன்பம், துன்பம், லாபம்; நஷ்டம், கீர்த்தி, அபகீர்த்தி, மானம், அவ மானம், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகியவை எல்லாமே அவனுக்கு ஒன்று போலத்தான் இருந்து வரும். இதற்குத்தான்

'ஸ்யாத் வாதம்' என்று பெயர். சமணர்களின் கருத்துப் படி இதற்குச் சார்பான உண்மை என்பது பொருள், ஒரு பொருளின் சார்புக்கேற்ப அது நல்லதாகவும் இருக்கலாம்; தீயதாகவும் இருக்கலாம்; இதையே 'சப்த பங்கி நயம்' என்பதன் மூலம் விளக்குவார்கள்.

தத்துவம் :—

சமண மதத்தில் சம்சாரம்—உலகம் முதலும் முடிவும் முடிவும் இல்லாதது என்று கருதப்படுகிறது. இந்த உலகைப் படைத்தவன் எவனும் இல்லை என்று சமணர்கள் எண்ணுகின்றனர். அவர்கள் 'ஜின்' அல்லது அர்ஹத்தை பரம்பொருள் என்றும் ஒவ்வொரு ஆன்மாவும் பரம்பொரு ளாக பரமாத்மாவாக ஆக முடியுமென்றும் நம்புகின்றனர். ஆண்டவன் என்ற படைப்பை நடத்தி வைக்கும் சக்தி எது வுமே இல்லை என்றும் படைப்பு அனுதியாக என்றென்றும் இருந்து வருவது என்றும், ஆறு திரவியம் அல்லது தத்து வங்களின் சித்தாந்தப்படி அவர்கள் எண்ணுகின்றனர்.

குருமார்கள் :—

வசுநந்தி, சுவாமி வித்யா நந்தி, கார்த்திகேயர், சமந்த பத்ரர், பூஜ்யபாதர், பட்டகேரர் சித்த சேன திவாகரர், ஜின பத்ர கணி, வினய விஜயம், வீரசேனர், ஜினசேனர், அமிதகதி, ஹேம சந்திரர், குந்த குந்தர், உமா சுவாதி, அகளங்க தேவர், ஹரிபத்ரர், ஆனந்தகணர், யசோ விஜயர், முதலியோர் பல்வேறு நூல்களை எழுதியுள் ளனர். அந்த நூல்களும் மிகவும் சிறப்பாகப் போற்றப்படு கின்றன. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளில் வழி வழியாக வந்துள்ள ஆச்சார்ய பரம்பரையைச் சேர்ந்த பெரியார் ஏராளமான நூல்களை எழுதிக் குவித்துள்ளனர்.

திகம்பரர்களின் "ஷட் கண்டாகமம்" மிகவும் பழையது எனக் கருதப்படுகிறது. ஷட் பிராப்ருதம், அஷ்ட பிராப்

ருதம், மூலாசாரம், திரிவர்ணாசாரம், சமய சார பிராப்ருதம், ப்ரவசன சாரம், நியம சாரம், பஞ்சாஸ்தி காயம், ரயண சாரம், ஆப்த மீமாம்சை, சர்வார்த்த சித்தி போன்ற நூல்கள் மிகவும் சிறப்பாகப் போற்றப்படுகிறது.

ஜெயின பரம்பரையில் அறுபத்தி மூன்று மகா புருஷர்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது. புராணங்களில் இவர்கள் வரலாறுகளும் தர்மம் உபதேசங்கள் இவைகள் விவரிக்கப்பட்டுள்ளன. புராணங்களில் முக்யமானவை ஜின சேனர் இயற்றிய ஆதிபுராணமும் இரண்டாவது ஜின சேனர் எழுதிய அரிஷ்ட நேமியும் (ஹரிவம்சம்.) ரவி சேனர் இயற்றிய பத்ம புராணமும், குணபத்ரர் கண்ட உத்ர புராணமும் ஆகும். பிராகிருதம் அபப்ரம் சம் ஆகிய மொழிகளிலும் பல புராணங்கள் காணப்படுகின்றன.

பகவான் மகா வீரர் வாய் மொழியாக நல்லுரைகள் வழங்கினரே தவிர, அவர் தன் கையால் நூல் எதையும் எழுதவேயில்லை. பிற்காலத்தில் கணதரர் எனப்படும் அவரது தலையாய சீடர்கள் தமது ஆசாரியரின் உபதேசங்களையும், வாய்மொழிகளையும் தொகுத்தனர். இவரது மூல நூல்கள் பிராகிருத மொழியில் அதிலும் முக்யமாக 'மாகதி' என்ற பிரதேச மொழியிலும் உள்ளன. ஜெயின சமய நூல்களில் மிகவும் பழமையானவையும் முக்யமானவையும் நாற்பத்தாறு நூல்கள் உள்ளதாகக் கூறப்படுகின்றது.

அங்க நூல்கள் பன்னிரெண்டு. அவை :—

1. ஆசாரம்.
2. சூத்திர கிருதம்.
3. ஸ்தானம்.
4. சமவாயம்.
5. பகவதி.
6. ஞாதா தர்மகதை.

7. உபாசகதசை.
8. அந்தகிருத தசை.
9. அனுத்தர உபபாதிக தசை.
10. பிரச்ன வியாகரணம்.
11. விபாகம்.
12. திருஷ்டி வாதம்.

இவைகளில் 'திருஷ்டி வாதம்' என்ற நூல் தவிர மற்ற பதினோறு நூல்களும் கிடைத்துள்ளன.

உபாங்க நூல்கள் பன்னிரெண்டு. அவையாவன.

1. ஜீவாபிகமம்.
2. பிரக்ஞாபனா.
3. சந்திர பிரக்ஞப்தி.
4. சூரிய பிரக்ஞப்தி.
5. புஷ்பிகை.
6. புஷ்ப சூடை.
7. கல்பாவதம் சிகை.
8. ஔபபாதிகம்.
9. ராஜ பிரச்னீயம்.
10. ஜம்பூத்வீப பிரக்ஞப்தி.
11. நிரயாவளி அல்லது கல்பிகம்.
12. வ்ருஷ்ணி தசை என்பவை.

பிரகீரண நூல்கள் பத்து :—

1. சதுச் சரணம்.
2. சம்ஸ்தாரம்.
3. ஆதுர பிரத்யாக்யானம்.
4. பக்த பரிக்ஞை:
5. தண்டுல வைதாலிகை.
6. சந்தா வித்யயம்.
7. தேவேந்திரஸ்தவம்.

8. கணித வித்தை.
9. மகா பிரத்யாச்யானம்.
10. வீர ஸ்தவம் என்பன.

கிளை நூல்கள் ஆறு :—

1. நிசீதம்
2. மகா நிசீதம்.
3. வியவகாரம்.
4. தசசதஸ் கந்தம்.
5. பிரஹத் கல்பம்
6. பஞ்ச கல்பம் என்பனவாகும்.

மூல சூத்திரம் நான்கு. அவை

1. உத்தராத்யயனம்.
2. ஆவச்யகம்.
3. தசவை காலிகம்.
4. பிண்ட நிர்யுக்தி என்பன.

சுதந்திர நூல்கள் இரண்டு :— அவை

1. அறுயோக துவாரம்.
2. நந்தி துவாரம்.

இந்த நூல்களை திகம்பரர்கள் ஏற்றுக் கொள்ளவே யில்லை: ஆனால் சுவேதாம்பரர்கள் ஏற்றுக் கொண்டுள் ளனர்.

சமண மதத்தில் தவந்திற்கு மிக உயர்ந்த ஸ்தானம் அளிக்கப்படுகிறது. புறத்தவத்தில் சமண முனிவர்களை வேறுயாருடனும் ஒப்பிட்டுப் பேச முடியாது. இதில் அகத் தவமும் பெரிதும் வற்புறுத்தப் படுகிறது. முனிவர்கள் செய்யவேண்டிய தவம் பன்னிரெண்டு என்று வகைப் படுத்தப் பட்டுள்ளது.

இல்வாழ்க்கையில் ஐந்து அனுவிரதங்களும் மூன்று குண விரதங்களும், நான்கு சிக்ஷா விரதங்களும் உண்டு.

இவை அனைத்திலுமே மனம், மொழி, மெய் ஆகியவற்றின் சுவம் உண்டென்று சொல்லத் தேவையில்லை.

"நன்னடத்தை"

தவத்தின் அடிப்படை நன்னடத்தையே, சமண சமயத்தில் ஐந்து விரதங்கள். ஐந்து சமிதிகள். மூன்று குப்திகள், 'நான்கு பாவனைகள் ஆகியவை' பெரிதும் வற்புறுத்தப் பட்டுள்ளது.

விரதம்:—

மகா விருதம், அறுவிரதம் என்று இரு வகைப்படும். இல்வாழ்வோர் அறு விரதங்களையேனும் சரியாக நடத்தி வருவார்களானால் சமுதாயம் ஒரு குறையுமின்றி இருந்து வரும் சந்தேகமில்லை.

விரதங்கள் ஐந்து வகை. அவை 1. அகிம்சை 2. சத்தியம் 3. அஸ்தேயம் அல்லது கள்ளாமை 4. பிரம்ம சரியம் 5. அபரிக் கிரகம் அல்லது வெளவாமை.

சமிதி என்றால் அடக்கமாக நடந்து கொள்ளுதலும் விழிப்புடனும் இருந்து காரியங்களை செய்தலுமாகும். சமிதி ஐந்து வகைப்படும். அவை 1. ஈர்யை 2. மொழிதல் 3. ஏஷணை 4. ஆதான நிக்ஷேபணம் 5. உத்சர்கம். உயிர்களை காலால் மிதியாதிருப்பதற்காக இரவில் வெளியே நடவாதிருத்தலும் பகலில் நடக்கையிலும் கவனமாக சிற்று யிர்கள் மீது கால் படாமல் நடத்தலும் ஈர்யா சமிதி ஆகும்.

மிருதுவாகவும், இனிமையாகவும் பிறருக்கு நன்மை பயக்கும் வகையிலும், உண்மையாகவும் நியாயமாகவும் பேசுதலும், பொய், கோபம், தற்பெருமை, கபடம் ஆகியவை கலந்து பேசாமையும் சமிதி எனப்படும்.

யாருக்கும் எத்தகைய தீங்கும் நேராத வகையில் பிச்சை எடுத்தல் ஏஷண சமிதி எனப்படும்.

முறைப்படி பொருட்களையும் துணி மணிகளையும் எடுத்தலும் வைத்தலும் ஆதான நிக்ஷேபண சமிதி எனப்படும்.

மலஜலம், கபம் முதலிய அழுக்குகளை எவருக்கும் அதனால் தீங்கு நேராத இடத்தில் இடுதலும் அழுக்கு வெளியே பரவாமல் பார்த்துக் கொள்ளுதலும் உத்சர்க் சமிதியாகும்.

குப்தி:—குப்தி என்பது மறைத்து வைத்து பாதுகாத்தல் என்று பொருள். மனத்தையும் மெய்யையும் மொழியையும் அவைகளை தீங்கு சாராத, பாவம் பற்றுதவாறு பாது காப்பது. குப்தியானது மூன்று வகையாக பிரிக்கப்பட்டுள்ளது. அவை மனோ குப்தி; வாக் குப்தி மற்றும் காய குப்தி எனப்படும். மனதில் இம்சையோ, கபடம் சூது எதுவும் இருக்கக் கூடாது. எப்போதும் கோபத்துடனும் தற்பெருமையாகவும் பேசக் கூடாது. பொய் சொல்லுதலோ, பிறரை அடிக்க ஓடுதலோ கூடவே கூடாது. திருடவோ, அது போன்ற வேறு பாவங்களோ செய்யவே கூடாது.

அடுத்து பாவனை. பாவனை என்பது மனதில் கொள்ளப்படுவது. இது நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டு சொல்லப்படுகின்றது. அவை 1. மைத்ரீ அல்லது நட்பு 2. பிரமோதம் அல்லது களிப்பு 3. காருண்யம் அல்லது அருள். 4. மாத்யஸ்தம் அல்லது நடுவு நிலையில் நிற்றல்.

எல்லா உயிர்களிடத்தும் அன்பும் பற்றும் பாசமும் கொள்ளுதலும், பிறர் குற்றங்களை மன்னித்தலும், எவரிடமும் விரோதங்களை ஏற்படுத்திக் கொள்ளாதிருத்தலும் மைத்ரீ எனப்படும்.

தன்னைக் காட்டிலும் உயர்ந்தவராய், பெரியவராய் இருப்பவர்களிடம் பணிவுடன் நடந்து கொள்ளுதல் அவர்

களுக்குப் பணி செய்வதிலும், அவரைப் புகழ்வதிலும் இன்பம் காணுதல், பிரமோதம் எனப்படும்.

ஏழை எளியோரிடம் கருணையோடு நடந்து கொள்ளுதலும், அருள் புரிதலும், அவர்கள் இன்பம் பெற வகை செய்தலும் காருண்யம் எனப்படும்.

தனக்கு முற்றிலும் மாருக, விரோதமாய் இருப்பவனிடம் கோபம் கொள்ளாது அசட்டையாய் இருத்தல் மாத்தியஸ்தம் எனப்படும்.

சமண சமயத்தில் மூன்று இரத்தினங்கள் உண்டு. அவை 1. சம்யக் தரிசனம் 2. சம்யக் ஞானம் 3. சம்யக் சாரித்திரம் என்பன.

சமயக் தரிசனம் என்பது உண்மையான சிந்தாந்தத்தை கண்டு கொள்ளலும், ஜினர் போதித்துள்ள சிந்தாந்தத்தை ஏற்று அதில் சிரத்தையோடு இருத்தலும், உண்மையான தேவன், சாத்திரம், குரு ஆகியோரிடம் சிரத்தை அல்லது ஏழு தத்துவங்களில் நம்பிக்கையுமாகும். முழுமையான ஞானம் சம்யக் ஞானம் எனப்படுகிறது. அது இருந்தால் பொருட்களை நன்கு புரிந்து கொள்ள முடியும். சம்யக் சாரித்திரம் என்பது நல்ல முறையில் நடந்து கொள்ளுதலாகும். சமண சமயத்தில் மூன்று வகை இரத்தினங்களுக்கும் மிகுந்த மதிப்பும் பெருமையும் உண்டு; அவை மூன்றும் ஒன்ருகத்தான் இருக்கும். மூன்றும் சேர்ந்து அமைவதே வீடு பேறு அடைவதற்கு சிறந்த வழியாகக் கருதப்படுகிறது.

இதுபோல் சமண மதத்தில் ஏழு விதமான தத்துவங்கள் சிறப்பாக வலியுறுத்தப்படுகிறது. அவை ஜீவன், அஜீவன், ஆய்வரம், பந்தம், சம்வரம், நிர்ஜரை மற்றும் மோட்சம் எனப்படுகிறது.

உயிர் உணவுள்ள மரம், செடிகள், மிருகங்கள், பறவைகள், மனிதர்கள் போன்றவை ஜீவன் என்று கருதுகின்றனர்.

மரத்துண்டு, கல் போன்ற பொருட்களை உயிரற்றவைகளை அஜீவன் என்றும் கருதுகின்றனர்.

மூன்றுவது தத்துவம் ஆஸ்ரவம் எனப்படும். கட்டுறுவதற்கு காரணமாக இருப்பவை ஆ+ஸ்ரவம். ஆன்மாவை நோக்கி கர்மங்களின் பெருக்கு. இன்ப நுகர்ச்சி, இந்திரியங்களின் வழியாக ஆன்மாவில் புகுந்து அதைக் கெடுக்கின்றன. இவற்றுள் ஆன்மாவைப் பிணித்து துன்புறுத்தி மாசுபடுத்துவது கஷாயம் எனப்படும். இந்தக் கஷாயங்கள் நான்கு. அவை 1. கோபம் 2. மான அபிமானம் 3. மாயை, கபடம் 4. லோபம் அல்லது பேராசை போன்றவை. அடுத்து பந்தம்—அதாவது ஜீவனுடன் கர்மம் பிணிப்புண்டு இருத்தல்.

அடுத்து சம்வரம்-ஆஸ்வரத்தை தடுத்து கர்மங்களை வராமல் செய்தல்.

நிர்ஜரை என்பது கர்மங்கள் ஜீவனிலிருந்து பிரிதல். இது இரண்டு வகையாகப் பிரித்துக் கூறப்படுகிறது. அவை 1. அவிபாகம் என்றும், 2. சவிபாகம் என்றும் ஆகும்.

கடைசியாக மோட்சம் என்பது எல்லாவிதமான கட்டுக்களிலிருந்தும் விடுபடுதல். சம்பக் தரிசனம், சம்யக் ஞானம், சம்யக் சாரித்திரம் ஆகியவைகளினுல் கர்மங்களின் கட்டுத் தளர்ந்து ஜீவனுக்கு விடுதலே கிடைக்கிறது. இந்த சமண மதத்தில் பாவ புண்ணியங்களினின்று ஒன்பது பொருட்கள் தோன்றுவதாகக் கருதுகின்றனர். புண்ணியத்தில் சிறப்பாக அன்ன தானம், நீர் தானம், இட தானம், படுக்கை தானம், ஆடை தானம், நல்லெண்ண தானம்,

நல்வாக்கு அருளுதல், நற்செயல் புரிந்து அருளுதல், மற்ற வர்கள் நம்மை நம்பகமாக நடந்து கொள்ளுதல் ஆகியவை அடங்குகின்றது.

சமண சமயத்தில் பாவங்கள் பதினெட்டு வகைகளாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. அவை, 1. கொடுமைப் படுத்துதல் அல்லது இம்சை 2. பொய் பேசுதல் 3. திருடுதல் 4. கோபம் கொள்ளுதல் 5. தற்பெருமை 6. மாயை 7. பேராசை 8. விருப்பு 9, வெறுப்பு 10. கலகம் 11. கோள் சொல்லுதல் 12. பிறரை எப்பவும் குறை கூறுதலும் தூஷித்தலும் 13. ரசித்தலும் விரும்பாமையும் (ரதி-அரதி) 14. நடத்தைக் கேடு 15. பிறர் மனம் புண்படும் படி பேசுதல் 16. பொறாமை 17. வஞ்சகம். மற்றும் 18. அநீதிக்கு ஆதரவு கொடுத்தல்.

இந்த மதத்தில் கர்ம சித்தாந்தம் என்பது பெரிதும் வற்புறுத்தப் படுகிறது. ஆன்மாவின் உண்மைத் தன்மை வெளிப்படாது செய்து எது மறைத்து விடுகிறதோ அதுவே கர்மம் எனப்படும். இச்சமயத்தில் உலகில் உள்ள அனைத்து ஜீவன்களும் அனுபவிக்கும் துயருக்கெல்லாம் காரணம் அவைகளின் கர்மமே என்று கருதப்படுகிறது. இந்தக் கட்டுப்பாட்டிலிருந்து சுதந்திரமாக வெளியேறுவதே மோட்சமாகும். ஜெயின மதத்தின் கருத்துப்படி, கர்மம் என்பது கடமை என்பது பொருளல்ல, கர்மம் என்ற பரமாணுக்கள் ஆன்மாவை நோக்கி இடையறுது வலிக்கப்பட்டு வருகின்றன என்பது அவர்களின் கொள்கை.

பொதுவாகக் கூறப்படும்போது, அஹிம்சை, அஞ்சாமை, தியாகம், தவம், கள்ளாமை, வெளவாமை, பிரம்மசரியம், நன்னடத்தை ஆகியவற்றின் உதவியினுல் ஆன்மாவை எளிதாக வென்று விடலாம் என்றும். வேறுபாடுகளை விலகிக் கொண்டு சமநிலையை அடையலாம் என்றும், அப்போது தான் சாந்தி கிடைக்கும் என்றும் இம்மதம் சிறப்பாக

வலியுறுத்துகின்றது. நிர்வாணம் என்பது சாந்தியே அன்றி வேறில்லை.

மகாவீரரின் உபதேசங்கள்:—

1. தர்மமே தலை சிறந்த மங்களமாகும். தர்மம் என்பது அஹிம்சையும் புலனடக்கமும் தவமுமாகும்.—எவன் மனத்தில் தர்மம் உள்ளதோ அவனை தெய்வங்களும் வணங்குகின்றன.

2. சிறிதோ பெரிதோ ஆன எந்த உயிரையும் கொல்லாமையும் பிறர் பொருளை அவரைக் கேளாமல் எடுத்துக் கொள்ளாமையும் நம்பிக்கைத் துரோகமென்ற அசத்தியம் புரியாமையும் என்ற இவையே தம்மை அடக்கியவர்களின் தர்மங்கள். சாதுக்கள் இந்த தருமத்தையே கடைப் பிடிக்கிறார்கள்.

3. பகைவனோ, நண்பனோ, விரோதியோ, வேண்டியவனோ எல்லா உயிர்களையும் எல்லா மனிதரையும் ஒன்று போல் மதித்து எல்லோரையும் தாமாகக் கருதுதலே அகிம்சை. ஆயுள் பூராவும் எந்த உயிருக்கும் மனம், மெய் மொழிகளால் துன்பம் தராது எவருக்கும் எதற்கும் இம்சை விளைவியாது இருத்தல் உண்மையில் மிகவும் சிரமம்.

4. இவ்வுலகில் புலனடக்கத்தோடு வாழ்பவனே எப் பொழுதும் விழிப்புடன் இருப்பவன்.

5. புலனடக்கம் வேண்டுபவன் இம்சை, பொய், திருட்டு, பிறர் மனை விழைதல், இன்பத்தில் ஆசை, பேராசை ஆகியவற்றை விட்டு விடுவானாக.

6. தவத்தில் இரண்டு வகையுண்டு. அவை அகத் தவம்—புறத்தவம் என இரு வகைப்படும். அகத்தவம் ஆறு வகையானது. அவை 1. பிராயசித்தம் 2. வினயம் அல்லது

பணிவு 3. வையா விருத்தியம் அல்லது தேவர்; குரு; தருமம் ஆகியவற்றிற்குப் பணிதல், 4. தற்பயிற்சி; 5. தியானம் 6. தன் ஆன்மாவில் ஆழ்ந்து இன்புறுதல் என்பனவையாகும்.

புறத்தவம் என்பது உணவு கொள்ளாமை, வயிற்றைக் காய விடுதல், ஐயம் ஏற்றல், ருசியான மறுத்தல், உடலை வாட்டுதல் சம்லீனதை என்பதாகும்.

7. இப்புவியில் எல்லாப் பிராணிகளும் தமது கர்மங்கள் காரணமாகவே சம்சாரத்தில் வந்து உழலுகின்றன. அவை தாம் முன்பு செய்த வினைகளுக்கு ஏற்றபடி இவ்வுலகில் வந்து பிறக்கின்றன. முன்பு செய்த கர்மங்களின் பலனை அனுபவித்தாலல்லது அவைகளுக்குக் கிடைப்பதில்லை.

8. தன் நன்மையை விரும்பும் மனிதன் பாபத்தை வளர்க்கக் கூடிய கோபம், மானம், மாயை, பேராசை என்ற நான்கு தீய குணங்களையும் அறவே விட்டுத் தொலைக்க வேண்டும்.

9. கோபத்தை அமைதியினாலும், மானத்தை பணிவினாலும், மாயையை கபடமின்மையினாலும், வெள்ளை மனத்தாலும், பேராசையை மன நிறைவினாலும் வெல்லு.

10. கோபத்தினால் மனிதன் இழிவுறுகிறான். அபிமானத்தினால் கீழே போகின்றான். மாயையினால் நற்கதியை இழக்கின்றான்; பேராசையினால் இவ்வுலகிலும் மேலுலகிலும் பயந்து கொண்டேயிருக்கின்றான்.

11. க்ரோதம் நான்கு வகைப்படும். முதலாவதாக அனந்தானுபந்தி கோபம்—இது மலையில் தோன்றிய பிளவு எவ்வாறு பிறகு ஒன்று சேராததோ அதைப் போல இந்தக் க்ரோதம் ஆயுள் பூராவும் அடங்காமலே இருந்து வரும். 2. அப்பிரத்யாக்யானி கோபம்:—பூமியில்

தோன்றிய வெடிப்பு மழை பெய்து நீர் ஓடியதும் மூடிக் கொள்வதைப் போல ஓரிரண்டு ஆண்டுகளில் அடங்கி விடுவது இது. 3. பிரத்தியாக்கினி கோபம்—மணலில் கிழிந்த கோடு ஒரு காற்றடித்ததும் அழிந்து மறைந்து போவதைப் போல ஒன்றிரண்டு மாதங்களில் அடங்கி போய் விடும்.

4. சம்ஜ்வலன கோபம்—நீரில் கிழித்த கோடு கிழித்த அடியிலேயே மறைந்து போவதைப் போல வெகு விரைவில் இது மாறிப் போகும்.

இதுபோலவே இச்சமயத்தின் மானத்தின் வகைகளும் நான்கு வகைகளாகப் பிரிக்கப்படுகிறது.

12. மானம்:—

1. கல் தூணைப் போல வளைந்து கொடுக்காதது அனந்தானுபந்தி மானமாகும்.

2. எலும்பைப் போல மிகவும் சிரமப்பட்டு வளைக்க வேண்டியிருப்பது அப்பிரத்தியாக்யானி மானமாகும்.

3. மரத்தைப் போல தீய்விட்டு வாட்டுதல் முதலிய யுக்திகளினல் வளைக்க முடிவது பிரத்தியாக்கினி மான மாகும்.

4. பிரம்பைப்போல வெகு சுலபமாக வளைக்க முடிவது சம்ஜ்வலன் மானமாகும்.

13. மாயை சமண சமயத்தில் 'மாயை'யையும் நான்கு வகைகளாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது.

மூங்கிலின் உறுதியான வேரைப் போல என்ன செய்தாலும் நிமிர்த்த முடியாதது அனந்தானுபந்த மாயை.

ஆட்டுக் கொம்பைப் போல பெரு முயற்சி செய்து நிமிர்த்த வேண்டியிருப்பது அப்பிரத்தியாக்யானி மாயையாகும்.

எருதின் சிறுநீர்ப் பெருக்கைப் போல காற்றிலேயே உலர்ந்து போவது பிரத்தியாக்யான மாயையாகும்.

மூங்கில் சிம்பைப் போல வளைவதும் நிமிர்வதுமாய் இருப்பது சம்ஜ்வலன மாயையாகும்.

14. பேராசையின் வகைகள்

தாரின் கறையைப் போல துணியில் ஒரு முறை பட்டு விட்டால் பிறகு நீங்காது இருப்பது அனந்தானுபந்த லோபம்—அளவு கடந்த ஆசையாகும்.

வண்டி மசியைப் போல துணியில் பட்டு விட்டாலும் துவைத்து நீக்கிவிட முடிவது அப்பிரத்தியாக்யான லோபம்—அதிக ஆசையாகும்.

துணியில் பட்ட சேற்றின் கறையைப் போல நீரில் முக்கித் துவைத்தால் சுலபமாக நீங்கி விடுவது பிரத்தியாக்யான லோபம்—சாதார்ண ஆசையாகும்.

மஞ்சள் கறையைப் போல அது பட்ட துணியை வெயிலில் உலர்த்தியதும் நீங்கிவிடுவது இனிய ஆசை. அது ஸம்ஜ்வலன லோபம் எனப்படும்.

15. உலகில் உள்ள நிலையானவை, சலிப்பவையான எந்த உயிர்க்கும் தெரிந்தோ, தெரியாமலோ நீயும் இம்சை புரியாதே, பிறரையைக் கொண்டும் இம்சை செய்விக்காதே.

16. நிலைத்த தாவரங்களான உயிர்கள் ஒரே இந்திரியம் உள்ளவை. —தொடுகை உணர்ச்சி மட்டும் பெற்றிருப்பவை. இவை பிறக்கின்றன, வளர்ந்து மடிந்து போகின்றன. இவற்றினால் நடமாட முடிவதில்லை. மண், நீர், காற்று, நெருப்பு, மரம், செடி, கொடிகள் இவ்வினத்தைச் சேர்ந்தவை. இரண்டு இந்திரியங்களை உள்ள உயிர்களால் தொடவும், ருசி அறியவும், முகரவும் முடிகிறது. எறும்பு விட்டில் போன்ற பூச்சிகள் இவ்வினத்தைச் சேர்ந்தவை. நான்கு இந்திரியங்கள் உள்ள உயிர்களால் தொடவும் ருசி

அறியவும், முகரவும் பார்க்கவும் முடிகிறது. ஈ, கொசு, வண்டு, தேள் முதலியன இவ்வினத்தைச் சேர்ந்தவை. ஐந்து இந்திரியங்கள் உள்ள உயிர்களால் தொடவும் ருசி அறியவும் முகரவும், பார்க்கவும், கேட்கவும் முடிகிறது. ஆடவன், பெண், குழந்தை, பசு, எருது, குதிரை, யானை, மீன், முதலை, பாம்பு, பறவை போன்றவை இவ்வினத்தைச் சேர்ந்தவை. எல்லாவற்றிற்கும் ஆன்மா இருக்கிறது. தம்மைப் போலவே எல்லாவற்றிற்கும் தம் உயிரிடம் பற்றுண்டு என்பதை உணர்ந்து அச்சத்தையும் பகைமையும் நீத்து எந்த உயிர்க்கும் இம்சை புரிதலாகாது.

17. தன் லாபம் கருதியோ, பிறருக்கு லாபம் விளைவிக்கும் எண்ணத்தாலோ ஒரு போதும் பொய் பேசாதே. கோபத்தாலோ பிறருக்குப் பயந்து பொய் பேசாதே. பிறருக்குத் தீங்கு விளைவிக்கும் பொய்யை நீயும் சொல்லாதே. பிறரையும் சொல்லச் செய்யாதே. நீ உண்மை பேசுவதனுல் ஒருவர் மனம் நோகும், உன் பேச்சு ஒருவருக்கும் பிடிக்காது, பிற உயிர்களுக்கு கஷ்டம் நேரும் என்ருல் அதைப் பேசாதிருத்தல் நன்று. அது உண்மையாக இருந்தாலும் அதனுல் உனக்குப் பாவமே நேரும்.

18. ஊமையை ஊமை என்று கூறுதலும், அலியை அலி என்ருலும் நோயுற்றவனை நோயாளி என்று கூறுதலும், திருடுபவனை திருடன் என்றும் உண்மையானுலும் இப்படியெல்லாம் கூறுவது சரியாகாது. ஏனெனில் இதனுல் சம்பந்தப் பட்டவர்கள் மனம் நோகும்.

19. எவரும் உன்னைக் கேளாத போது பதில் கூருதே இருவர் பேசிக் கொண்டிருக்கையில் இடையில் புகுந்து எதுவும் கூருதே. ஒருவரைப் பற்றி மற்றவரிடம் எதுவும் சொல்லாதே. கபடமாகவும் பொய்யாகவும் புனைந்தும் எவரிடமும் பேசாதே.

20. பிரும்மச்சரியம் என்பது உயர்ந்த தவம், பணிவு, ஞானம், அறிவின் தெளிவு நன்னடத்தை புலனடக்கம் ஆகியவற்றிக்கெல்லாம் வேர் போன்றது. பெண்களுடன் தொடர்பு கொள்ளாத ஆடவன் மோட்ச வழியில் முன்னேறுகின்றான். பிரும்மச்சாரியத்திற்கு பத்து வழிகள் உள்ளன. 1. பிரும்மச்சாரி ஜனநடமாட்டம் அதிகமற்ற பெண்கள் இல்லாத இடத்தில் இருக்க வேண்டும். 2. மனதில் மகிழ்வு உண்டாக்கக் கூடிய, சிற்றின்ப வேட்கையை வளர்க்கும் பெண்கள் பற்றிய எல்லா விஷயங்களையும் அவன் ஒதுக்கிட வேண்டும். 3. பெண்களுடன் பழகும் சந்தர்ப்பங்களை அவன் தவிர்க்க வேண்டும். 4. பிரும்மச்சாரி பெண்களின் அங்க அவயங்களையும், அவர்களின் பார்வையையும் கவனிக்கக் கூடாது. 5. பிரும்மச்சாரி பெண்களின் பாட்டையோ கூச்சலையோ கேட்கக் கூடாது. அவர்கள் அழுவதையும், சிரிப்பதையும் கவனிக்கக் கூடாது. 6. அவன் முற்பிறவியில் தான் பெண்களுடன் இன்பம் பெற்றதையும், விளையாடியதையும நினைத்துப் பார்க்கக் கூடாது. 7. பிரும்மச்சாரி மிகவும் ருசியானதும், நெய் மற்றும் எண்ணெயில் பொறித்ததையும், தயிர், வெல்லம் ஆகியவற்றில் செய்யப்பட்ட பதார்த்தங்களையும் அறவே ஒதுக்கிவிட வேண்டும். 8, பிரும்மச்சாரி தரும வழியில் கிடைக்கும் உணவை அளவுடன், புலனடக்கத்திற்குத் தேவையான அளவில் உண்ண வேண்டும். 9. அவன் தன் உடலை அழகு படுத்திக் கொண்டு பிறரை கவர முயலக் கூடாது. 10. அவன் ஒலி, உருவம், ருசி, மணம், தீண்டுகை ஆகிய ஐந்து காம குணங்களையும் அவன் ஒதுக்க வேண்டும்.

**ஆசாரியர்களின் திருவாக்குகள் :—**

*விலைமகள் :—* மனிதன் தன்னை விரும்புவதை அறியும் விலைமாது அவனைப் பலவகைகளில் ஏமாற்றி அவன் பொருட்கள் அனைத்தையும் கவர்ந்து கொள்ளுகின்றாள்.

அவன் எலும்பும் தோலுமாய் ஆனபிறகுதான் அவனை விடு கிறாள்.

(வஸு நந்தி—ச்ராவகாசாரம் 89)

திருட்டு ;— பிறர் பொருளைத் திருடுபவனுக்கு இந்த லோகத்திலும் துயரம்; பரலோகத்திலும் துயரம்தான். அவ னுக்கு என்றும் எங்கும் இன்பமில்லை.

(வஸு நந்தி—ச்ராவகாசாரம் 101)

வேட்டை :— ஒரு பாவமும் அறியாது பயந்துபயந்து இங்குமங்கும் ஓடுவதும், புல்லைத் தின்று உயிர் வாழ்வதும் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாததுமான மானை நெஞ்சில் ஈரமற்ற மனிதன் எப்படித்தான் கொல்லத் துணிகின்றானோ.

(வஸு நந்தி—ச்ராவகாசாரம் 89)

சீலக் கேடு :—

பிறர் மனைவியைக் கண்டு அவளிடம் ஆசை கொள்ப வன் பெறுவது பாபமேயன்றி வேறு எதுவுமேயில்லை.

(வஸு நந்தி—ச்ராவகாசாரம் 112)

கோபம் :— நெருப்பானது எரியக்கூடிய பொருட்களை எரித்துவிட்டுத்தான் அணைவதுபோல கோபம் மனிதனை அழித்துவிட்டு தானும் அடங்கிவிடுகிறது.

(சிவகோடி பகவதி ஆராதனை 1364)

தானம் :—

உபாசகாத்யயனத்தில் நான்கு வகையான தானம் விதிக்கப்பட்டுள்ளது. அவை உணவு, மருந்து, சாத்திரம் அபயம் என்பன. இந்த நான்கு தானங்களும் அவசியம் செய்ய வேண்டியவை.

(வஸு நந்தி—சிராவகாசாரம் 233)

புராணம் :—

கருணையே தர்மத்தின் ஆணிவேர் :—

"எனக்கு என் உடலிடம் ஆசையிருப்பது போலவே அனைத்து உலக உயிர்களுக்கும் தம் உடலிடம் ஆசையுண்டு என்பதை உணர்ந்து நாம் அனைத்து உயிர்களிடமும் கருணை காட்டுதல் மிக அவசியம்.

(ரவிஷேணன்; பத்மபுராணம் 14—1‹6)

ஜினேந்திர தேவன் தர்மத்தின் இறுதி எல்லை இருப்பது கருணையில்தான் என்று கூறியிருக்கின்றார். கருணையற்ற மனிதனிடம் தர்மம் என்பது கொஞ்சம்கூட இருக்க முடியாது.

(ரவிஷேணன் பத்மபுராணம் 14—187)

தர்மத்துடன் இணைந்திருப்பதே செல்வம். தயை எதில் கலந்திருக்கிறதோ அதுவே தர்மம்; புலாலை மறுத்தலே தலையாய தர்மம்.

(ரவிஷேணன்; பத்மபுராணம் 35—161)

ஜப்பானின் தலைநகரான டோக்கியோ நகரில் மட்டும் 40,000 போலிசார் சட்டம் ஒழுங்கு நிலையைக் கட்டுப்படுத்த செயல்படுகின்றனர். ஆனால் சென்னை நகரில் 7537 போலிசார்தான் சட்ட ஒழுங்கு நிலையை கட்டுப்படுத்த செயல்பட்டு வருகின்றனர். தமிழ்நாடு பூராவும் மொத்தம் 50,000 போலிசாரே உள்ளனர்.

பி. நாராயணன்

# "சீக்கிய மதம்"

முற்காலத்தில் பாரத தேசத்தில் செழித்து வளர்ந்த இந்து மதத்திலிருந்தே கிளைத்தெழுந்த சமண மதத்தையும் பௌத்த மதத்தையும் போல் சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றியது சீக்கிய மதம். அப்போது பஞ்சாபில் இம்மதம் தோற்றுவிக்கப்பட்டது. இன்றும் இம்மதம் பஞ்சாபில்தான் செழித்து வளர்ந்து வருகின்றது. இம் மதம் வீரத்தை அடிப்படையாகக் கொண்டது. இம்மதத்தை சேர்ந்தோர் உடல் வலிமைக்கும், அறிவாற்றலுக்கும் சுறு சுறுப்புக்கும் பெயர் பெற்றவர்கள்.

சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கு முன், அதாவது 1469ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 15ம் நாள் பஞ்சாப்பிலுள்ள ஷேக்புரா மாவட்டத்தைச் சேர்ந்த தல்வண்டி என்ற சிற்றூரில் ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தை தன் தாய்வழிப் பாட்டனரின், வீட்டில் அவதரித்ததால் அது 'நானக் சந்த்' என்றே அழைக்கலாயினர்.

குழந்தையின் தாயாரின் பெயர் திருப்தா என்பதாகும்; தந்தையின் பெயர் 'காலூ சந்த்' என்பதாகும். நானக் சிறு பிராயம் முதற்கொண்டே மிகவும் அமைதியுள்ளவராகவும், அடக்கம் கொண்டவராகவும், கூறிய மதி படைத்தவராகவும் விளங்கி வந்தார். நானக், தன் தாய் மொழியான இந்தியுடன், வடமொழியான சம்ஸ்கிருதத்தையும், பார்சி மொழியையும் நன்கு கற்றுத் தேர்ந்தார்.

இளமை காலத்திலிருந்தே நானக் அவர்கள் கடவுள் பக்தி மிகுந்தவராக இருந்து வந்தார். தினமும் அருகில் உள்ள வனத்திற்குச் சென்று சந்தடியில்லாத தனி இடத்தில் அமர்ந்து மணிக்கணக்கில் சிந்தனையில் ஆழ்ந்திருப்பது அவர் வழக்கம்.

ஒரு நாள், இவர் தந்தை காலூ சந்த் இவரிடம் சிறிது பணம் கொடுத்து சில பொருட்களை வாங்கி வருமாறு சொல்லி அனுப்பினர். பணத்துடன் கடைத் தெருவுக்குச் சென்ற நானக், தந்தை கூறியபடி சாமான்களை வாங்க மறந்தார். அங்கே கடைத் தெருவில் கடைகளில் மிக அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பழங்களையும், பணியாரங்களையும் வாங்கி தன் கண்ணில் தென்பட்ட ஏழை எளியோர்க்கு இலவசமாக கொடுத்து விட்டு வெறுங்கையுடன் வீடு திரும்பினர். அவ்வாறு வீடு திரும்பியவர் தன் தந்தையிடம் தன் செயல்களை மிகவும் பெருமிதத்துடன் விவரித்தார்.

இன்றும் பஞ்சாப் கடைத் தெருவில் நானக் பழங்களும் திண்பண்டங்களும் வாங்கிய கடைகள் இருந்த இடம் "சச்சா சௌதா" (உண்மை வியாபாரம்) என்ற பெயருடன் புகழ் பெற்று விளங்கி வருகின்றது.

நானக்கின் பெற்றோர்கள் நம்மைப் போல், மாயையில் சிக்குண்டவர்களாக இருந்து வந்த காரணத்தினால் தன் மகனின் பெருமைகளையும், சிறப்பையும் அறிந்து கொள்ள முடியவில்லை. அதனால் அவர்கள் தங்கள் மகன் சாதுக்களுடனும், சன்னியாசிகளுடனும் பழகுவதை விரும்பவில்லை; மேலும் நானக் பொறுப்பில்லாமல் கையில் கிடைக்கும் பொருட்களையெல்லாம் ஏழை எளியோர்க்கு இலவசமாக கொடுப்பதையும், பசித்தவர்களுக்கு உணவளிப்பதையும் கண்டு மனம் நொந்தனர்.

'நானக்' அவர்களுக்கு சுமார் பன்னிரெண்டு வயதான சமயத்தில் அவர் தந்தை 'நானக்' அவர்களை ஒரு மளிகைக்

கடையில் சிற்றாளாக அமர்த்தினர். ஒருநாள் இவர் கடையில் ரொட்டி மாவு கேட்ட ஒருவருக்கு அதை தராசில் இட்டு நிறுத்துக் கொடுத்து வருகையில் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று பன்னிரெண்டு சேர் நிறுத்தபின், பதினொன்கு, பதினைந்து என்று மேலே நிறுத்துக் கொண்டு போகாமல் 'பதிமூன்று' என்ற எண்ணைக் குறிக்கும். "தேரா" என்ற இந்தி–பஞ்சாபிச் சொல்லையே திரும்ப திரும்பக் கூறிக் கொண்டிருந்தார். 'தேரா' என்பதற்கு "உன்னுடையது என்பதும் பொருளாகையால் அதைச் சொன்னதும் அவருக்கு கடவுள் நினைவு வந்து விடவே எல்லாமே ஆண்டவனுடையவை என்ற கருத்தில் "தேரா–தேரா–தேரா" என்று சொல்லிக் கொண்டேயிருந்து விட்டார். இவ்வாறு தன் நினைவில்லாமல், தாம் செய்வதை மறந்து கடவுளின் நினைவில் ஆழ்ந்து போகும் பையனை, மேலும் கடையில் வேலைக்கு வைத்துக் கொள்ள விரும்பாவல் கடைக்காரர் அனுப்பி விட்டார்.

தன் மகனின் இச்செயல்களைக் கண்டு வருந்திய பெற்றோர், அவனுக்கு நல்ல ஒரு பெண்ணைப் பார்த்து திருமணம் செய்து வைத்து விட்டால். அவன் நல்வழிக்கு வந்து விடுவான் என்று எண்ணி ஒரு பெண்ணைப் பார்த்து திருமணம் செய்து வைத்தார்கள். திரு. நானக் அவர்களும் தன் மனைவியோடு சிறிது காலம் குடும்பம் நடத்தி வந்தார். அவருக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. ஆனால் இந்தக் குடும்ப வாழ்க்கை திரு. நானக் அவர்களுக்கு மனதிற்கு பிடிக்கவில்லை. மனைவியினாலோ, குழந்தைகளினாலோ இவரின் மனதை கட்டிப் போட இயலவில்லை.

ஆகவே ஒரு நாள் நானக் அவர்கள் வீடு, வாசல், மனைவி, குழந்தைகள் அனைத்தையும் துறந்து வெளியேறி விட்டார். கடவுளைக் காணும் பெரு முயற்சியில் எங்கெல்லாமோ சென்று, எத்தனையோ சாதனைகள் புரிந்தபின்

கடைசியாக அவருக்கு இறைவனின் காட்சி கிடைத்ததாகச் சொல்லப்படுகிறது.

சிறிது காலத்திற்குப் பின் நானக் முறைப்படி துறவறம் மேற்கொண்டு பல இடங்களில் சுற்றவும், தாம் சென்ற இடங்களிளெல்லாம் மக்களுக்கு நல்ல கருத்துக்களை உபதேசம் செய்யவும் தொடங்கினர். அவர் முதன் முதலாக அளித்த உபதேசம்,

''எவனும் இந்துவுமல்ல, முசல் மானுமல்ல; எல்லோரும் மாந்தர்'' என்ற உண்மையாகும்.

உள்ளத்தின் கட்டு அவித்து விட்டபின், அஞ்ஞானம் அகன்றவர்க்கு உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்பதோ, பெரியவன், சிறியவன் என்பதோ ஏது? அவருக்கு எல்லாரும் எல்லாமே கடவும் மயமாகத் தோன்றிற்று. அவர் எங்கும் ஆண்டவனைக் கண்டார்.

''கஹீ நானக் ஜினி ஹீகமு பச்சாதா—
ப்ரப லாகபகா தினி பேது ஜாதா | |

நானக் ஒரு புதிய சமயத்தை, சீக்கியம்' என்ற சம்பிர தாயத்தை ஏற்படுத்தினர்.

'சீக்கியன்' என்பதற்கு மாணவன், சீடன் என்பது பொருள்.

'நானக்' அவர்கள் எல்லாவிடங்களிலும் எல்லா உடல் களிலும் பிரம்மம் உள்ளது.—'ஸப் கட பிரும்ம நிவாச' என்று கருதினர். இதன் மூலம் அனைவரும் சமமானவர்கள்; எவரும் பெரியவரோ, சிறியவரோ கிடையாது. நாம் அனைவரிடமும் அன்பு செலுத்தவும், அனைவருக்கும் உதவி புரிதலும் அவசியம். உள்ளத்தை பரிசுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். சதா காலமும் ஆண்டவனின் திரு

நாமத்தை ஜெபிக்க வேண்டும். அதன் மூலம் வாழ்வை மேன்மேலும் உயர்த்திக்கொள்ள வேண்டும்.'' என போதித்தார்.

'நானக்' அவர்களின் எஞ்சிய வாழ்நாள் பூராவும் மக்களைச் சந்தித்து இந்த நற்போதனைகளை அளிப்பதிலேயே கழிந்தது. அவர் நாடு பூராவும் சுற்றியதுடன் 'அரேபியா' போன்ற சில தேசங்களுக்கும் யாத்திரை மேற்கொண்டதாகக் கூறப்படுகின்றது.

'நானக்' அவர்கள் ஒருமுறை புனித மெக்காவிற்கு சென்றிருந்தார். அதுசமயம் அங்குள்ள காபாவில் படுத்து உறங்கினர். உறங்கும்போது தன் கால்களை காபாவின் பக்கம் வைத்துப் படுத்திருந்தார். இதைக் கண்ட 'முல்லாக்கள்' சிலர் ஓடிவந்து, ''இது கடவுளின் இடம் என்று கூடத் தெரிந்துகொள்ளாமல், ஆண்டவன் பக்கம் காலை நீட்டிக் கொண்டு படுத்துறங்குகின்றீர்களே—இது தவறல்லவா?'' என்று அதட்டினர். உடனே 'நானக்' பெருமகனார் ''அப்படியானல் நீங்கள் எனக்கு காலை நீட்டிக் கொள்வதற்கு ஆண்டவன் இல்லாத திசையைக் காட்டுங்கள்'' என்றார். இவரின் கருத்தையும் இவரின் பெருமையையும் புரிந்துகொள்ளாத மௌடிகர்களான அவர்கள் இவரின் கால்களைப் பிடித்து சக்கரவட்டமாகச் சுற்ற முயன்றபோது இவர் கால் சென்ற திசையில் காபாவும் சுற்றி சுற்றி வந்து கொண்டிருந்தது. அதைக் கண்டு திகைத்து நின்ற இவர்கள், இவரின் பெருமையறியாமல் தாங்கள் செய்த தவற்றிற்கு வருந்தி இவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள்.

மூட நம்பிக்கைகளைக் கடுமையாக எதிர்த்தவர் 'நானக்' அவர்கள். சாதிப் பிரிவுகளிலும் இவருக்கு அறவே விருப்பம் காட்டியது கிடையாது. இவரது சீடர்களில் இந்துக்கள், முஸ்லீம்கள் பெருவாரியாக இருந்து வந்தார்கள்.

"ஸ்ரீஆதிகுரு கிரந்த சாகேப்" என்பது சீக்கியரின் புனித நூலாகும். இப்புனித நூலில் நானக்கினுடையவும், பிற குருக்களினுடையமான திருமொழிகள் இடம் பெற்றிருப்பதோடு கபீர்தாசர், ரைதாசர், சேனு போன்ற எத்தனையோ பிற பக்தர்களின் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

'ஜபுஜி' என்பது 'நானக்' அவர்கள் இயற்றிய மிகவும் சிறந்த மகிமை நிரம்பிய நூலாகும்.

தன் வாழ்நாள் பூராவும் ஆண்டவனின் நாம ரசத்தை எண்ணற்ற மக்களுக்கு வாரி வழங்கிவிட்டு நானக் தேவர் தனது அறுபத்தி ஒன்பதாம் வயதில் இவ்வுலக வாழ்வைத் துறந்து விண்ணுலகு எய்தினர். இவர் ஒரு மரத்தடியில் அமர்ந்தபடி கடவுள் தியானத்தில் ஆழ்ந்திருந்தவர் தன் சீடர்களிடம் 'சோஹிலா' பாடுங்கள் என்றார். அவ்வாறே பாடப்பட்டது. அதையடுத்து 'ஜபுஜி' ஓதப்பட்டு அதன் கடைசி சுலோகம் பாடப்பட்டதும் போர்வையை இழுத்துப் போர்த்தியபடி படுத்தவர்தான் பிறகு எழுந்திருக்கவே யில்லை. 'நானக்' அவர்களின் திருவாயிலிருந்து கடைசியாக எழுந்த சொற்கள் என்ன தெரியுமா?

"வாஹ் குரு" என்பதாகும். அதற்கு "ஏ, ஆண்டவனே!" என்று பொருளாகும்.

சீக்சிய மதத்தில் பத்து குருமார்கள் இருந்திருக்கின்றனர். அவர்கள் அனைவருமே 'நானக்' என அழைக்கப்படுகின்றனர்.

1. ஆதிகுரு 'நானக்' தேவர்.
2. குரு அங்கதர்.
3. குரு அமரதாசர்.
4. குரு ராமதாசர்.
5. குரு அர்ஜுன தேவர்.

6. குரு ஹர கோவிந்தர்.
7. குரு ஹர ராய்.
8. குரு ஹர கிருஷ்ணர்.
9. குரு தேஜ் பகதூர்.
10. குரு கோவிந்த் சிங்.

இந்த பத்து குருக்களே சீக்கிய மதத்தை வேரூன்றச் செய்தவர்கள். இவர்கள் ஆற்றிய பணிகள், பக்தி, அன்பு, வீரச் செயல்கள், தியாகங்கள் போன்றவை பஞ்சாப் பிர தேசம் பூராவும் கதை கதையாய் வழங்கப்பட்டு வருகிறது. இந்தப் புகழ் பெற்ற பத்து குருமார்கள் இயற்றிய பாடல் களிலும் கடவுள் பக்தி, நாம மகிமை, தூய வாழ்வின் அவ சியம், நன்னடத்தையின் மேன்மை ஆகிய கருத்துக்கள் செறிந்துள்ளன.

சீக்கிய சமயத்தின் அடிப்படையே குரு பக்திதான். குருவுக்குப் பணிவிடை செய்வதும் குருவின் அருளைப் பெறுவதும் சிறப்பாகக் கருதப்பட்டு வருகிறது. அதனால் அவர்கள்

குரு மேரீ பூஜா குரு கோவிந்து!

குரு மேரா பாரப்ரஹ்ம குரு பகவந்து!!

குருவே என் வழிபாட்டுக்கு உரியவர். குருவே கோவிந்தன் குருவே என் பரம்பொருளும் பகவானும் என்று நம்புகின்றனர்.

சீக்யர்கள் வழிபடும் குரு ஒவ்வொரு உயிரிலும் வதியும் பரம் பொருள்தான். இந்த குரு அனைவருக்கும் ஒளி வழங்கி அனைவரையும் உண்மை வழியில் அழைத்து ஏகு கிறார். "குரு கோபாலு புரகு பகவான்" (குருவே கோபாலன் பரம புருஷன் பகவான் எல்லாம்.) இந்தக் குரு புறத்திலும் அகத்தேயும் உள்ளார். பக்தன் காண விரும்பும்

உருவிலேயே அவனுக்கு காட்சி கொடுத்து அவனைக் கடைத் தேற்றுகின்றார். சீக்கியர்களின் கடைசி குருவான 'குரு கோவிந்த சிங்' தன்னுடன் குரு பரம்பரை முற்றுப் பெற்று விட்டதாக அறிவித்து, அதன் பிறகு "ஸ்ரீ குரு கிரந்த சாகிப்" என்ற புனித கலையே அனைவரும் தம் குருவாக ஏற்றுக் கொண்டு வழிபட வேண்டும் என்று பணித்தார்.

குரு கிரந்தத்தையே குருவாகக் கொள்ளுதல் என்றால் குருமார்களின் புனித வாக்கின்படி நடந்து நானக் தேவர் முதலான குருக்கள் ஆகியோரின் புனிதமான போதனையைக் கடைப் பிடித்து நடந்து வந்தால் கடைத் தேறிவிடலாம் என்பதாகும்.

குரு கிரந்தத்தை வழிபடுதல் என்றால், அதன் போதனைப்படி வாழ்க்கையை ஒழுங்கு பெற அமைத்துக் கொள்ளுதலேயன்றி, அதைக் கண்ணில் ஒற்றிக் கொள்ளுதலோ, தலைமீது தூக்கி வைத்துக் கொள்ளுதலோ, அதன் மீது பூக்களை வைத்து விசிறி கொண்டு உபசரிப்பதனாலோ இல்லை என்றும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. அதன் போதனையினின்று சிறிதும் வழுவாது நடந்து வருதலே அதற்கு செய்யப்படும் பூசை வழிபாடு ஆகும்.

சீக்கிய சமயத்தில் ஆண்டவன் ஒருவரே என்று எண்ணி வழிபடப்படுகிறது. அவருக்கு எண்ணற்ற குணங்களும் திரு நாமங்களும் உண்டு. குரு கிரந்தத்தில் ஆண்டவனை, ஹரி, இராமன், பிரபு, பகவான், கிஷன், பரும்மா, கோவிந்தன், கோபாலன் கோசாயி, ஈசுவரன், மாதவன், முராரி என்றும், அல்லா, கரீம், ரஹீம், சாகிப், ரப் என்றும் பியாரா, பீர்தம், வாஹ்குரு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவிர, ஏக, ஒங்கார, அநேக, காளக், கரண காரண, மூல, டேக, அதர, ஜக ஜீவன, பிராண தாதா, நிர்குண, சகுண, மாளக, பரமஜோதா,

பாபா, பிதா, மாதா, பாயி, மித்ர, பவித்ர, புனித, நிர்பய, அபூல், அடோல, மன மோகன என்ற எத்தனையோ திரு நாமங்களும் வழங்கப்பட்டுள்ளன.

சீக்கிய மதத்தில் இத்திருநாமங்களை திரும்ப திரும்பச் சொல்லுதல் முக்யமாக வற்புறுத்தப்பட்டுள்ளது. நாம ஜபம் புரியாதவன் தற்கொலை செய்து கொள்பவனாவான் என்ற அளவிற்கு இது வற்புறுத்தப்படுகிறது. நாம ஜபம் என்றால் ஆண்டவனை ஒருகணமும் மறவாமல் சதா சர்வ காலமும் மனதில் தேக்கிக்கொண்டும், அவரது திருவுருவை நம் கண்முன் வைத்துப் பார்த்துக் கொண்டும் இருப்பதே யாகும். அந்த ஆண்டவன் எங்கும் இருப்பதாகவும், ஒவ்வொரு உயிரிடமும் ஒவ்வொரு உடலிலும் வதிவதாகவும் நம்புகையில் நாம் நிச்சயம் பாவம் செய்ய மாட்டோம் என்று திடமாக நம்புகின்றனர்.

'குரு நானக்' அவர்கள் தம் சீடர்களுக்கு முக்யமாய் மூன்று போதனைகளை அளித்துள்ளார்.

1. கடவுள் திருப்பெயர்களை ஜபித்தல்.

2. கடவுள் புகழ் பாடுதல்.

3. தம்மிடம் உள்ளதை அண்டை அயலில் உள்ளவர் களுடன் பகிர்ந்தும் சேர்ந்தும் உண்ணுதல்.

ஒவ்வொருவரும் உழைத்துப் பாடுபட்டு பொருள் தேட வேண்டும் என்றும், அவ்வாறு தேடியதை உடன் இருப்பவர் களுக்கும் பகிர்ந்தளித்து தானும் சாப்பிடவேண்டும் என்றும் இவ்வாறு செய்கின்றவர்களுக்கு 'வாஹ் குருவின்' அருள் கிட்டுமென்றும் 'நானக்' அவர்கள் கூறியுள்ளார்.

சீக்கிய மதத்தில் 'ஜபுஜி! எனப்படுவது. ஆதி குரு: எனப்படும். அது உருவில் சிறியதானாலும், மிகவும் இனி

யது. அற்புதமானது. 'குரு கிரந்த சாகிப்பின் தொடக்கமே 'ஜபுஜி'தான். ஆதி குருவின் போதனைகள் அனைத்தும் இதிலுள்ளதாக சீக்கியர்களின் நம்புகின்றனர். சீக்கியர்கள் தினமும் காலையில் எழுந்ததும் பக்தி சிரத்தையுடன் இதைப் பாராயனம் செய்கின்றனர். இந்துக்கள் 'பகவத் கீதையை' போற்றிக் கொண்டாடுவது போல, சீக்கியர்கள் 'ஜபுஜி'யை போற்றி வருகின்றனர். இதில் மனிதன் கடைத்தேறத் தேவையான உயர்ந்த தத்துவங்கள், கருத்துக்கள் அனைத்தும் இதில் கூறப்பட்டுள்ளதாக கருதுகின்றனர்.

'ஸ்ரீ குரு கிரந்தம்' என்பது சீக்கியர்களின் குருவே இயற்றிய நூலாகும். இது 'குருவாணி' என்றும் அழைக்கபடுகிறது. இதில் குரு தம் சீடர்களை விளித்துப் பேசுகின்றார். இதில் குருவானவர் தன் சீடனைக் கடைத்தேற்றி விடவும், அவன் வாழ்க்கையைப் புனிதமாக்கிக் கொள்ளவும், அவனை சம்சாரக் கடலிலிருந்து கரை சேர்க்கவும் வழி கூறப்பட்டுள்ளது. பெரிய அளவில் அமைந்த 1500 பக்கங்களைக் கொண்ட குரு கிரந்த சாகிப்பில் இடம் பெற்றுள்ள குரு நானக்கின் பாடல்களையும், கபீர்தாசர், ரயிதாசர், நாமதேவர், பரீத், பீகன், வேணி, சூரதாசர் ஆகிய மகான்களின் பாடல்களையும் பாடி அவற்றினின்று தவறாது நடந்துவந்தால் நிச்சயம் கடைத்தேறிவிடுவார்கள் என்பது நிச்சயம் என சீக்கிய மதம் கூறுகிறது.

நாம் உண்மையுள்ளவர்களாக ஆவது எப்படி? பொய்யின் உண்மை சொரூபத்தை அகற்றி சத்தியத்தை எவ்வாறு காண்பது என்பதற்கான விடையை சீக்கியம் கீழ்கண்டவாறு விளக்குகின்றது, அதற்கு "ஹுகமி ரஜாயி சலனா" அந்த பரம்பொருளின் திருவுள்ளப்படி நடத்தல், அவனிடம் தன்னை அர்ப்பணித்துவிடல் என்பது ஒன்றே மார்க்கம், அவன் ஏவலின்படி நடந்து அவன் கட்டளையை நிறைவேற்றுவது ஒன்றே வழி. பரமாத்மாவின் இந்தக் கட்டளை

நம்முடன் கூடவே பிறந்திருப்பதுதான் என்கின்றார் நானக்.

"எல்லாம் அவன் ஆணைப்படியே"—

இந்த உலகில் நடப்பதெல்லாம் பரமாத்மாவின் கட்டளையே. அவர் கட்டளைப்படியே உலகில் விதவிதமான உருவங்கள் தோன்றுகின்றன. அவரது ஆணைகளை நம்மால் விவரிக்கவோ, வருணிக்கவோ முடியாது. அவரின் ஆணைப்படியே உலகில் அனைத்து உயிர்களும் பிறக்கின்றன. உயர்ந்த பதவிகளும் விருதுகளும் கிடைப்பது அவரின் ஆணையால்தான். உயர்ந்த பதவி மட்டுமின்றி, நாம் உலகில் மேன்மை பெறுவதும், துன்பம் அடைவதும், இன்பம் பெறுவதும் அவர் ஆணைப்படியே. அவர் கட்டளையே நமக்கு வீடு பேறு அளிக்கின்றது. அவரது ஏவலுக்கு உட்பட்டு அடங்கியிருப்பவர்கள்தான் நாம் அனைவரும். அதற்கு அடங்காதவர் எவருமே கிடையாது.

"தான் என்ற அகந்தை அற்றுப் போதல்"

கடவுளின் திருவுள்ளத்தைப் புரிந்து கொண்டு வாழ்பவன் 'தான்' என்பது அற்றுப்போகின்றான். அவனது ஆணவம் அழிந்துபோகின்றது. பிறகு தன் மூலம் நிகழும் எந்தக் காரியத்தையும் குறித்து அவன் 'நான் செய்தேன்', 'நான் செய்தேன்' என்று கூறி மார் தட்ட மாட்டான் என்று கூறுகின்றார் நானக் அவர்கள்.

"ஸுனியே தூக பாபகா நாஸு" (6)

'ஸுனியே' என்றால் கேளுங்கள் என்று பொருள். ஆண்டவனின் திருநாமத்தை செவிமடுங்கள் என்று பொருள்.

ஆண்டவனின் திருநாமத்தைக் காதால் கேட்டு சாதாரண மனிதரும் பெரிய சித்தராக, மகான்களாக, ரிஷி முனி

வர்களாக ஆகிவிடுகின்றனர். அவரின் திருப்பெயரைக் கேட்டே இப்பூவுலகம் தோன்றியது. அதை தன் முதுகில் தாங்கி நிற்கும் வெள்ளை எருது தோன்றியது. இந்தவான வெளி உருவெடுத்தது. மேலும் ஆண்டவனின் திருநாமத்தை காதால் கேட்டுக் கொண்டிருப்பவர்களுக்கு இறப்பே கிடையாது. காலன் அவர்களை அணுகவே மாட்டான். பக்தர்கள் எப்போதும் முகமலர்ச்சியுடன்தான் இருப்பார்கள். ஆண்டவனின் திருப்பெயரைக் கேட்பதால் எல்லாத் துயரங்களும் பாவங்களும் அழிந்துபோகும் என்று உபதேசிக்கின்றூர் 'நானக்' அவர்கள்.

''மம்னே கீ கதி கஹீ ந ஜாயி' (7)

பகவானது அனந்த குணங்களை மனனம் செய்யும் பக்தனது நிலையானது எவராலும் வருணிக்க இயலாது. வர்ணிக்க புகுவோன் தான் ஆழம் தெரியாத காற்றில் இறங்கிவிட்டதை எண்ணி வருந்துவான். வர்ணித்து எழுதலாம் என்று தொடங்குபவனுக்கு எவ்வளவு காகிதம் இருந்தாலும் போதாது. பேனைக்கள் யாவும் தேய்ந்து மழுங்கிப்போகும். அதை எழுதுபவன் கையும் சளைத்துப்போகும். பகவானின் பெயர் நிரஜ்ஜனம் ஆகும். அதை தன் மனதில் வாங்கி மனனம் செய்பவனுக்குத்தான் அதன் மகிமை என்னவென்று புலப்படும்.

ஜோ துது பாவை ஸாயீ பலீ கார் (9)

உனதுவழி பாட்டிற்குள்ள மந்திரங்கள் எண்ணிலடங்காதவை. பாவங்களும் தவ முறைகளும், சாதனைகளும் அளவுகடந்தவை. எண்ணற்ற மக்கள் வேதம் ஓதுகின்றனர். எண்ணிலடங்காத யோகியர் துறவறம் மேற்கொண்டு உனது எண்ணத்திலேயே காலம் கழித்து வருகின்றனர். பக்தர்கள் உனது குணங்களையும், தத்துவங்களையும் பற்றி சிந்தித்த வண்ணமாகவே இருந்து வருகின்றனர். சத்திய மார்க்கத்தை கடைப்பிடிப்போரும், வரையாது வழங்கு

வோரும் எத்தனையோ எண்ணற்றவர்கள். எண்ணிலடங்காத வீரர்கள் தர்மத்திற்காக போரில் கலந்துகொண்டு எதிரியின் வாளுக்கு தங்கள் தலையை காணிக்கையாக்குகின்றனர். ஏராளமான பக்தர்கள் வாய் திறவாமல் மௌனமாக இருந்து உன் திருநாமங்களை அல்லும்பகலும் ஜபித்து கொண்டேயிருக்கின்றனர். உன்னுடைய பெருமைகளை நான் எவ்வாறு வருணிப்பேன். அதற்கு எனக்கு ஏது தகுதி? என்னையே உனக்கு உரிமையாக்கக்கூட என்னால் முடியாது. உனக்கு எது பிடித்ததோ, எது நல்லதோ, அதுவேதான் நல்லது எனத் தகும். ஏ ஆணவமற்றவனே! நீ இன்றுபோல் என்றும் சுகமே இருந்து வருவாய்.

அந்தரகதி தீரதிமலி நாவு (10)

கையும் காலும் உடலும் அழுக்கானால் அவைகளை நீரினால் கழுவுகையில் அவை சுத்தமாகி விடுகின்றன. மலஜலம் பட்டு நம் ஆடைகள் அசுத்தமானால் நாம் அதை சவுக்காரம் கொண்டு துவைத்து சுத்தமாக்கிவிடலாம். நம் அறிவில் பாவம் புகுந்து அதை அசுத்தமாக்கி விடுகையில் பகவான் திருநாமம் ஒன்றினால்தான் அதைக் கழுவி சுத்தமாகக் முடியும். எவரையும் புண்ணியவான் என்றோ, பாவி என்றோ இறுதியாகக் கூற முடியாது.

ஓவ்வொருவருக்கும் தாம் செய்யும் செயலுக்குத் தகுந்த கூலி கிடைக்கும். தினை விதைத்தால், தினையும் வினை விதைத்தால் வினையுமே பெறுவோம். நீ வருவதும் போவதும் அந்த ஆண்டவனின் திருவுள்ளத்தைப் பொறுத்தது. நீயாகச் செய்யக் கூடியது எதுவும் இல்லை என்கிறார் 'நானக்'.

தீரது தபு தயியா தது தானு'......

நீ தீர்த்த யாத்திரை செல்கின்றாய், தவம் இயற்றுகின்றாய்; தயை புரிகிறாய் தான தருமம் செய்கிறாய் என்றால்

இவைகளினல் உனக்கு சிறிது பேரும் புகழும் கிடைக்கலாம். ஆனல் ஆண்டவனின் திரு நாமங்களையே காதால் கேட்டுக் கொண்டும் அவைகளைக் குறித்தே சிந்தித்தும் பகவான் வழியில் நடந்தும் அதில் முழு மனத்துடன் ஈடுபட்டிருப் பவர் எல்லாப் புண்ணியத் தலங்களுக்கும் போய் எல்லாப் புண்ணிய நீரிலும் ஆடிவிட்டவர் ஆவர். தம் அகத்தில் உள்ள புனித நீரில் மூழ்கி எழுந்து அவர் தம் எல்லாப் பாவங்களையும் கழுவிக் கொண்டு விட்டார். உலகில் உள்ள குணங்கள் எல்லாம் உன்னிடம் இருப்பவையே. என்னிடம் ஒன்றுகூட இல்லை. குணமில்லாதபோது பக்திக்கே இட மில்லை. பிரும்மத்தின் வாக்கே தலையாய வாக்கு. அதுவே சத்தியம், அதுவே சிவம், அதுவே சுந்தரம்.

பஹுதா கரமு விகியா நா ஜாயி :—

பிரபுவின் தாராளத்திற்கும் தயைக்கும் எல்லையில்லை. அதை இவ்வளவு என்று கணக்கிட்டுக் கூறமுடியாது. அவர் பெரிய கொடையாளி. அவருக்கு ஆசை என்பதே கிடையாது. எத்தனையோ பெரிய வீரம் நிறைந்தவர்கள் அவர் முன் கையேந்தி யாசிக்கின்றனர். அவரின் கருணைக் காக காத்து நிற்பவர்கள் பலகோடி. சிற்றின்பங்களில் சிக்கி தம் உடலைக் கெடுத்துக் கொள்வோர் சிலர். அவரிட மிருந்து எவ்வளவோ பெற்றும் திருப்தியில்லாமல் கோபம் கொண்டு போவோர் பலர். சில அறியாமை நிரம்பிய யோர் அவர் அளித்தவற்றை தின்று தீர்த்துக் கொண்டே யுள்ளனர். பசியும் துயரமும் தாளாது மடிந்து கொண்டே யிருப்பவர் எத்தனையோ நபர்கள். ஆனலும் எல்லாம் உன் கருணையே என்று அனைத்தையும் ஏற்றுக் கொண்டு இருப் போரும் உண்டு.

ஏ பிரபுவே! "நாங்கள் பிணியுற்றாலும், நாங்கள் அதனின்று விடுபடுவதும் உன் கருணையினல்தான். அதை

ஏவராலும் சிறிதும் மாற்ற முடியாது. மாற்ற முயலும் அறிவிலிகள் தோல்வியுற்று மண்ணைக் கவ்வுகின்றனர். நமக்கு எது தேவை என்பது அந்த ஈசுவரனுக்குத்தான் தெரியும். அதன்படியே அவர் எல்லாம் அளிக்கின்றார். ஆனால் இந்த உண்மையைப் புரிந்து கொண்டிருப்பவர் வெகு சிலர்தான். தன் புகழ்பாடும் வாய்ப்பை தனக்கு அளித்துள்ள அவர் அரசர்களுக்கெல்லாம் பேரரசர் என்று அறிவுறுத்துகின்றார் உயர் திரு. நானக் அவர்கள்.

நானக் நதரீ நதரி நிஹால் (14)

நீ புலனடக்கத்தை தன் உலையாக ஆக்கிக்கொண்டு தைரியத்தை கருமானகைச் செய்து கொள். அறிவை பட்டறை ஆக்கிக் கொண்டு ஆன்ம ஞானத்தை சுத்தியலாகச் செய்து கொள். பரமாத்மாவிடம் கொள்ளும் அச்சத்தை சம்மட்டியாக்கிக்கொண்டு தவத்தை எரியும் தீயாகச் செய்துகொள். அன்பை அச்சாக வைத்துக் கொண்டு நாம அமுதை அதில் ஊற்றி வார். இத்தகைய உண்மையான ஞாணயச் சாலையிலேயே சப்தத்தை வார்த்து எடுக்கமுடியும். பகவானின் திருவருள் பெற்றவர்களே இதைச் சாதிக்க வல்லார்.

ஜினி நாம தியாயியா......(15)

காற்று நமது குரு. நீர் நம் தந்தை. இந்தப் பரந்த பூமி நம் தாய். பகல் இரவு என்ற இரண்டும் நம்மை வளர்க்கும் செவிலிகள். அகில உலகமும் இவைகளின் மடியில் தவழ்ந்து விளையாடுகின்றது. ஒவ்வொருவர் புரியும் நற்செயல்களும் செய்த தீய காரியங்களும் தர்ம ராஜனின் திருச் சபையில் எடை போட்டுப் பார்க்கப்படுகின்றன. மனிதனது செயலே அவனை ஆண்டவனின் அருகில் அழைத்துப் போகவோ, பகவானிடமிருந்து ஒதுக்கித் தள்ளவோ செய்கின்றது.

பகவானது திரு நாமங்களை ஓயாது ஜபித்துப் பழகிய வர்கள் கடைத் தேறி விடுகின்றனர். அவர்களின் முகங்கள் தெய்வீக ஒளி பெற்றுத்திகழும். அவர்களின் நல்லிணக்கத் திறைல் எத்தனையோ மக்கள் இந்தப் பாவக் கடலைக் கடந்து விட்டனர்.

சீக்கியர்களின் மூல மந்திரத்தைக் கூறி அவர்களின் இப்புனித மதத்தைப் பற்றிய விளக்கங்களை முடிவுக்கு கொண்டு வருவோம்.

ஓங்கார ஸதிநாமு கரதா புருகு நிரபவு!

நிரவைரு அகால மூரதி அஜூனீ ஸைபம்

குருப்ர ஸாதி. என்ற இதுவே அவர்களின் மங்களா சரணம்.

அந்த ஆண்டவனின் அருளினால், அவர் அருளை நம்பியே நாம் எதையும் துவக்குவோமாக.

எவன் ஒருவனோ, எவன் ஓங்காரமோ, எவனது திரு நாமம் என்பதோ, எவன் அகில உலகையும் படைத்து ஆளுகின்றானோ, எவன் எல்லாம் வல்லவனோ, எவன் நிர் பயனோ—எதற்கும் அஞ்சாதவனோ, எவன் காலத்தைக் கடந் தவனோ, எவனுக்கு பிறப்பே இல்லையோ, எவன்தானே சுயமாய்த் தோன்றியவனோ, எவன் குருவோ என்ற இந்த வாழ்த்துடன் நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் தொடங்குவோம்; அவ்வாறு தொடங்கினால் அவன் அருளி னால் எல்லாம் நல்லதாக முடியும்.

# "யூத மதம்"

மத்யதரைக் கடலுக்குப் பக்கத்தில் பாலஸ்தீனம் என்று ஒரு நாடு. அதற்கு இப்பால் ஆசியாவும், அப்பால் ஐரோப்பாவும் இருக்க, மற்றொரு பக்கத்தில் ஆப்ரிக்காவும் உள்ளது. அந்நாட்டில் பராத் என்ற ஆற்றை ஒட்டி அல் முகையர் என்ற மலை இருக்கிறது. இன்றைக்கு நான்காயிரம் ஆண்டுகளுக்குமுன் அங்கே உர் என்ற செல்வம் செழிக்கும் நகரம் இருந்தது. அந்நாட்டில் சுமார் ஐந்து லட்சம் மக்கள் வாழ்ந்து வந்தனர். ஹரான்வாசியான தேராஹ் என்பவன் தன் ஊரைவிட்டுக் கிளம்பி வந்து அந் நகரில் குடியேறினான். கல்லிலும் மண்ணிலும் சிலைகள் செய்வதையே அவன் தொழிலாகக் கொண்டிருந்தான். சிலைகளைச் சமைப்பதுடன் அவன் அவைகளை வழிபட்டும் வந்தான். ஆனால் அவன் தன் மகனின் சொற்களை கேட்டதிலிருந்து அவன் மனதில் தான் செய்வது சரியா என்ற ஐயம் தோன்றிவிட்டது.

இந்த நாட்டிலுள்ள மக்கள் அனைவரும் சிலைகளை தெய்வங்களென்று கருதி அவைகளை வைத்து வழிபடுவதும், கொண்டாடுவதுமாயிருக்கையில் அவைகளை உருவாக்குவதையே தொழிலாகக் கொண்டுள்ள நான் இங்கேயே இருந்துகொண்டு இந்நாட்டு மக்களின் கருத்துக்கு மாறான நடந்து கொள்வது சரியல்ல. என்று கருதியவனாய் அவன் அந்த நாட்டைவிட்டு வேறு எங்கேனும் சென்றுவிட முடிவு மேற்கொண்டான். தேராஹுக்கு அப்ராம்,

நாஹோர், ஹாரன் என்று மூன்று பிள்ளைகள். அப்ராமின் மனைவி ஸாரை என்பவள். ஹாரனின் பிள்ளையின் பெயர் லூத். ஒருநாள் தேராஹ் அப்ராம், ஸாரை, லூத் ஆகியோரை உடனழைத்துக்கொண்டு உர் நகரத்தைவிட்டு வெளியேறி கனுன் பிரதேசத்தை நோக்கிச் சென்றவன் அங்கேயே தங்காமல் தனது ஹாரன் நாட்டிற்கே திரும்பிப் போய் வசிக்கலானுன். பிறகு அங்கேயே அவன் இறந்தும் போனுன்.

விவிலியத்தின் 'பழைய ஏற்பாடு' எனப்படும் யூதர்களின் சமய நூலில் ஆண்டவனை யஹோவா அப்ராமிடம் 'நீ உன் நாட்டையும் நீ பிறந்த ஊரையும் தந்தையின் வீட்டையும் விட்டுக் கிளம்பி நான் காட்டும் தேசத்திற்குச்சென்றுவிடு' என்றும், 'நான் உன்னைக் கொண்டு ஒரு பெரிய சாதியை உருவாக்கப் போகின்றேன், உனக்கு என் முழு வாழ்த்துக்களும் உண்டு, உன் பெயரை நான் பெருமைப் படுத்தச் செய்கின்றேன். இவ்வுலகிலுள்ள மக்களினங்களும் உன்னிடம் ஆசி பெற்று பல்கிப் பெருகப் போகின்றன' என்று கூறியதாக எழுதப்பட்டுள்ளது. யஹோவாவின் இந்த வார்த்தைகளைக் கேட்ட அப்ராம் தன் மனைவியையும் லூத்தையும் உடனழைத்துக் கொண்டு தன்னிடமிருந்த செல்வங்களுடன் கனுன் தேசத்திற்குக் கிளம்பிச் சென்று அங்கேயே தங்கிவிட்டான்.

(விவிலியம் பழைய ஏற்பாடு—உற்பத்தி 12, 1—5)

அப்ராம் சேகேமில் குடியேறினுன். சேகேம் ஜெருசலத்திற்கு இருபத்தேழு மைல் வட திசையில் அமைந்துள்ள ஒரு ஊராகும். தற்சமயம் அதை 'பலாதா' என அழைக்கின்றனர். பிறகு அவன் அங்கிருந்து தெற்கு நோக்கிச் சென்று நேகேல் என்ற மலைப்பிரதேசத்தை அடைந்தான். அவன் சிலரை தனது புதிய சமயத்தில் சேர்த்துக் கொண்டான். கனுன் வாசிகள் அப்ராமை இப்ரீ என்றும் அழைத்

தனர், 'இப்ரு' என்பதற்கு தஜ்லா—பராத் நதிகளின் அக்கரையிலிருந்து வந்தவர்கள் எனப் பொருள்படும். இப்ரீயின் வழிவந்தவர்கள் இப்ரீஸ் எனப்பட்டனர். ஹீப்ரு என்ற சொல் இப்ரீஸ் என்பதின் சிதைவே. ஆனால் அப்ராம், மிஸ்ரா திரும்பவும் மிஸ்ரா நாட்டிற்கே போய்விட்டான். ஏனெனில் கானன் நாட்டில் பஞ்சம் வந்துவிட்டது. அந்த நாட்டின் அரசன் பரோகா என்பவன் அவனுக்குப் பொன்னும் பொருளும் கொடுத்து அவனை வழியனுப்பவும் அவன் நாகேவுக்குத் திரும்பினான். பிறகு அங்கிருந்து கிளம்பியவன் ஹேப்சோவின் அருகிலுள்ள மேமரே மைதானத்தில் போய் நிரந்தரமாகக் குடியேறினான்.

யஹோவா இங்கே அவனுக்குத் திரும்பவும் காட்சியளித்தார். அப்போது அவர், "நான் திரும்பவும் உன்முன் காட்சியளித்துள்ளேன். இந்நாட்டின் ஆட்சியை உனக்கு அளிக்கவேண்டும் என்று கருதியேதான் உன்னை கஸிதீயர்களின் உர் நகரிலிருந்து நீ வெளியேற்றப்பட்டுள்ளாய்" என்றார்.

யஹோவா அப்ராமிடம், "உனது வம்சம் வானத்தில் காணப்படும் விண்மீன்களைப்போல எண்ண முடியாத அளவு பெருகி வளரும். நீல நதியிலுருந்து பராத் நதி வரையில் உள்ள பரந்த நிலப்பகுதி பூராவும் நான் உனக்கு அளிக்கின்றேன். இனி நீ அப்ராம் என்று அல்லாமல் இப்ராஹீம் என்று அழைக்கப்படுவாய். எனது இந்த வாக்கைக் குறிக்கும் வகையில் நீ ஞான ஸ்நானம் செய்து உனது குடும்பத்தில் உள்ளோருக்கும் உன் அடிமைகளுக்கும் ஞானஸ்நானம் செய்து வை. இனி பிறக்கும் எல்லாக் குழந்தைகளுக்கும் பிறந்த எட்டாம் நாளன்று இந்தச் சடங்கு செய்விக்கவேண்டும்' என்று கூறி அருளினார். இப்ராஹீமின் மகன் இஸ்ஹாக் என அழைக்கப்பட்டான். இஸ்ஹாக்குக்கு ஏசாப், யாகூப் என்று பெயருள்ள இரட்டைக் குழந்தைகள்

பிறந்தன. யாகூப் இஸ்ராயில் என்று அழைக்கப்பட்டான். அவனுக்குப் பன்னிரெண்டு பிள்ளைகள் பிறந்தனர். மற்றவன் பெயர் யகூதா என்ற காரணத்திஞல் அந்த ஜாதிக்கு யூதர் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

யூசுப் எல்லோரையும் கவரும் வகையில் அழகான தோற்றப் பொலிவைப் பெற்றிருந்தான். அழகுடன், சிறந்த நடத்தை உள்ளவனுகவும் விளங்கிருன்; அவன் தந்தை அவனிடம் அளவுகடந்த பாசத்தைக் கொண்டிருந்தார். ஆனல் அவனிடம் பொருமை கொண்ட அவன் உடன் பிறந்தவர்கள் மிஸ்ரா நாட்டிற்குச் சென்று கொண்டிருந்த வணிகர் கூட்டத்தினரிடம் அவனை விற்று விட்டார்கள். ஆனல் வணிகர்களின் கூட்டத் தலைவனிடம் அவன் தன் சிறந்த பணிகள் மூலம் அவனைக் கவர்ந்து விட்டான். புனிதக் குரானில் குழாத்தின் தலைவனின் மனைவி அவன் அழகைக் கண்டு மயங்கிவிட்டாள் என்றும், அவன் உடன்பட மறுக்கவே அவள் அவனைச் சிறையில் அடைத்து விட்டாள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. யூசுப் சிறையில் கிடப்பது அரசன் தன் கனவில் கண்டு கொண்டான். உடனே அவனைச் சிறையிலிருந்து விடுவித்ததுடன், தன் மந்திரியாகவும் அவனை நியமித்துக் கொண்டான். யூசுப் அமைச்சஞன பிறகு பல ஆண்டுகள் மிசிரத்தில் ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். இஸ்ரேலிலிருந்து அங்கே வந்து குடியேறியவர்களுக்கு நிலங்கள் கொடுத்து ஆதரித்து வந்தான். ஆரம்ப காலத்தில் எழுபது நபர்களே அங்கு வந்து சேர்ந்தார்கள். ஆனல் நாளடைவில் அது ஏழு லட்சம் நபர்களாக உயர்ந்து விட்டது.

இஸ்ரேல் நாட்டினர் தாம் வாழ்ந்த மிசிர நாட்டிலாயினும் இப்ராஹிமையும், இஸ்ஹாக்கையும் யாகூப்பையுமே மதித்து போற்றி வந்தார்கள். அவர்கள் யஹோவாவை வழிபட்டு வந்தார்கள். இதஞல் மிச்ர நாட்டினருக்கு

அவர்களைப் பிடிக்கவேயில்லை. அவர்களை நம்பவும் மறுத்தார்கள். யூசுப்பிற்குப் பிறகு அவர்களிடம் மிகுந்த பிரியமும் செல்வாக்கும் மிக்கத் தலைவர்கள் யாருமே தோன்றவில்லை. நாட்டின் குடிமக்களுக்கு உள்ள உரிமைகள் எதுவுமின்றி அவர்கள் அங்கே அடிமைகளைப் போல் வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

பின் நீண்ட காலத்திற்குப் பிறகுதான் ஹஜரத் மூசா தோன்றினர். மிச்ரத்தில் வாழ்ந்து வந்த இஸ்ரேலியரின் பரிதாபகரமான நிலையை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை; அவர் யூத இனத்தைக் கை தூக்கிவிட்டு மீண்டும் தன் நாட்டிற்குத் அழைத் தேகினர்.

மூசாவுக்கு சினய் மலையில் யஹோவா தரிசனமளித்து பத்துப் புனிதக் கட்டளைகளைத் தந்தருளியதாகக் கூறப்படுகிறது. அந்தக் கட்டளைகளின் அடிப்படையிலே அவர் எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். மூசாவின் காலத்திற்குப் பிறகு பாலஸ்தீனத்தில் சிறிது காலததிற்கு இஸ்ரேலியரின் ஆட்சி நடந்தது. ஆனல் சமர்யா, ஜுடகா என்ற இராஜ்யங்கள் அதிக காலம் நிலைக்கவில்லை. நீண்ட நாட்கள் வரை ஒரே சண்டையும், குழப்பமாகவும் இருந்து வந்தது. இதனல் யூதர்கள் தனித் தனியே பிரிந்து போய் உலகின் பல பகுதிகளிலும் வசிக்கலானர்கள்.

யூதர்கள் பல நாடுகளிலும் போய்ப் பரவினர்கள். அவர்கள் பட்ட கஷ்டங்களுக்கும், அவர்களுக்கு இழைக்கப் பட்ட கொடுமைகளுக்கும் அளவில்லை. ஆயினும் பல நாடுகளிலும் சிதறிப் போயிருந்த போதிலும் அவர்கள் தம் மதத்தை விடவில்லை. அவர்கள் மொழிவேறு பழக்க வழக்கங்கள் வேறு, அனைத்து விவகாரங்களும் வேறு. ஆனாலும் யயோஹாவாவிடம் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை மட்டும் சிறிதும் தளரவில்லை; இப்போது எவ்வளவு கஷ்டங்

களுக்கு ஆளாகியிருந்த போதிலும் எப்படியும் ஒருநாள் யஹோவா தோன்றி தம்மைக் கடைத் தேற்றுவார். தமது நாடான பாலஸ்தீனில் தாம் மீண்டும் போய் வாழ முடியும் என்பதில் அவர்களுக்கு மிகுந்த நம்பிக்கை. தாய் நாட்டிற்குச் சென்று வாழும் ஆசை யூதர்களின் மனதில் சிறிது சிறிதாக வளர்ந்து வரலாயிற்று. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இது ஒரு பெரிய இயக்கத்தின் உருப்பெற்று வெற்றியும் அடைந்தது. 1948 மே மாதம் 15-ம் நாள் யூதர்களின் புதிய நாடு உருப்பெற்று இஸ்ராயில் என்ற பெயரும் அளிக்கப்பட்டது. இஸ்ராயில் நாட்டின் சமயம் யூதமாய் இருந்த போதிலும் அங்கே சில முஸ்லீம்களும் கிருஸ்துவர்களும் கூட இப்போது வசித்து வருகின்றனர்.

"புனித நூல்கள்"

விவிலியத்தின் பழைய ஏற்பாடே (Old Testament) யூதர்களின் ஆதி சமய நூலாகும். அதற்கு தோரா, நபீ, நவிஷ்தே என்ற மூன்று பகுதிகள் உண்டு. தோராவில் பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து அத்தியாயங்கள் அடங்கியிருக்கின்றன. அவை உற்பத்தி (Genesis) வெளியேற்றம் (Exodus), லேவ்ய வியவஸ்தை (Levitious) இலக்கம் (Numbers) வியவஸ்தா விவரணம் (Deuteronomy) என்பவை. இதில் சினய் மலைமீது யஹோவா மூசாவுக்கு அளித்த கட்டளைகள் பத்து அல்லாமல், மேலும் அறுநூறு கட்டளைகள் அடங்கியிருக்கின்றன. இதில் உணவு, சமய விழாக்கள், விரதங்கள், உற்சவங்கள், குற்றங்கள், அவற்றிற்கான தண்டனைகள் முதலிய பல்வேறு விஷயங்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. நபியிலோ பண்டைய நபிகளான யகோசு, நயாயி, சாமுவேல் ஆகியோருடையவையும், அரசர்களுடையவுமான நூல்கள் இடம் பெற்றுள்ளன. யசாயாக், யர்மியாக், யகேஜகேல் ஆகியோர் பிற்காலத்திய நபிகள். இவர்களல்லாமல் ஹோசே, யோயேல், ஆமோஸ் ஒபத்யாஹ், ஈனு, மீகா, நஹூம், இபக்கூக், சபன்யாஹ்,

ஹாக்கை, ஜகர்யாஹ், மலாகி என்ற பன்னிரெண்டு சிறு நபிகளும் உண்டு.

இந்த நபிகள் எல்லோரும் தமது போதனைகள் மூலம் யூத சமூகத்திற்கு உயிரும் ஊக்கமும் அளித்துள்ளனர். விவிலியத்தின் இப்பகுதியில் அடங்கியிருப்பவை இவர்களது புனித போதனைகளே.

நவிஷ்தேயில் பழைய விவிலியத்தின் எஞ்சிய பாடல்கள், நீதிமொழிகள், அயூப், ரூத், சபோபதேசகர், தானியஹ், அஜ்ரா, கஹேம்யால் ஆகியோரின் நூல்கள் அடங்கியுள்ளன.

தோரா, நபீ, நவிஷ்தே ஆகியவை அல்லாமல் யூதசமயத்தில் தால் முத் என்ற நூலும் பெரிதும் போற்றப்படுகிறது. இதில் சமயத்தின் விதிமுறைகள் அனுஷ்டானம் ஆகியவை விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. விவிலிய நூலுக்குஅடுத்தபடியாக தால்மூதே மிகவும் சிறப்பாகப்போற்றப்படுகிறது. யூதர் சமூகத்தின் முன்காலப்போக்கில் அவ்வப்போது எழுந்த பிரச்சினைகளும் அவற்றைத் தீர்ப்பதற்கு எடுக்கப்பட்ட நடவடிக்கைகளும் தால்முதில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இந்த நடவடிக்கைகள் தலைமுறை தலைமுறையாக வாய்மொழியாகவே அளிக்கப்பட்டு வந்து சமயத் தலைவர்களும் ரப்பிகளும் இவைகளின் அடிப்படையில் தீர்ப்புக்கள் வழங்கி வந்திருக்கின்றனர்.

யூத சமயத்தில் மூன்று பிரிவுகள் உள்ளன. அவை வைதீகப் பிரிவு, தாராளப் பிரிவு, சீர்திருத்தப் பிரிவு என மூன்று வகைப்படும், பிற மதங்களைப் போலவே யூத மதத்திலும் பலவிதமான ஆசார மற்றும் நடைமுறைகள் இருந்து வருவதைக் காணலாம். வைதீகப்பிரிவைச் சேர்ந்த யூதர்கள் அவைகளினின்று சிறிதும் வழுவாது நடக்கின்றார்கள். உணவிலும் சாபத் முதலிய அனைத்து விஷயங்களி

லும் அவர்கள் மிகவும் கண்டிப்பானவர்கள். தாராளக்காரர் களோ அவ்வளவு பிடிவாதம் காட்டாவிட்டாலும் தோரா வைப் பெரிதும் கொண்டாடுகின்றனர். சீர்திருத்தக்காரர் கள் தோராவைத் தவருமல் படித்தாலும் அதில் காணப் படும் ஒவ்வொன்றையும் தம் அறிவு அனுபவம் என்ற உரை கல்லில் உரைத்துப் பார்த்த பின்னரே ஏற் கிறார்கள்.

யூத மதத்தின் சாரம் :—

யூத சமயம், கடவுள் ஒருவரே; அவரிடம் பக்தி செலுத்த வேண்டுமாஞல் மனிதனை நேசி; தம் சகோதர மக்களிடம் அன்பாக இரு; இந்த அன்பு மன மொழி மெய் மூன்றின் மூலமும் செலுத்தப்படல் வேண்டும். என் கின்றது.

அநியாயம் செய்யாதே: பிறரைச் சுரண்டவேண்டாம். வட்டி வாங்காதே; இலாபத்தில் கருத்தைச் செலுத்தாதே; எவரையும் துன்புறுத்தாதே; விவசாயம் செய். அடிமை களை விடுவித்து விடு. நன்னடத்தையில் கவனமாய் இரு. உடலால் உழை: பேராசை வேண்டாம்;" என்ற இவை களையே யஹோவாவின் கட்டளைகள். யஹோவாவை மகிழ் விப்பதற்குள்ள வழிகள் அன்பும் கருணையும் சத்தியமும் கள்ளாமையும் பிரும்மச்சரியமும் உடலுழைப்பும் விவசாய மும் துன்புற்றோருக்கு உதவுதலும், அனாதைகள், கைம் பெண்கள் ஆகியோரின் துயரைக்க முயலுதலும், நன்னடத் தையும், வாழ்க்கைத் தூய்மையுமே ஆகும்.

யஹோவா பெருமான் அளித்த கட்டளைகளை தோராவில் படித்து, நபிகளின் போதல்களில் கருத்தைச் செலுத்தி, தவிஸ்தேயில் கூறப்பட்டுள்ளவைகளை ஆழ்ந்து ஆராய்வோ மாஞல் நமக்கு யூத சமயத்தின் சாரம் மேற் சொன்னவாறு கூறப்பட்டுள்ளது நன்கு தெளிவாகத் தெரியும்.

"யூதர்களின் நம்பிக்கைகள்"

கடவுள் உயிரையும் உலகத்தையும் படைப்பவர். கடவுள் ஒருவரே.

கடவுள் அன்பு மயமானவர்.

கடவுள் எங்கும் இருப்பவர்.

கடவுள் நமக்கு வெகு அண்மையில் இருப்பவர்.

கடவுள் வெகு வெகு தொலைப்பில் இருப்பவர்.

கடவுள் இருளைப் போன்று இரகசியமானவர்.

கடவுள் சூரிய ஒளியைப் போன்று தெளிவானவர்.

கடவுள் நற்செயல்களையும் அன்பையும், கருணையும் கண்டு அனைவருடனும் இனிமையாக, அன்பாக பழகுகின்ற வர்களிடமும் மகிழ்ச்சி கொள்கின்றார். கடவுளின் பெயர் யஹோவா என்பது. இவையே இம்மதத்தின் அடிப்படை நம்பிக்கைகளாகும்.

மஹான் மூசா:—

ஏசுநாதர் அவதரிப்பதற்கு 1500 ஆண்டுகளுக்கு முன் மூசா ஒரு யூத குடும்பத்தில் தோன்றினார். அமராம் என்பது அவரின் தந்தையின் பெயர். யோதேபேத் என்பது அவரது தாயின் பெயர். அவருக்கு மரியம் என்ற சகோதரி ஒருவள் இருந்தாள். மிசிர தேசத்தின் அரசு அங்கே பிறக்கும் யூதர் குழந்தைகளெல்லாம் நீல நதியில் எறியப்பட்டு விட வேண்டுமென்று உத்திரவிட்டிருந்தது. இதற்குக் காரணம் யாரோ ஒரு சோதிடன் இஸ்ரேலி ஒருவனால் மிசிர நாடே அழியவிருக்கிறது என்று கூறியிருந்ததாகும். அது முதல் இந்த உத்திரவு அமலுக்கு வந்து விட்டது. அரச குமாரி யான பிடியாஹூக்கு குஷ்ட நோய் ஏற்பட்டு விட்டது. அவள் தினமும் நீல நதியில் நீராடி வருவாள். ஒருநாள்

குளித்துக்கொண்டிருக்கையில் நீரில்மிதந்து வரும்குழந்தை மூசாவைக்கண்டாள். அதைவிட மனமின்றி எடுத்து அரண் மனைக்கு கொண்டு வந்து பால்கொடுத்து வளர்க்கும்படி ஒரு தாதியிடம் ஒப்புவித்தாள். அந்த தாதி மூசாவைப் பெற்ற தாயாகாவ இருந்தது உண்மையிலேயே தெய்வீகச் செயலாகும். மூசா அரண்மனையிலேயே வளர்ந்து பெரிய வனுன்: அவனுக்கு நல்ல முறையில் கல்வி அளிக்கப் பட்டது.

மூசா பெரியவனுகி அரண்மனைக்கு வெளியே சென்று பார்த்தபோது அவனுக்கு மிசிரிகள் யூதர்களை மிகவும் துன்புறுத்துவது தெரிந்தது. கோசேனுக்குச் சென்ற போதுதான் மரியமுக்கு நேர்ந்ததைப் போன்ற கொடுமைச் செயல்கள், இன்னும் பலவிடங்களிலும் மிக அதிகமான கொடுமைச் செயல்கள் இழைக்கப் படுவதை அறிந்தான். ஒரு சமயம் ஒரு மிசிறி ஒரு யூதனை மிகவும் மோசமாய் சவுக்கினுல் அடிப்பதை தன் கண்ணுல் கண்டான். அக் கொடுமையைக் காண முடியாமல் மூசா அந்தச் சவுக்கைப் பிடுங்கி அதனுலேயே அந்த மிசிரியை அடித்த அடியில் அவன் விழுந்து இறந்து விட்டான். உடனே மூசா அவனை அங்கேயே மணலில் குழி தோண்டிப் புதைத்துவிட்டு நடந் ததை வெளியில் கூருமல் இருந்து விட்டான்.

மூசாவுக்கு இத்தகைய கொடுமைகளைக் காண பொறுக்க வில்லை. இதனுல் நாற்பதாம் வயதில் அவர் அரசு பதவி யையும், போகத்தையும் உதறி விட்டு வெளியே கிளம்பி விட்டார். மித்தானின் யாஜகனுன ஏத்ரோ என்பவன் தன் மகள் சிப்போராஹுடன் மூசாவுக்குத் திருமணம் செய்து வைத்தான். பின் நாற்பது ஆண்டுகள் அவர் தன் மாமனுர் வீட்டிலேயே ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார்.

ஒருநாள் மூசா ஹோரேவ் மலையின் அடிவாரத்தில் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த போது கீழ் கண்ட

அசரீரி வாக்கு கேட்டது. "இஸ்ரைலிகள் மிசிர தேசத்தில் அடிமைகளாக மிகுந்த துன்பத்திற்கு உள்ளாகிக், கொண் டுள்ளனர். நீ அவர்களை இங்கிருந்து அந்த நாட்டிற்கு அழைத்துச்செல். அந்த தேசத்தைக் கொடுப்பதாக நான் உன் மூதாதையர்களுக்கு வாக்களித் திருக்கின்றேன்" இதைக் கேட்டதும் மூசா அந்தக் குரல் வந்த திக்கை நோக்கி "யார் நீங்கள்?" எனக் கேட்டார். "ஏஹே அசேர் ஏ ஹே" என்று பதில் கிடைத்தது. யஹோவா எனப்படு வது இந்த அதுவே நான் என்பதுதான். எங்கும் நிறைந்த பரம்பொருளே யஹோவா.

ஆகவே யஹோவாவின் கட்டளைப்படி நடக்க மூசா தயாராகி விட்டார். மிசிர நாட்டின் அரசனை பரோஹா அவருக்கு, ஏராளமான துன்பங்களைக் கொடுத்தார். ஆயினும் அவனால் மூசாவின் வெற்றியை சிறிதும் தடுக்க வில்லை. இறுதியில் தாம் மிசிர நாட்டிலிருந்து வெளியேறி விடுவது என்ற யூதர்களின் தீர்மானத்தை அரசன் ஏற்றுக் கொண்டான். மூசா ஒரு துளி இரத்தம் கூடச் சிந்தாமல் ஒரு பெரும் புரட்சியை நடத்தி விட்டார். அவர் முப்பத் தைந்து லட்சம் மக்களை அழைத்துக் கொண்டு மிசிரத்தி லிருந்து பிலஸ்தீனத்திற்குக் கிளம்பினர்.

வழியில் எத்தனையோ துன்பங்கள் ஏற்பட்ட போதிலும் ஆண்டவனின் ஆதரவு இருந்தமையால் அவர்கள் அனைத் திற்கும் தப்பி பாலஸ்தீனம் சென்றடைந்தார்கள். மூசாவின் எண்ணமும் நன்கு நிறைவேறி விட்டது.

"பத்துக் கட்டளைகள்"

மிசிரத்திலிருந்து கிளம்பிய மூன்றும் மாதத்தில் அவரைச் சேர்ந்தவர்களும் சினய் மலையின் அடியில் யாத்ரா மார்க்கத்தில் முகாம் அமைத்திருந்தார்கள். அந்த மலையின் மீதுதான் அவருக்கு யஹோவாவின் புனித வாக்கைக்

கேட்கும் பாக்கியம் கிடைத்தது. யஹோவா அவருக்கு பத்துக் கட்டளைகள் அளித்தார். அந்தக் கட்டளைகளில் அடங்கியுள்ள பத்து உபதேசங்களே யூத மதத்தின் அடிப் படைத் தத்துவங்களாக அமைந்துள்ளன. இவற்றில் யஹோவாவே பரம் பொருள்; அவரைத் தவிர வேறு எவரையும் வழிபடாதே. அவரின் திருப்பெயரை அர்த்த மில்லாமல் காரணமின்றி இழுக்காதே. வாரத்தில் ஆறு நாட்கள் உழைப்பது என்றும் ஒரு நாள் ஓய்வு எடுத்துக் கொள்வது என்றும், பெற்ற தாய் தத்தையரை மதித்து நடக்க வேண்டும் என்றும், பிற உயிர்களைக் கொல்லக் கூடாது என்றும், பிறர் மனைவியரை அடைய விரும்பக் கூடாது என்றும், திருடக் கூடாது என்றும், பொய் சாட்சி கூறக் கூடாது என்றும், பிறர் பொருளையும், மனைவியையும், அடிமைகளையும், ஆடு மாடு போன்ற பிராணிகளையும் துன்புறுத்தக் கூடாது என்றும் கூறப்பட்டுள்ளது.

மூசாவின் கட்டளைப்படி மக்கள் வாழ்க்கைக்கும் நாட்டின் ஆட்சிக்கும் பல்வேறு விதமான விதி முறைகளை வகுத்தார். இதன் பிறகு அவர் போர் முனைக்குச் செல்லத் தகுதி வாய்ந்த இளைஞர்களை கணக்கு எடுத்தார். அது சமயம் ஆறு லெட்சத்திற்கும் அதிகமான வீர இளைஞர்கள் தன் இனத்திலிருப்பது தெரிந்தது. பிறகு எல்லைப் புறங்களிலும் நாட்டின் நெடுஞ்சாலைகளில் அனைவரும் பயமின்றி சென்று வருவதற்கும் காவல் அமைத்தார். போர்கள் நடத்தியபடியே மூசா முன்னே சென்று கொண்டிருந்தார். மித்யானிகளை வெற்றி கொண்டபின் கனை நாட்டைப் பிடித்து தன் வயமாக்கினர். அதற்கு வெளியே அகதிகளுக்கென ஆறு நகரங்கள் அமைக்குமாறு கட்டளையிட்டார். இவ்வாறு நாற்பது ஆண்டுகள் இந்தப் போர்கள் நடை பெற்றது. விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் மூசாவின் போதனைகள் பொதிந்துள்ளன. அவர் 120 ஆண்டுகள் வாழ்ந்திருந் தார். அவர் அனைவருக்கும் தம் ஆசியை வழங்கிய பின

விடை பெற்றுக் கொண்டார். அப்போது கீழ் கண்ட அருள் உரைகளைக் கூறினார்.

“நான் யஹோவாவின் பெயரை விளங்க வைக்க வந்தவன். அந்தப் பரம் பொருள் பெரியவற்றுள்ளெல்லாம் பெரியது. முழுமையானது. நியாயத்தினின்று சிறிதும் வழுவாதது. அதுவே சத்தியம். அதுவே உங்கள் தந்தை. உம்மையெல்லாம் படைத்தது அதுவே. அது நீதி வழங்கக் கூடியது. தம் அடியார் மீது கருணை பாலிக்கும்; அதற்கு இணையானது எதுவுமே கிடையாது. கொல்வதும் பிழைப்பதும் எல்லாமே அதுதான். அது இறுதியற்றது. அதையே வழிபடுவீர். ஆமன்”

“தோரா”

மூஸா இஸ்ரேல் மக்களின் முன் யஹோவாவின் பின் வரும் கீதத்தைப் பாடினார்.

ஏ வானமே, ஏ புவியே நான் கூறுபவற்றை காது கொடுத்துக் கேளுங்கள்.

நான் யஹோவாவின் திருநாமத்தை எங்கும் பரப்பப் போகின்றேன். நீங்கள் பரமேஸ்வரனின் (ஆண்டவனின்) மகிமையை ஒப்புக் கொள்ளுங்கள்.

அவர் பாறை போன்றவர். அவரது செயல்கள் அசைக்க முடியாதவை.

அவர் வழிகள் யாவும் நியாயமானவை.

அவர் உண்மையான ஆண்டவன்.

அவரிடம் குறுக்கு வழிகள் எதுவும் இல்லை.

அவர் தர்மாத்மா—நேர்மையானவர்.

(வியவஸ்தா விவரணம் 32, 1—4)

இனி யூத மதத்தில் கூறப்பட்டுள்ள சில முக்யமான கொள்கைகளைக் காண்போம்.

1. "நீ எவரிடமும் பகைமை பாராட்டாதே, எவரையும் உன் விரோதியாகக் கருதாதே."

(லேவ்ய வியவஸ்தை 19, 17.)

2. அந்நிய நாட்டார் ஒருவர் உன்னிடம் வந்து தங்கிஞல் அவருக்கு நீ துன்பம் அளிக்காதே. உன்னுடன் இருக்கும் அந்நிய நாட்டவரை நீ உன் நாட்டவராகவே கருது. அவரையும் தன்னைப் போலவே நினைத்து அன்பு செலுத்து.

(லேவ்ய வியவஸ்தை 19, 33, 34.)

3. பிராணிகளிடம் அன்பு காட்டு

உன் பகைவன் ஒருவனுடைய எருதோ கழுதையோ வழி தவறி வந்து திரிந்துகொண்டிருப்பதை நீ கண்டால் அதை ஓட்டிப்போய் அதன் உரிமையாளனிடம் சேர்க்கத் தவருதே. உன் பகைவன் ஒருவனுடைய கழுதையின் முதுகில் அதனுல் தூக்க முடியாத அளவு சுமை ஏற்றப்பட்டு, அது தள்ளாடி தவிப்பதை கண்டால் அது பகைவனுடையது என்ற காரணத்திஞல் அதற்குதவ உனக்கு மனம் வராவிட்டாலும் நீ அதன் சுமையைக் குறைப்பதில் ஒரு கை கொடுத்து உதவு.

(வெளியேற்றம் 23, 4—5.)

நீ பிறரைப் பறிக்கவோ, பிறருக்கு அந்யாயம் இழைக்கவோ வேண்டாம். (லேவ்ய வியஸ்தை 19, 13.)

"பிறர் மனைவியை விரும்பாதே"

"பிறர் மனைவியுடன் சேராதே—விபசாரம் செய்யாதே. தன் நெருங்கிய உறவினர் எவருடனும் இந்த இழிவான செயலைச் செய்ய வேண்டாம்.

இலஞ்சம் :—

இலஞ்சம் வாங்காதே. ஏனெனில் லஞ்சம் கெ வாங்கப்படுவதைப் பார்ப்பவர் கண்ணும் குருடாகி, தர்மாத்மாவின் சொல்லையும் புரட்டிவிடுகிறது.

(வெளியேற்றம் 23, 8)

**நிலத்தை விற்க வேண்டாம் :—**

**நிலம் என்னுடையதாகையால் அதை எவரும் பிறர் எவருக்கும் விற்கவே கூடாது. (லேவ்ய விவஸ்தை 25, 23.)**

**"சாபம்" :—**

**தன் தாய் தந்தையரை அலட்சியம் செய்பவன் அழிவான். அவன் அழிவுக்கு எல்லோரும் 'ஆமன்' சொல்லி ஒப்பமளிப்பார்கள்.**

பரதேசிகளுக்கும், அநாதைகளுக்கும், கைம்பெண்களுக்கும் நியாயம் கிடைக்காது. செய்பவன் அழிவான். எல்லாரும் 'ஆமன்' கூறி அதை ஒத்துக் கொள்ளுவார்கள். கண் தெரியாது தவிக்கும் குருடனுக்கு வழி காட்டாது அவனைப் பள்ளத்தில் விழச் செய்பவன் அழிவான். அழியட்டும் என்று சொல்லி எல்லோரும் அதை ஆதரிப்பார்கள். மறைந்திருந்து ஒருவனைக் கொல்பவன் அழிந்துபடுவான். அவன் அழிவதே சரி. 'ஆமன்' என்று கூறி எல்லோரும் அதை ஆதரிப்பார்கள். நிரபராதி ஒருவனைக் கொலை செய்வதற்காக கைக்கூலி வாங்குபவன் அழிவான். அவன் அழிவதே சரி என்று எல்லோரும் அதை ஒத்துக் கொள்வார்கள். தீய காரியங்கள் செய்பவன் அழிவான். அவன் அழிவதே நியாயம் என்று 'ஆமன்' கூறி எல்லோரும் ஒப்பம் அளிப்பார்கள். (வியவஸ்தா விவரணம் 27, 16—25.)

பழுத்துக் குலுங்கும் பழங்கள்

உன் தோட்டத்தின் மரத்தை ஒரு முறை உலுக்குவதுடன் நிறுத்திக் கொள். மரத்தில் எஞ்சியுள்ள பழங்கள் பரதேசிகளுக்கும், அநாதைகளுக்கும், விதவைகளுக்கும் பயன் படட்டும். நீ திராட்சைத் தோட்டத்தில் "உன் பங்குக்கு உள்ளதைப் பறித்து வருகையில் ஒரு பழத்தைக்கூட விடாமல் பறித்து வந்துவிடாதே. பரதேசிகளுக்கும், அநாதை

களுக்கும், கைம்பெண்களுக்கும் சில பழங்களை விட்டுவா.''
(வியவஸ்தா விவரணம் 24, 19—21.)

''பத்தில் ஒரு பங்கு''

''நிலத்தின் விளைச்சலில்—அது தானியமாயினும், மரத்தில் பழுத்த பழமாயினும், பத்தில் ஒரு பகுதியை யஹோவாவுக்காக என்று நிறுத்தி வை. அது தெய்வத்தினுடையது. நீ அதைத் தொடவே கூடாது.''

(லேவ்ய வியவஸ்தை 27, 30 )

''ஐம்பதாம் ஆண்டு''

ஓய்வு ஆண்டுகள் ஏழு கழிந்ததை அடுத்து வரும் ஐம்பதாம் ஆண்டை நீ புனிதமான ஆண்டு எனக் கருது. நாட்டின் மக்கள் அனைவரிடையிலும் விடுதலைக் கருத்தைப்பரப்பு. அந்த ஆண்டை உங்கள் நாட்டின் பொன்விழா ஆண்டாக கொண்டாடப்படும். அதில் நீங்கள் எல்லோரும் சொந்த நிலத்திற்கும் சொந்த வீட்டிற்கும் திரும்பிவருவீர்கள். அவ்வாண்டில் நீங்கள் உங்கள் நிலங்களில் எதையும் விதைக்கவும் வேண்டாம்; தானே விளைவதை அறுக்கவும் வேண்டாம். நிலத்தை விற்கவும் வேண்டாம். ஏற்கெனவே விற்ற நிலங்கள் இந்தப் பொன்விழா வரையில் வாங்கியவர் வசமே இருக்கட்டும். அவ்வாண்டிலிருந்து நிலம் வாங்கியவர் கையிலிருந்து விற்றவர் கைக்கு மாற்றப்படட்டும்.

(லேவ்ய வியவஸ்தை 25, 3—28.)

''தாராள மனது''

உன்னைச் சேர்ந்தவர்கள், உன் உற்றார் உறவினர் ஆகியோரில் ஒருவர் மிகவும் ஏழையாக இருந்தால் நீ அவர் விஷயத்தில் உன் உள்ளத்தைக் கல்லாக்கவோ, கையைச் சுருக்கவோ செய்யாமல் அவரிடம் இல்லாதவைகளை தேவை

யான அளவில் தாராளமாகக் கொடு. விடுதலை ஆண்டு நெருங்கி வருவதைக் கருதி எதுவும் அளிக்கத்தேவையில்லை என்று இருந்துவிடாதே. நீ தாராள மனதுடன் சிறிதும் முகம் சுளிக்காமல் வழங்கினால் தான் உனக்கு யஹோவாவின் ஆசி கிட்டும். (வியவஸ்தா விவரணம் 15, 7—10.)

நீ அடிமை ஒருவனை விலைக்கு வாங்கியிருந்தால் அவன் உன்னிடம் ஆறு ஆண்டுகள் இருந்து வேலை செய்யட்டும். ஏழாம் ஆண்டு பிறந்ததும் அவனை விடுவித்து அனுப்பி விடு. (வெளியேற்றம் 21, 2—3.)

அவன் மட்டும் உன்னிடம் இருந்தால் அவனை விடுவி. மனைவியுடன் அடிமைப்பட்டிருந்தால் கணவன் மனைவி இரு வரையுமே விடுவித்து அனுப்பிவிடு.

நீ உன்னிடம் இருந்த அடிமையை விடுவித்து அனுப் பும்போது அவனை வெறுங்கையுடன் போகச் சொல்லாதே. உன்னிடம் உள்ள ஆடு மாடுகள், உன் வீட்டிலுள்ள உணவு தானியம், திராட்சை ரசம் முதலியவற்றையும் கொடுத் தனுப்பு. உன் ஆண்டவனை யஹோவா உனக்கு வழங்கி யுள்ளதிற்கு ஏற்ப நீயும் அவனுக்கு உன்னால் இயன்றதைக் கொடு. (வியவஸ்தா விவரணம் 15—14.)

"தரிசு நிலம்"

நீ உன் நிலத்தில் ஆறு ஆண்டுகளுக்குத் தொடர்ந்து பயிர் செய்து தானியம் விளைவிக்கலாம். ஆனால் ஏழாம் ஆண்டில் அதை தரிசாகப் போட்டு வைக்க வேண்டும்.

நீ நிலத்தைப் பயிர் செய்யாமல் தரிசாகப் போட்டால் உனது எளிய உற்றார் உறவினர் அதிலிருந்து கிடைப்பதை பெற்று மகிழ்வார்கள். அவர்களுக்குப் போக எஞ்சுவதை ஆடு மாடுகளும் பறவைகளும் பொறுக்கித் தின்னும். நீ உன்னிடமுள்ள திராட்சை ரசத்தையும் பிற உணவுப்பண்

டங்களையும்கூட இதேவகையில் பிறருக்கும் அளித்து நீயும் உண்ணு. (வெளியேற்றம் 23, 10—11.)

''எல்லாவற்றையும் எடுக்காதே''

நீ தானியம் முற்றிய வயலை அறுத்து வீட்டில் கொணர்ந்து சேர்க்கையில் ஒரு முதல் அரிவாளுக்குத் தப்பி யிருந்துவிட்டால், நீ அதையும் அறுப்பதற்காக திரும்ப வய லுக்கு ஓடாதே. பரதேசிகள், அனாதைகள், விதவைகள் முதலியோர் அறுத்துக் கொண்டு போகட்டும் என்று விட்டு வந்தால் உனது எல்லா முயற்சிகளுக்கும் யஹோவாவின் நல்லாசி கிடைக்கும்.

''எடை''

உன் பையில் சிறிதும் பெரிதுமாகப் பலவகைப் படிக்கற் கள் வைத்திராதே. உன் வீட்டிலும் பெரிதும் சிறிதுமான படிகள், மரக்கால்கள் வைத்திருக்க வேண்டாம். உன்னிட முள்ள எல்லாப் படிக்கற்களும் அளவில் சிறிதும் குறையா மல் இருக்கட்டும். இம்மாதிரியான காரியங்களில் தவறு செய்கின்றவர்களை யஹோவா மிகவும் வெறுக்கின்றார்.

''பாவத்தால் பெறப்படும் பணம்''

எந்த ஆடவனும் சரி, பெண்ணும் சரி, தவறான காரியம் எதுவும் செய்யக் கூடாது. விபசாரம் செய்து பெற்ற பணத் தையும், நாயை விற்றுப் பெற்ற பணத்தையும் வீட்டிற்குக் கொண்டு வராதே. இந்த இரு வருமானங்களையும் யஹோவா மிகவும் வெறுக்கத் தக்கவை என்று எண்ணு கின்றார்.

''எருதுகள் வரிசையாகப் பூட்டி போர் அடிக்கும்போது வைக்கோலையும், அதிலுள்ள ஒரு சில நெல் மணிகளையும் அவை தின்னாமல் இருப்பதற்காக அவற்றின் வாயைக் கட்டாதே.''

"நபீ"

"சன்மார்க்கத்தில் செல்"

ஆண்டவனுன யஹோவா, 'கொடுமைகளை நிறுத்து: அநீதிகளை ஒழி: நியாயமான தர்மத்திற்கு ஒத்ததுமான செயல்களையே செய். உன்னிடமுள்ள தராசு சரியாகவும் படிக்கல்கள் எடை குறையாமலும் இருக்கட்டும்' என்று கூறுகின்றார். (யஹேஜகேல் 45, 9–12)

"கள்—சாராயம்"

குடி வெறியில் திமிர் தண்டமாய் இருக்கும் முடி அரசனும் இழிவுறுவான்; அவனை எவரும் மதிக்க மாட்டார்கள். (யசாயாஹ் 28, 1)

கள் உள்ளே சென்றதும் அது மனிதனை தள்ளாடச் செய்து விடுகிறது. குடித்தவர்களால்—அவர்கள் எவ்வளவு பெரியவர்களானாலும், நபீயாகவே இருப்பினும்—தன் காலை ஊன்றி நிற்க முடிவதில்லை: அவர்கள் குடித்த கள்ளே அவர்களைக் குடித்து விடுகின்றது. குடித்தவர்கள் படித்தவர்களாக இருந்தும் வழி தவறிப் போய், நியாயம் அநியாயம் தெரியாமல் இருக்கின்றார்கள். அவர்கள் உண்ணும் உணவு, உடுத்தியுள்ள ஆடை எல்லாமே கோழை விழுந்தும், புழுதியில் புரண்டும் கெடுகின்றது. அவர்கள் இருக்கும் இடமெல்லாம் ஒரே அழுக்கும் ஆபாசமும்தான். இப்படி இருப்பவர்கள் யாருக்கு என்ன அறிவைப் புகட்டிவிட முடியும். (யசாயாஹ் 28, 7—9)

"ஆன்மா"

கழிவிரக்கம் கொள்; நீ இதுவரை செய்துள்ள குற்றங்களை இனியும் செய்து கொண்டிராதே. அப்போதுதான் உன் குற்றங்கள் நீ இடறி விழுவதற்கு காரணமாய் இருக்க

மாட்டா. உன்னிடமுள்ள குணங்களையெல்லாம் போக்கி விட்டு உன் மனத்தையும் ஆன்மாவையும் தூயதாக்கிக் கொள்'' (யஹேஜகேல் 18 30—31)

''நவிஷ்தே''

யஹோவாவுக்குப் பிடிக்காதவைகள்:

தற்பெருமை காரணமாக கர்வம் தலைக்கேறி விட்டமையால் மேலே ஏறியுள்ள நெற்றிப் புருவங்கள்.

பொய்ச் சான்று கூறும் காட்சி.

பொய் பேசும் நாவு.

நிரபராதியைக் கொன்ற கை.

ஆகாயக் கோட்டைகள் கட்டும் மனம்.

அண்ணன் தம்பிகளின் ஒற்றுமையைக் குலைக்கும் மனிதன். (நீதிவாக்யம் 6, 16–19)

நல்லது செய்தால்...........

தாராளமான மனமுள்ள மனிதன் உடல் கொழு கொழு வென்றிருக்கும்.

பிறர் வயலுக்கு நாம் நீர் பாய்ச்சினால் நம் வயலுக்கு தானே பாய்ந்து விடும்.

வீட்டில் உணவு தான்யத்தை சேமித்து வைப்பவனை எல்லோரும் திட்டுகின்றார்கள்,

தனக்குப் போக எஞ்சியதை விற்பவனையோ வாழ்த்து கின்றனர்.

முயன்று பிறருக்கு நன்மை செய்பவனைக் கண்டு அனைவரும் மகிழ்கின்றார்கள்.

பிறருக்குத் தீங்கு செய்வதிலேயே கருத்தாயிருப்பவன் அழிந்து போகின்றான். (நீதிவாக்கியம் 11, 25-27)

பகைவனுக்கு.........

உன் பகைவன் பசியினால் வருந்தினால் அவனுக்கு உணவு அளி. அவன் தாகத்தினால் தவித்தால் குடிக்கத் தண்ணீர் கொடு. இவ்வாறெல்லாம் செய்கையில் அவனுக்குத் தலையில் நெருப்பைக் கொட்டியது போலிருக்கும். யஹோவா இதற்குத் தக்க பயனை உனக்களிப்பார்.

(நீதிவாக்யம் 25, 21-22.)

திராட்சை ரசம் :—

சண்டை சச்சரவுகளில் சிக்குகின்றவர்கள் யார்?

அர்த்தமின்றி உளறிக் கொண்டிருப்பவர்கள் யார்?

காரணமின்றி யாரின் உடல் காயமாகிறது?

யார் கண்கள் சிவந்து போகின்றன?

தெரியாதா? திராட்சையிலிருந்து எடுத்த சாராயத்தை ஓயாது குடிப்பவர்கள்தான். சாராயம் பார்ப்பதற்கு செக்க செவேரென்று இருக்கிறது.

கிண்ணத்தில் ஊற்றிப் பார்க்கையில் அதன் நிறம் ரம்மியமாய் இருக்கிறது.

புட்டியிலிருந்து கிண்ணத்தில் ஊற்றுகையிலோ அதன் அழகைச் சொல்லவே வேண்டாம்.

ஆனால் இதையெல்லாம் பார்த்து சந்தோஷப்படாதே.

ஏனெனில் இறுதியில் அது நாகப் பாம்பைப் போலும் கரு நாகத்தைப் போலும் தீண்டித் தொலைத்துவிடுகிறது.

(நீதிவாக்யம் 24 29—32.)

உழைப்பு :—

வேலைக்குச் சோம்புகின்றவன் கையில் காசில்லாமல் தவிப்பான். ஓயாது உழைப்பவர்களிடம் பணம் குவிகின்றது. வெயில் காலத்தில் பொருளைத் தேடி சேர்க்கும் பிள்ளை அறிவாளி. அறுவடை காலத்தில் படுத்துறங்கிக்

கொண்டிருப்பவனைப் பார்த்து அனைவரும் சிரிப்பார்கள்.
(நீதிவாக்யம் 10, 4—5.)

கோபம் :—

உறைமோர் வார்த்த பாலைக் கடைகையில் வெண்ணை வருவதைப் போலவும்

மூக்கைத் தேய்த்தால் அது காயமாகி குருதிவருவதைப் போலவும்

கோபத்தை வளரவிட்டால் அது சண்டையில்தான் போய் முடியும்.

(நீதிவாக்யம் 30, 33.)

நாக்கு : —

வாழ்வு, சாவு இரண்டுமே நாவில் அடங்கியிருக்கிறது.

அதைச் சரியாக உபயோகிப்பவனுக்கு அதற்குரிய பலன் உடனே கிடைக்கிறது.

தன் நாக்கை அடக்கி ஆள்பவன் தன் உயிரை விபத்துகளினின்று தப்புவிக்கின்றான்;

துஷ்ட மனிதன் கொடூரமாகப் பேசுகின்றான்.

வேசியின் செயல்கள் :—

இருட்டிவிட்ட அந்த நேரத்தில் ஒரு அப்பாவியான இளைஞனை நோக்கி ஒரு வேசிப்பெண் வந்து நின்றாள். அவனைக் காணும்போது அவள் மிகவும் பொல்லாதவள் போல் தோன்றினாள். அவள் மிகவும் பரபரப்பாய் சிறிதும் அமைதியற்று காணப்பட்டாள். தன் வீட்டில் தங்கப் பிடிக்காமல் சாலை ஓரங்களிலும், நாற்சந்திகளிலும் நின்றே பழகியவள் அவள். அவள் அந்த இளைஞனின் கையைப் பற்றி

முத்தமிட்டு நாணமின்றிப் பேசினாள். இன்றுதான் என் ஆசைகள் நிறைவேறின என்றாள்: உன்னைக் காணவே நான் வந்தேன் என்றாள்; தன் கணவன் வெளிநாடு சென்றிருப்பதாகவும் திரும்பிவர பல நாட்கள் ஆகும் என்று கூறி அவனை மயக்கி தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். உடனே அவன் கசாப்புக் கடைக்குச் செல்லும் மாட்டைப் போலவும், தண்டனைப் பெறப்போகும் கைதியைப் போலவும், அவள் பின்னே சென்றான். இறுதியில் அந்த இளைஞனின் மார்பு அம்பினால் பிளக்கப்போவது உறுதி. தன் உயிரையே அது உறிஞ்சப்போவதை உணராமல் கண்மூடித்தனமாய், வலையில் போய்விழும் அறிவற்ற பறவையைப் போன்றவனே அந்த இளைஞன்.

(நீதிவாக்யம் 7, 6—23.)

"தால்முத்"

'துஷ்டன்' :—

ஒரு மனிதன் மற்றவனை அடிக்காவிட்டாலும், அடிப்பதற்காக கையைத் தூக்கினாலே அவன் துஷ்டன் எனப்படுவான்.

"தயை" :—

எவனும் தானம் அளிக்கத் தவறக் கூடாது. பிறர் உதவியால் வாழும் மனிதனும்,—பிச்சையெடுத்துப் பிழைப்பவனும் தன்னையும் விட கீழான நிலையில் இருப்பவர்களுக்கு தன்னிடமிருப்பதை அளிக்க வேண்டும்.

ஏழை எளியோர்க்கு உதவு: பிழைப்பைத் தேடிக் கொள்ள உதவும் கருவிகளைக் கொடு.

(தா. பாபா காமா 112 அ.)

முக மலர்ச்சியோடு கொடு :—

ஏழைகளுக்கு தானம் அளிக்கும்போது இனிய வார்த்தைகளைக் கூறி கொடு. நீயளிக்கும் பொருளைவிட உன் இனிய சொல்லுக்கு உள்ள மதிப்பு அதிகம்.

(தா. ஸிக்கா, 49. பா.)

உன்னிடம் கடன்பட்டுள்ளவன் ஒருவன் மிகவும் கஷ்டமான நிலையிலிருப்பதனால் உன்னிடம் வாங்கிய பணத்தை அவனால் திருப்பித்தர இயலவில்லை என்று தெரிந்தால் அவனை அடிக்கடி போய் கேட்டுக்கொண்டிராதே.

(மிதராச், வெளியேற்றம், ரப்பா 31, 6.)

வாங்கிய கடனைத் திருப்பித்தராமலும் வேலைக்காரர்களின் வயிற்றில் அடித்துச் சேரும் பணத்தை தானம் செய்தல் பாவமாகும்.

(யாலகத் சிமேவோனி, ப. 947.)

கெட்ட நோக்கத்துடனோ, சொந்த லாபம் கருதியோ வசதிகள் பெறும் எண்ணத்துடனோ தானம் செய்தல் தவறாகும். (மிதராச். வெளியேற்றம், ரப்பா 31, 18.)

சிந்தனை :—

தூயவனாக இரு. புலன்களை அடக்கு. உனது காரியங்கள் தூயனவாக இருக்கட்டும். உன் சிந்தனைகளும் கருத்துகளுங்கூட அவ்வாறுதான் இருக்க வேண்டும். தீய எண்ணங்களைத் தடுக்காதபோது அவைகளின் விளைவுகள் தீய செயல்களைவிட மோசமாய் ஆகிவிடக் கூடும்.

(தா. யோமா, 29—அ.)

ஆண்டவனிடம் பிரேமை வை

பிரபுவுக்குப் பயந்து நட. அவ்வாறு நடக்கையில் தீமைகளெல்லாம் உன்னைவிட்டு ஓடிப்போகும். ஆனால் இது

மட்டும் போதாது. நீ பிரபுவிடம் பிரேமையும் பற்றும் கொள்ள வேண்டும்; தனது செயல்கள் அனைத்தையும் பிரபுவிடம் சமர்ப்பித்துவிடு. பிரபுவின் பணிக்கு, அதாவது மக்களின் தொண்டுக்கு தன்னையே அர்ப்பணித்துவிடு. தன்னை அடக்கு; புலன்களை அடக்கு. இதுவே, "சித்தும் ஹைக்சேம்" எனப்படுவது. யூதசமயத்தின் குறிக்கோள் ஆகும் இது.

"கடவுளுக்கு அஞ்சி வாழ்"

பிரபுவின் கட்டளைகள் அனைத்திலுமே, நம் எப்பவும் அவருக்கு அஞ்சி வாழவேண்டும் என்பது வற்புறுத்தப்பட்டிருக்கிறது. (நா. கித்தூசின், 32 ப.)

# "பார்ஸி சமயம்"

பார்ஸிக்கள் கி. பி. எட்டாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் இந்தியாவிற்கு வந்தவர்கள். அவர்கள் முதன் முதலாக மேற்குக் கடற்கரையில் உள்ள கம்பாத் வளைகுடாவின் தேவ் என்ற தீவில்தான். அங்கு அவர்கள் சிறிது காலம் தங்கியிருந்த பிறகு சஞ்சன் என்ற இடத்திற்குச் சென்றுர்கள். அது சமயம் அங்கு ஆட்சி செய்து வந்த ஜதிராணு என்ற இந்து அரசனின் ராஜ்யத்தில் தங்கினுர்கள். அவர்களின் அரசன் சமூகத்தில் தங்களைப் பற்றியும் தமது கொள்கைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவனவற்றையும் கீழ் கண்டவாறு தெரிவித்துக் கொண்டார்கள்.

1. நாங்கள் பிரபு ஹோர் மஜ்தாவையும் சூரியனையும் பஞ்ச பூதங்களையும் வழிபடுகின்றவர்கள்.

2. நாங்கள் நீராடும் போது தெய்வத்தை துதிப் போம்: தீயில் வழிபாடு (ஆகுதி) செய்வோம். மௌனமாக இருந்து உணவு உட்கொள்வோம்.

3. நாங்கள் எங்கள் சமயச் சடங்குகளிலும் திருவிழாக் களிலும் தூபம், தீபம், சந்தனம், மலர்கள், ஆகியனவற்றை அதிகமாகப் பயன் படுத்துவோம்.

4. நாங்கள் பசுவை தெய்வமாக வழிபடுகின்றோம்.

5. நாங்கள் தூய ஆடையையே உடுத்துவோம். அரையில் கச்சையும், மேலே அங்கியும், தலையில் தொப்பியும் அணிகின்றோம்.

6. திருமணத்தின் போது நாங்கள் ஆடிப்பாடி மகிழ்கின்றோம். பல்வேறு இசைக் கருவிகளை முழக்கி விழாக் கொண்டாடுகின்றோம்.

7. எங்கள் வீட்டுப் பெண்களுக்கு நாங்கள் பலவகையான அணிகளை அணிவிக்கின்றோம். அவர்களுக்கு உடலில் பூசிக் கொள்ள சந்தனமும், பிற வாசனைப் பொருட்களும் அளிக்கின்றோம்.

8. ஏழை எளியோர்க்கு வரையாது பொன்னும் பொருளும் கொடுப்பதை நாங்கள் சமயக் கடமையாகக் கருதுகின்றோம். குளம் வெட்டியும் கிணறு தோண்டியும் மக்களுக்கு தண்ணீர் கிடைக்க வசதி செய்து தருதல் தர்மங்களில் சிறந்ததாக நாங்கள் கருதுகின்றோம்.

9. ஆடவர் பெண்கள் அனைவரிடமும் அன்பும் ஆதரவும் காட்டுவதை நாங்கள் கடமையென்று மதிக்கின்றோம்.

10. பசுவின் மூத்திரத்தை நாங்கள் புனிதமானதாகக் கருதுவதால் சுத்தம் செய்யும் காரியங்களுக்கு அவற்றைப் பயன் படுத்துகின்றோம்.

11. எங்கள் குடும்பப் பெண்கள் கருவுற்றிருக்கையிலும் அதையடுத்த காலத்திலும் அவர்களை மிகுந்த அக்கறையுடனும் புலனடக்கத்தோடு வாழ வகை செய்கின்றோம்.

12- நாங்கள் தினமும் ஐந்து முறை இறை வழிபாடு செய்கின்றோம்.

13. நாங்கள் ஆண்டுதோறும் எமது முன்னோர்களின் காலம் சென்ற ஆத்மாக்களுக்கு திதி கொடுக்கின்றோம்.

14. வேள்வி நடத்தும்போது, தூப தீபங்களை நாங்கள் காண்பிக்கின்றோம்.

15. நாங்கள் பிரார்த்தனை செய்யும்போதும் உணவு உட்கொள்ளும் போதும் புனிதமான இடையணி (அரை ஞாண்) பூணும் வழக்கம் உடையோம்.

16. கணவனும் மனைவியும் நன்னடத்தையினின்று சிறிதும் வழுவாது புனிதமான வாழ்க்கை வாழ்வதில் நாங்கள் மிகுந்த அக்கறை காட்டுகின்றோம்.

பார்சிக்களின் கடவுளான ஹோர்மஜ்த் நற்செயல்களைக் கண்டு மகிழ்கின்றார் என்பதே பார்சி சமயத்தின் அடிப்படை.

கிருஸ்துவுக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன் ஈரானின் கிழைப் பகுதியிலும் காஸ்பியன் கடலுக்கு மேற்குப் பகுதியிலும் 'மாடியா' என்ற சாதியினர் வசித்து வந்தனர். அதே ஜாதிப் பிரிவில் மகீ கோத்திரத்தில் புரோகிதர்களின் வம்சத்தில் ஜரதுஸ்த்ரர் அவதரித்தார்;

இவரது வம்சத்தின் பெயர் ஸ்பிதமா என்பது. ஸ்பிதமா என்பதற்கு 'ஒளி மயமானது' என்று பொருள். இவரது தந்தையின் பெயர் பௌரு சாஸ்ப ஆகும். இவருக்கு 'ஜரதுஸ்த்ர ஸ்பிதமா' என்ற பெயர் சூட்டப்பட்டது. வேறு சிலர் ஜோரோஸ்தர் என்றும் 'ஜரதூசி' என்றும் பலவாறு குறிப்பிட்டுள்ளனர். ஜரதுஸ்த்ரர் பிறந்த ஊர், பிறந்த ஆண்டு என்ற இரண்டைப் பற்றியுமே அறிஞர்களிடையே பலத்த கருத்து வேற்றுமை நிலவுகின்றது. இவரது வாழ்வின் முதல் முப்பது ஆண்டுகளைப் பற்றிய விபரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

ஜரதுஸ்த்தருக்கு இருபது வயதாகும் சமயம், அவர் துரோண பர்வதத்தில் அமர்ந்து தியானம் புரிந்து கொண்டிருக்கையில், ஈசுவரன் அவர் முன் தோன்றினர் என்று கூறுகின்றார்கள். உடனே அவர் வாயிலிருந்து கடல் மடை

திறந்தது போல் 'காதா' வெளிப்பட்டதாம். 'காதா' என்ற இவர்களின் நூலில் ஜரதுஸ்த்ரப் பிரபுவின் புனிதக் கருத்துக்கள் அடங்கியுள்ளன. இவர் தான் கண்ட சத்தியத்தை எல்லோரிடையிலும் பரப்ப ஆவல் கொண்டிருந்தார். சுமார் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு இவர் இருப்பதை யாரும் கவனிக்கவேயில்லை. இவரின் உபதேசங்களை யாரும் காது கொடுத்து கேட்கவும் இல்லை. ஆனால் இவர் ஈரானின் கிழக்குப் பகுதியில் உள்ள பாகதீரியா இராஜ்யத்தின் அரசனான வீச்தாஸ்பின் அவையில் சென்று தம் செய்தியை தெரிவித்ததும் அரசனின் மனம் மாறிவிட்டது.

சத்யத்தைப் பற்றி இவர் கூறிய கருத்துக்கள் அரசனின் மனதை மிகவும் கவர்ந்து விட்டது.

அந்த அரசன் மிகுந்த உற்சாகத்துடன் தன் நாட்டிலும் வெளி நாடுகளிலும் பரப்புவதற்கு தன்னால் இயன்ற முயற்சிகளையெல்லாம் செய்தான்.

ஜரதுஸ்த்ர பிரபு தமது எழுபத்தேழாவது வயதில் பலக் என்ற இடத்தில் உள்ள கோயிலில் பிரார்த்தனை மேடையில் அமர்ந்து வழிபாடு செய்து கொண்டிருக்கையில் இவரது விரோதிகள் வந்து இவரைத் தாக்கினார்கள். எப்படியேனும் இவரது உயிரைக் கவருவதில் அவர்கள் ஆர்வம் கொண்டிருந்தார்கள். இவரும் பெரு மகிழ்ச்சியோடு அவர்களைச் சிறிதும் எதிர்க்காமல் "நான் உங்களை மன்னிப்பது போலவே ஹோர்மஜ்தும் மன்னிப்பாராக" என்று கூறிய படியே அவர்களின் வாளுக்குப் பலியானார்.

வைதீக தர்மத்தைப் போலவே பார்ஸிகளின் சமயத்திலும் அக்னியின் வழிபாடும் வேள்வி நடத்துதலும் உண்டு, இது அவர்கள் சமயத்தின் முக்யப் பகுதியாகும், அவர்கள் இல்லங்களில் அல்லும் பகலும் அக்னி தொடர்ந்து எரிந்து கொண்டிருக்கும்.

அக்னியை வழிபடுவதைக் காணும் போது வேத கால ரிஷிகளும் இந்த பார்ஸி இன மக்களும் ஒரே ஆரியர்களின் வழி வந்தவர்கள். ஒரே கிளையில் பூத்த இரு மலர்கள் என்று எண்ணத் தோன்றுகின்றது. இவ்விருவரும் முதலில் தோன்றிய இடம், எது என்பதில் அறிஞர்களிடம் கருத்து வேறுபாடு இருந்து வருகிறது. ஆனாலும் ஆரியர்களும், பார்சிகளும் முதலில் ஒன்றாக இருந்து பிறகு பிரிந்தவர்கள் என்பதை அனைவரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். முதலில் சேர்ந்தே இருந்த இவர்கள் பிறகு வெவ்வேறு திசைகளில் பிரிந்து சென்றிருக்கின்றார்கள்.

"பார்சி மக்களின் பழக்கங்கள்:—"

இச்சமயத்தைச் சேர்ந்த பெண்களும் வேள்வியில் தலைமை தாங்கி சமயச் சடங்குகளைச் செய்யும் உரிமை இருந்திருக்கிறது. இந்துக்களைப் போலவே பார்சிகளும் தம் பிள்ளைகளுக்கு பூணூல் அணிவிக்கும் சடங்குகளைச் செய்கின்றனர். அவர்களும் நீர், காற்று போன்ற பூதங்களை தெய்வ அம்சம் பொருந்தியவை எனக் கருதுவதால் அவற்றை மாசு படுத்துவது பாவம் என்று கருதுகின்றனர்.

இம்மதத்தைச் சேர்ந்தவர்கள் சவத்தை புதைப்பதோ, எரிப்பதோ கிடையாது. அவ்வாறு செய்வதால் பூமியும் தீயும் அசுத்தமாகும் எனக் கருதுகின்றனர். அதனால் சவத்தை, அதற்கென உள்ள உயர்ந்த தனி இடத்தில் கொண்டு போய் வைத்து காகம், கழுது முதலிய பறவைகள் தின்று பசியாறுமாறு செய்கின்றனர்.

பார்ஸி சமயத்தில் கடவுள் ஒருவரே என்ற கொள்கை வலியுறுத்தப் படுகிறது. இச்சமயத்தை நிறுவிய ஜரதுஸ்தரர் என்ற மகான், கடவுளை 'ஹோர் மஜ்த்' என்ற பெயரால் அழைத்தார். 'ஹோர் மஜ்த்' என்பவர் உயிருள்ள, உயிரற்ற ஜடம், சேதனம் என்ற இரண்டும் சேர்ந்து

அமைந்த உலகைப் படைத்தும் காத்தும் நடத்துபவர். இந்தக் கடவுள் ஒருவரே. அவருக்கு ஆதியுமில்லை; அந்தமுமில்லை; அவர் புனிதமானவர். நேர்மையே உருவானவர்; ஒளி மயமானவர். அனைவருக்கும் அவரே தலைவர்; எஜமானர். அவரது புனிதமான திருநாமம்'' 'அஹூ வயிர்யோ' என்பதாகும். அவர் 'அஷம் வோஹூ'' என்றும் அழைக்கப்படுகின்றார். இதுபோல ஆண்டவனுக்கு இன்னும் பல்வேறு பெயர்களும் உண்டு என்று பார்சி மக்கள் எண்ணுகின்றனர்.

"நல்லதையே நினை; நல்ல சொற்களையே பேசு; நற்செயல்கள் செய்—'' என்ற இதுவே பார்சி சமயத்தின் குறிக்கோள் ஆகும். பார்சி சமயம் என்ற மரத்திற்கு மிகவும் பருத்த அடித்தண்டும் அதிலிருந்து வெளிவரும் இரு பெரும் கிளைகளும் அவற்றிலிருந்து பிரியும் மூன்று சிறு கிளைகளும், அவற்றிலிருந்து பிரிந்து செல்லும் நான்கு சிறு கொப்புக்களும், அதன் கீழே ஓடும் ஐந்து வேர்களும் உண்டு.

1. அடித்தண்டு: மூல சாதனை.

2. பெரும் கிளைகள்:—கிரியையும்-புலனடக்கமும்

3. சாதாரணக் கிளைகள்:—நல் எண்ணம்; நல் பேச்சு; நற்செயல்.

4. சிறு கிளைகள்: கர்மத்தை ஒட்டி அமையப் பெற்ற பிராம்ண; க்ஷத்ரிய, வைசிய, சூத்திர என்ற நான்கு ஜாதிகள்.

5. வேர்கள்:—

| | |
|---|---|
| மானபதம்: | வீட்டின் தலைவன். |
| வீஸ்பதம்: | கிராமத்தலைவன். |
| ஜந்தபதம்: | சாதித் தலைவன். |
| தேஹபதம்: | பிரதேசத் தலைவன். |
| ஜரதுஸ்த்ரோதம்: | எல்லோருக்குமே பெரிய புரோகிதன். |

இவர்கள் அனைவருக்கும் மேலே, அரசர்களுக்கும் அரசனாய், அகில உலகிற்கும் அதிபதியாய் உள்ளவனே ஆண்டவன்.

மனிதனின் கடமைகள் பற்றி:—

பார்சி சமயத்தில் மனிதன் சதா சர்வ காலமும் நல்ல காரியங்களைச் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது.

எல்லோரிடமும் அன்பாய் இருந்து கொண்டு, எல்லோருக்கும் பணிபுரிவதுமாய்

கடவுளைத் தொழுது வழிபடுவதும்

தெய்வங்களையும் மகான்களையும் மதித்துப் போற்றுவதும்,

எல்லா நற்பணிகளுக்கும் உதவுவதும் அவைகளில் கலந்து கொள்ளுவதும்,

எல்லா நல்ல பிராணிகளையும் பாதுகாத்து பராமரித்து அவைகளிடம் கருணை காட்டுதலும்,

இல்லாதவர்களுக்கு தானம் அளிப்பதும், அனைத்து உயிர்களிடமும் அருளைப் பொழிவதும்,

நீதி வழியில் நடத்தலும், உடலால் உழைத்தலும், தன் காலை ஊன்றி நிற்றலும்,

தீயதைக் கண்டு விலகுதலும், தீயவற்றை ஒழித்தலும்,

ஆண்டவனை நம்பி எப்போதும் நல்லவற்றை ஆதரித்து வருவதும் மனிதனின் கடமைகளாக இம்மதத்தில் வற்புறுத்தப்பட்டுள்ளது.

ஆண்டவனின் ஏழு அங்கங்கள்:—

அன்பு, தூய்மை, சக்தி, பணிவு, முழுமை, அமரத்துவம், தெய்வபக்தி ஆகிய ஏழு குணங்களும் தெய்வீக குணங்களாகக் கருதப்படுகின்றது.

அவெஸ்தா:—பார்சிகளின் தர்ம கிருந்தம் அல்லது முக்யமான சமய நூல் "அவெஸ்தா" ஆகும். மூல நூலில் இருபது லெட்சம் வரிகள் இருந்தது என்றும் அவைகளில் பெரும்பகுதி மறைந்து போயிற்று என்றும் கூறுகின்றனர். அவெஸ்தாவில் ஹோர் மஜ்தையும், அக்னியையும், பிற தெய்வங்களேயும் பூஜித்து வழிபாடு செய்வதற்கு உள்ள மந்திரங்களும் விதி முறைகளும் அடங்கியிருக்கின்றன.

பஹேர்வி மொழியிலும் பார்சி மதத்தின் நூல்கள் பல உள்ளன. ஐந்தாம் நூற்ருண்டில் இந்த மொழி புகழின் உச்ச கட்டத்தில் இருந்து வந்தது. இச்சமயத்தின் சாரங்கள் அவெஸ்தாவிலும், பஹேல்வியிலும், காதாவிலும் கீழ் கண்ட கொள்கைகள் வலியுறுத்தப்படுகின்றது.

1. அனைவருக்கும் மேலே, அனைத்திருக்கும் மேலே இருப்பவர் ஈசுவரன். அவரது ஆட்சியே அனைத்திலும் உயர்ந்த ஆட்சி. இந்தப் படைப்பு முழுவதையும் இதில் உள்ள நல்லன அனைத்தையும் அவரே அமைத்திருக்கின்ருர். ஹோர் மஜ்த் என்பது அவரது திருநாமம் ஆகும்.

2. நமக்கு உயிரையும் ஒளியையும் அளித்தவர் ஹோர் மஜ்த்; சத்யம் அவர்; அவர் சத்திய சொரூபீ.

3. சாவையும் இருளேயும் அளிப்பது அக்ராமைன்யூ அல்லது அஹிரமன். தீயவற்றின் பிரதிநிதியால் சின்னமாய் இருப்பது அது.

4. அகில உலகமும் நல்லது தீது என்று இரண்டாகப் பிரிந்துள்ளது. நல்லதை செய்ய நினைப்போர ஹோர் மஜ்தை நாடிச் செல்லவும், அசத்தின் வழிச் செல்வோர் அஹிரமனை நோக்கிச் செல்லுகின்ருர்கள்.

5. மனிதன் தன் விருப்பம் போல் எந்த வழியையும பின்பற்றலாம். அவன் நல் நிலையை அடைவதும் அடை

யாததும் அவன் கையிலேயே உள்ளது. அவன் தீய வழியில் சென்று துன்பமடைந்த பின் தன் தவற்றை உணர்ந்து நல் வழிக்குத் திரும்பி வரலாம். இவ்வாறு செய்தால் கடைத் தேறலாம்.

6. நல்லதின் புறச் சின்னம் அக்னி.

7. நல்லனவற்றையே எண்ணி, நல்லதையே பேசி, நற்காரியங்களையே செய்து கொண்டிருந்தால் மனிதனுக்கு எல்லாமே நல்லதாகவே நடக்கும்.

"பஹெலவி"

பார்சி சமயத்தின் உபதேசங்கள் பஹெல்வி மொழியிலும் பரந்து காணப்படுகின்றது. அதில் மனிதனின் கடமைகள் கீழ்கண்டவாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

1. எவரையும் நிந்திக்காதே.
2. பேராசையும் பெரு விருப்பும் கொள்ளாதே.
3. எவர்மீதும் கோபம் கொள்ளாதே.
4. எத்தகைய கவலைகளுக்கும் இடமளிக்காதே.
5. சுக போகங்களில் ஈடுபடாதே.
6. பிறரிடம் பொறாமை கொள்ளாதே.
7. சோம்பலுக்கு இடம் கொடுத்துவிடாதே.
8. சுறுசுறுப்பாகவே இருந்துவர பழக்கப்படுத்திக் கொள்.
9. பிறர் பொருளை பறிக்கவோ, விழுங்கவோ செய்யாதே.
10. பிறர் மனைவியை அடைய ஆசைப்படாதே.

(தீனுயீ மைனோகீ கிரத் 20 3—7.)

பகைவனையும் நண்பனாக்கிக் கொள்ளுதல் அவசியம்:—

" 1. பகைவனையும் நண்பனாக்கிக் கொள்ளுதலையும்,

2. துஷ்டனை நல்லவனுக்குதலையும் 3. படிக்காதவனை கல்விமானுக்குதலையும் பார்சி மதம் வற்புறுத்துகின்றது.

(சயஸ்த லா சயஸ்த, 20—6.)

பாவம் செய்துவிட்டால் திறந்த மனதோடு அது குறித்து வருந்து. மீண்டும் அத்தகைய பாவம் செய்வதில்லை என்று உறுதி பூணு. செய்த பாவந்தை அறிவித்துவிடு. அதை மூடி மறைத்தல் நல்லதில்லை.

(சயஸ்த லா சயஸ்த 8, 8—9.)

"நடந்தவை நடந்தவைகளாகவே இருக்கட்டும்"

நடந்துவிட்டவைகளை நினைத்துக் கொண்டேயிருக்காதே. இன்னும் நிகழாமல், இனி எப்போதோ நிகழ இருப்பது குறித்தும் வீணில் அலட்டிக்கொள்ளாதே. இன்பம் வருங்கால் நிதானம் தவருதே. துன்பம் நேருகையில் மனம் தளராதே. மேடும் பள்ளமும் நன்மையும் தீமையும் இலாபமும் நஷ்டமும் ஏற்படுவது சர்வ சாதாரணம்.

(பஹெல்வீ மந்திரங்கள்.)

உன் கைகள் பிறர் பொருளை திருடாமல் இருக்கட்டும். உன் கால்களை தவருன பாதையில் செல்லாமல் தடு. உன் மனதில் கெட்ட எண்ணங்கள் புகாமல் பார்த்துக்கொள்.

நல்ல காரியங்கள் செய்பவனுக்கு நற்பயனும், தீயனவற்றை செய்பவனுக்கு அதற்கான தண்டனையும் கிடைக்கும்.

தன் பகைவனுக்காக ஒருவன் குழி தோண்டினுல் அதில் அவனே விழுந்து மடிவான்.

ஒரு மனிதன் கோபம் கொண்டால், அவனிடமிருந்து அன்பும் நல்லெண்ணங்களும் விலகிப் போய்விடும். ஒருவனிடம் 'வஹ்மன்' தொடர்ந்து இருக்குமேயானுல் ,கோபம் அவனிடம் அணுகாது.

"கள் குடித்தல்"

ஒருவன் கள்—சாராயம் குடிக்கின்ருன். குடிக்கவில்லை என்பதிலிருந்து அவன் நல்லவன் அல்லது கெட்டவன் என்பது தெளிவாகிவிடும். குடிகாரனின் அறிவு கெட்டுப் போகிறது, உடலில் இரத்தம் குன்றிப் போகின்றது. அவனிடம் பல நோய்கள் உருவாகின்றது. அவன் கண்கள் மங்கிப்போகின்றன. அவன் காதுகள் செவிடாகின்றது. அவனுல் சரியாகப் பேச முடிவதில்லை; அவனுக்கு உணவு ருசிப்பதில்லை. அவன் சோம்பேறியாகி வேலை எதுவும் செய்யாது படுத்துக் கிடக்கின்ருன். அவனுக்கு இரவில் நல்ல உறக்கம் கிடையாது. காலையில் எழும்போது அவனுக்கு எல்லாமே குழப்பமாக இருக்கிறது. அவன் தன் உடலைக் கெடுத்துக்கொள்கின்ருன். தன் குழந்தைகளுக்கும் உறவினர்களுக்கும் அவன் தொந்தரவு அளிக்கின்ருன்' அவன் தான் துன்பப்படும்போது பிறருக்கும் துன்பமளிக்கின்ருன்.

தீய நடத்தையுள்ள மனிதன் ஒருவன் குடிவெறியில் இருக்கையில் தனக்கு நிகர் எவரும் இல்லை என்ற எண்ணத்தில் தன் உடன் இருப்பவர்களிடம் சண்டைப் பிடிக்கின்ருன். வாயில் வந்ததையெல்லாம் உளறுகின்ருன். யோக்கியர்களுடன் அவன் ஒத்துப் போவதில்லை; தன் மனைவி, குழந்தைகள், பணியாட்கள் எல்லோருடனும் அவனுக்குத் தகராறுதான். எல்லோரையும் பகைத்துக்கொள்வதினுல், அவனுக்கும் நிம்மதியின்றி தடுமாறுகின்ருன்.

(தீனுயிமைனேகி கிரத் 15 10–18.)

''பத்திரமான முதல்''

நிலத்தை உழுது பயிரிடும் நற்பணியைச் செய். புவியை உழுது உணவு தானியங்கள் விளைவிப்பதினுல்தான் எல்லா மனிதர்களும் உயிர் வாழவும், பெருகவும் முடிகிறது.

உன்னிடம் செல்வமிருந்தால் நீ அதற்கு நல்ல நீர்ப் பாசனமுள்ள, விவசாயத்திற்கு பயன்படத்தக்க நிலங்களை வாங்கு. நீ அதில் முடக்கும் பணத்தின் வட்டிக்குப்போதிய விளைச்சல் இல்லாவிட்டாலும் முதல் பத்திரமாக இருக்கு மல்லவா? (பஹெல்வீ மந்திரங்கள்.)

"புலால் உண்ணாதே"

பசுவின் இறைச்சியை உண்ணாதே. உன் வீட்டில் வளரும் பிராணிகளின் புலாலையும் உண்ணக் கூடாது. அவ்வாறு உண்டாய் நீ பயத்தில் சிக்கிக் கொள்வாய். உன் கைகளை மட்டுமல்லாமல் உன் மனதையும் வாக்கையும் பாவம் வந்து பற்றிக் கொள்ளும். நீ ஒரு வாய் புலால் புசித் தாலும் உன் கையில் பாவம் வந்து ஒட்டிக்கொள்ளும்; எவனோ எங்கேயோ ஒரு ஒட்டகத்தைக் கொன்றான்; அதன் இறைச்சி உனக்குக் கிடைத்தது நீ அதைத் தின்றால் என்றா லும் அந்த ஒட்டகத்தைக் கொன்ற பாவம் உன்னை வந்து சேரும். (பஹெல்வீ மந்திரங்கள்.)

நீ எந்தக் காலத்திலும் பெரு வயிறு படைத்தவனாக மாறாதே.

உன் எதிரில் படைக்கப்பட்டவைகளையெல்லாம் அவசர அவசரமாக வயிற்றிலிட்டு நிரப்பாதே. உணவை அள வாகக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால்தான் நீண்ட நாள் வாழ்ந்திருக்க முடியும். நாவை அடக்கிப் பேசு வது ஆன்மாவுக்கு நல்லதாய் இருப்பதைப்போல, அளவாக உணவு கொள்ளுதல் உடலுக்கு நல்லது.

பிறர் மனைவியை ஏமாற்றி கவர்ந்து செல்ல முயற்சிகளை மேற்கொள்ளாதே. அவர்களைப் பாவப் பாதையில் இட்டுச் செல்லாதே. இந்தப் பாவம் உன் ஆன்மாவை கொடிய நரகத்திற்கு அழைத்துச் சென்றுவிடும். நீ பாவத்திலிருந்து எப்பவும் விலகியிருந்தால் உனக்கு என்றும் எத்தகைய பாவ

மும் ஏற்படாது. பிறரை தண்டிக்கத் துடிக்காதே. கோபத்திலும், பழி வாங்கும் எண்ணத்திலும் உன் ஆன்மாவுக்கு அழிவைத் தேடிக் கொள்ளாதே. சேர்த்து வைப்பதில் உனக்கு ஆர்வமிருந்தால் நல்ல பல காரியங்களைச் செய்து அதனல் பெறப்படும் புண்ணியத்தை சேர்த்துவா. வேறு எதுவும் நல்ல சேமிப்பாகக் கொள்ள முடியாது. அக்னி, பசு, நீர் ஆகியவற்றையும் வீட்டில் வளர்க்கப்படும் நாய் முதலிய பிராணிகளையும் கவனித்து அக்கறையோடு பாதுகாத்து வா. இவைகளுக்கு தீங்கிழைப்பவனுக்கு சொர்க்கத்தில் புக அனுமதி கிடைக்காது. மனம், வாக்கு, காயம் ஆகியவற்றினல் உனக்கே தெரியாமல் நிகழ்ந்து விட்ட பாவங்களுக்காக கழிவிரக்கம் கொள்; நடந்து விட்டது குறித்து நான் வருந்துகின்றேன்; நான் எண்ணத் தக்கதை எண்ணவில்லை: சொல்ல வேண்டியதை சொல்லத் தவறிவிட்டேன்; செய்ய வேண்டியதைச் செய்தேனில்லை! என்று எதையும் ஒளியாது கூறி வருத்தம் தெரிவி. நான் என் சகோதரர்களுக்கு ஏதேனும் தீங்கிழைத்திருந்தாலும், அவர்கள் எனக்கு தீங்கிழைத்திருந்தாலும், ஏ கடவுளே, நீங்கள் என்னை மன்னியுங்கள்.''

(பஹெல்வீ மந்திரங்கள்)

"நான் யார்?"

பண்டைய சாதுக்களும், மகாத்மாக்களும், ஒருவனுக்கு பதினைந்து வயதாகிவிட்டதென்றல், அவனுக்கு அல்லது அவளுக்கு பின்வரும் கேள்விகளுக்கு விடை தெரிந்திருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கின்றனர்.

*நான் யார்?*

*நான் யாரைச் சேர்ந்தவன்?*

*இவ்வுலகில் எனக்குள்ள கடமை யாது?*

*நான் 'ஹோர் மஜ்தை'ச் சேர்ந்தவனு, 'அஹிரமனைச் சேர்ந்தவனு?*

நான் வழிபடுவது சத்தையா—அசத்தையா?

நான் மனிதனா, இராட்சதனா?

எனது தருமம் யாது?

எதைச் செய்வதில் எனக்கு லாபம் உண்டு?

எதனால் எனக்கு நஷ்டம் ஏற்படும்?

என் நண்பன் யார்? பகைவன் யார்?

ஒளி எதிலிருந்து வருகிறது? இருள் வருவது எதிலிருந்து?

தயை பிறப்பது எதனால்? கொடுமை நிகழ்வது எதனால்?

அதற்கு விடைகள் பின்வருமாறு அமைய வேண்டும்:—

நான் 'ஹோர் மஜ்தை' சேர்ந்தவன். அஹிராமனுக்கும் எனக்கும் நெருக்கம் இல்லை.

நான் தேவதைகளைச் சேர்ந்தவனே தவிர, இராட்சதர்களை சேர்த்தவனில்லை;

'ஹோர் மஷ்த்' என் தந்தை. 'ஸ்பந்தர் மதே' புவி என் தாய்.

நான் என் கடமைகளினின்று வழுவாது நடந்துகொள்வேன். அதாவது 'ஹோர் மஜ்தை' நம்புவேன். அவரது ஆட்சி என்றும் நிலைத்திருப்பதை விழைவேன். எனது தருமத்தில் முழு நம்பிக்கையுடன் அதைக் கடைப்பிடித்து வருதலே என் கடமை.

இலாபத்திற்கும் நஷ்டத்திற்கும் புண்ணியத்திற்கும் பாவத்திற்கும் ஒளிக்கும் இருளுக்கும் ஹோர் மஜ்தை வழிபடுவதற்கும் அஹிராமனை வணங்குவதற்குமுள்ள வேற்றுமையை உணர்ந்துகொள்ளும் பகுத்தறிவு எனக்கு இருக்க வேண்டும். நான் குடும்பம் அமைத்து நாணயமாக உழைத்து வம்ச விருத்தி செய்து கொண்டு வாழவேண்டும்.

நான் நிலத்தை உழவும் விவசாயம் செய்யவும் வேண்டும், நான் எல்லாப் பிராணிகளிடமும் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டும். என் வருவாயில் மூன்றில் ஒரு பகுதியை நற்காரியங்களில் செலவிடவும் நல்லோரிடம் சேர்ந்து வாழவும் வேண்டும். என் நிலத்தில் மூன்றில் ஒரு பகுதியை உழுது பயிரிடவும் எஞ்சிய ஒரு பகுதியை மட்டும் உணவு உட்கொள்வதிலும் பிற இன்பங்களிலும் செலவிட வும் வேண்டும். நல்ல காரியங்கள் செய்தால் நன்மையுண்டு என்ற விஷயத்தில் எனக்கு ஐயப்பாடே கூடாது. தர்ம மார்க்கம் ஒன்றேதான் உள்ளது. ஹோர் மஜ்தின் மார்க் கமேதான் அது. அதை விளக்கினால் மனோவாக்கு காயங் களினால் நல்லனவற்றையே எண்ணி நல்லனவற்றையே பேசி நற்செயல்களையே புரிதல் வேண்டும்.

'ஹோர் மஜ்த்' என் நண்பரும், 'அஹிராமன்' என் பகையும் ஆவார். ஹோர் மஜத்தே ஒளி. அஹிராமன் இரு ளாகும். ஹோர் மஜ்தின் அருளினால் நமக்கு பிற உயிர்களி டம் தயை பிறக்கிறது. அஹிராமன் நம் உள்ளத்தை கல் லாக்கிவிடுகிறது. ஹோர் மஜ்தின் வழியில் செல்வது எனக்கு நன்மையாயிருக்க நாம் தீமை வழியில் செல்லத் தேவையில்லை.

(பஹ்லவீ மந்திரங்கள்)



